ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:



# இராமபாணம்

(முதல் தொகுதி)

நூலாசிரியர்

" ஆழ்வார் திருவடிப்பொடி "

சே. பத்மநாபன், B.A; (Eng.)

---

பதிப்பாசிரியர் & கிடைக்குமிடம் :

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்

[ஸுதர்சனர்]

ஆசிரியர் : ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

5, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

---

ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்படுகிறது.



---


விலை ரூ. 20-00] 2002 [தபால் கூலி தனி

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# இராமபாணம்

(முதல் தொகுதி)

நூலாசிரியர்

"ஆழ்வார் திருவடிப்பொடி"

சே.பத்மநாபன், B.A., (Eng.)

---


பதிப்பாசிரியர் & கிடைக்குமிடம்

**S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,** *அட்வகேட்*

**ஸுதர்சனர்**

**ஆசிரியர் : ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்**

*5, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 620 017.*


---

ஸ்ரீ.ரா.ஸ்ரீ.கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம
சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்படுகிறது.



---


**விலை ரூ. 20.00** **தபாற்கூலி தனி**

**2002**

ஸ்ரீநிவாஸம்பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 17.

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முகவுரை

## ஸ்ரீ. S.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்

## ஸுதர்சனர்

நம் தமிழ்நாட்டில் பொது ஜனப் பத்திரிகைகள், வானொலி, தொலைக்காட்சி போன்ற மக்கள் தொடர்பு சாதனங்களில் வைணவ விரோதப் போக்குடையவர்களே நிர்வாகிகளாய் இருக்கின்றனர். அவற்றில் சைவ மதக் கருத்துக்களையும், 'எம்மதமும் சம்மதம்' என்னும் சமரச மதக்கருத்துக்களையும் தழுவிய பல பிரமுகர்கள் வைணவத்தை இழித்தும் பழித்தும் பேசும் பல கட்டுரைகளும் பேச்சுக்களும், பிரசாரம் செய்யப்படுகின்றன. பிரபல எழுத்தாளர்களின் நாவல்களிலும் இந்நிலையே காணப்படுகிறது. திரைப் படங்களிலும் விஷ்ணு வைஷ்ணவ த்வேஷ விஷத்தைக் கக்கும் ஸ்தல புராணங்களைப் புகுத்தி வேத முதல்வனை விஷ்ணுவை இழிவுபடுத்துகின்றனர். குலசேகர ஆழ்வாரையே சைவராகச் சித்திரித்த 'சேரமான் காதலி' என்னும் நாவல் கண்ணதாசனால் 'கல்கி'யிலேயே எழுதப்பட்டு, அதற்கு சாகித்ய அகாடமி விருதும் வழங்கப்பட்டது.

இவற்றையெல்லாம் நாம் பல வருடங்களாகக் கண்டித்து ஸுதர்சனர் பதிலின் மூலம் போராடியதன் பயனாக ஓரளவுக்கு இவை குறைந்தன. ஆயினும் தினமலர்,

குமுதம் பக்தி ஸ்பெஷல், ஞான பூமி போன்ற பல பத்திரிகைகளில் விஷ்ணு தூஷணங்களும், வைணவத்தைத் திரித்து எழுதுவதும் தொடர்ந்து வருகின்றன. மற்றும் பல புல்லுருவி ஆன்மீகப் பத்திரிகைகள் ஆங்காங்கு காளான் போலே முளைத்து விட்டன. அவற்றையெல்லாம் நாம் பார்க்க நேர்வதில்லை. ஆகையால், அவற்றிலுள்ள த்வேஷ ப்ரசாரங்களுக்கு மறுப்புரைத்து 'இராம பாணம்' என்னும் தலைப்பில் நம்முடைய நண்பர் ஸ்ரீ.சே. பத்மநாபன் (இரும்பா நாடு போஸ்ட், ஏம்பல் வழி, புதுக்கோட்டை மாவட்டம் 622 204.) அவர்கள் எழுதும் கட்டுரைகள் ஸுதர்சனத்தில் தொடர்ந்து வெளியிடப்பட்டு, அதன் முதல் தொகுதி இப்போது நூலாக வெளியிடப்படுகிறது. இந்நூலில் ஆங்காங்கு நம்முடைய குறிப்புகளும் உள்ளன. இதை வைணவ அன்பர்கள் பெற்றுப் படித்து, மற்ற வைணவர்களுக்கும் பிரசாரம் செய்து, அவர்கள் வழிதவறிப் போகாமல் தடுக்க வேண்டியது, ஒவ்வொரு வைணவரின் கடமையாகும்.

*சித்ரபானு*
*ஆனி-ஸ்வாதி*
*(21.06.2002)*

**இங்ஙனம்,**
**ஸ்ரீ.S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்**
**ஸுதர்சனர்.**

# இந்நூலில் விமர்சிக்கப்பட்டுள்ள பத்திரிகைகள் முதலியவை

| வரிசை எண். | பத்திரிகைகளும், பக்கங்களும் | |
|---|---|---|
| 1. | ஞான பூமி | - 3, 13, 25, 101 |
| 2. | குமுதம் பக்தி ஸ்பெஷல் | - 6, 7, 11, 14, 18, 55 |
| 3. | ஆன்மீகம் | - 9,15,52,72,75,84 |
| 4. | ஞானமணி | - 10, 12, 37 |
| 5. | அம்மன் தரிசனம் | - 11, 17, 41 |
| 6. | தினபூமி - ஆன்மீக பூமி | - 20, 23, 38 |
| 7. | தூர்தர்ஷன் (தொலைக்காட்சி) | - 26 |
| 8. | காமகோடி | - 29, 33, 47, 57, 68, 69, 88 |
| 9. | ஸ்ரீ பெரும்பூதூர் தேவஸ்தானம் | - 36 |
| 10. | திருமலையில் ஜயேந்திரரின் அத்துமீறல் - ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா கட்டுரை | - 44, 45 |
| 11. | ஆன்மீக ஜோதி | - 50 |
| 12. | தினமலர் பக்திமலர் | - 57, 65 |
| 13. | தினமலர் வாரமலர் | - 59 |
| 14. | தினமலர் | - 61 |
| 15. | துக்ளக் | - 60, 63, 83 |
| 16. | தெய்வம் பேசுகிறது | - 65, 69 |
| 17. | ஓம் சக்தி | - 67 |
| 18. | ஆன்மீக ஆலயம் | - 71, 89 |
| 19. | அருள் பூமி | - 72, 74 |
| 20. | நல்ல நேரம் | - 104 |

# புதிய எழுத்தாளர் அறிமுகம்

சமீபத்தில் கவிகாளமேகத்தைப் பற்றிக் கவிதையில் விமர்சித்து நூல் எழுதிப் புத்தக விமர்சனத்திற்கு அனுப்பியபோது " S. பத்மநாபன், (ஹோராசாஸ்திரக் கலைஞர், இரும்பாநாடு, (ஏம்பல் வழி), புதுக்கோட்டை மாவட்டம்" என்னும் இளைஞரான எழுத்தாளர் நமக்கு அறிமுகமானார். நம்முடைய நூல்களை ஒரு வருட காலத்தில் பெற்றுப்படித்தபோது தாம் செம்மைப்பட்டதாக நேரில் சந்தித்தபோது கூறினார் அவர். அவரது கட்டுரைகள் ஸுதர்சனத்தில் வெளிவரவிருக்கின்றன. அவரைப் பற்றிய அறிமுகம் வாசகர்களுக்கும் உண்டாவதற்காக 6—4—2000-ல் அவர் எழுதிய கடிதமும், ஸுதர்சனத்தின் பணியைப்போற்றி அவர் எழுதிய சில கவிதைகளும் அடுத்தபடி அச்சிடப்படுகின்றன.

## கடிதம்

தேவரீரது மணிவிழா மலரை முழுவதும் படித்தேன். தேவரீரைப்பற்றி அடியேனுக்கு ஒரு வருடமாகத்தான் தெரியும். தேவரீரது அரிய படைப்புகளான நூல்களை சமீபத்தில்தான் வாங்கிப் படித்தேன். தேவரீரது எழுத்துக்கள் அடியேனை மிகவும் செம்மைப்படுத்திவிட்டன. அடியேனுக்குச் சிறுவயது முதலாகவே மறந்தும் புறந்தொழாமையில் உறுதி அதிகம். அதிலும் நம் ஸம்ப்ரதாய விஷயங்களையும் புறமதத்தில் உள்ள வேதவிருத்தக் கொள்கைகளையும் அடியேன் தெளிவாக அறிந்து கொண்டது தேவரீரின் நூல்களைப் படித்த பின்பே. இவ்வளவுநாள் தேவரீரைப்பற்றி அறியாமல் 31 வருடங்களைக் கழித்தது அடியேனது துரதிருஷ்டமே. தேவரீரை நேரில் தரிசித்தபின் அடியேன் மனத்தில் ஏதோ ஒரு இனம் புரியாத சந்தோஷம். அடியேனது கவலைகள் எல்லாம் பறந்தோடிவிட்டன. இனி மீதமுள்ள வாழ்நாளை வைணவத் தொண்டிற்கே அர்ப்பணிக்க முடிவு செய்துவிட்டேன். தேவரீரது ஆசிகளே அடியேனுக்குத் துணை.

**அஹிம்ஸகஸ்ய தா₃ந்தஸ்ய த₄ர்மார்ஜித த₄நஸ்ய₄ ச |**
**ஸர்வதா₃ நியமஸ்த₂ஸ்ய ஸதா₃ ஸாநுக்₃ரஹா க்₃ரஹா: ||**

என்ற பு₃லதீ₂பிகா வசனப்படி தேவரீரின் நன்னெறிசேர் வாழ்வைக் கண்டு நவக்ரஹங்களே தேவரீரின்முன் தலைவணங்கி நிற்கின்றன. தேவரீரை க்ரஹங்கள் என்ன செய்யமுடியும்? ஸர்வேஶ்வரனை ஸ்ரீமந்நாராயணனுக்கு வழக்குரைஞராக இருக்கும் தேவரீர் அரும்பணியைப்பற்றிக் கவிதையில் சொல்லவேண்டும் என்று அடியேனுக்கு ஒரு சிறு ஆசை. இந்த நான்கு கவிதை மலர்களையும் தேவரீரின் திருவடியில் ஸமர்ப்பிக்கிறேன்.

## கவிதைகள்

1. மறைபோற்றும் வைணவத்தில் மாசுசொல்லும்
மடையர்களின் வாய்களிலே மண்ணைவைத்து
அறியாத வைணவரும் ஆதிதன்னை
அறிந்திடவே வழிசெய்தீர் நும்எழுத்தில்
சிறியோராம் என்னைப்போன் ரோரும்உய்ய
சிறந்தவழி காட்டிஅருள் செய்யும்சுவாமி!
நிறைஆயுள் நீர்பெற்றிந் நீணிலத்தில்
பல்லாண்டு வாழ்ந்துமால் பணிசெய்வீரே !

2. சங்கங்கள் வளர்த்ததமிழ்ப் பாவிலெல்லாம்
நாரணனே பரம்பொருளாய் உள்ளான்என்று
பங்கமற உரைத்தநும் பாங்குகண்டு
பைந்தமிழும் களித்தும்மை வணங்குதய்யா!
பொங்குவளம் கொண்ட நல்புத்தூர்தந்த
புனிதராம் ஸ்ரீகிருஷ்ண சுவாமிஉம்மை
எங்கள்வழி காட்டியாய் இனிதுஏற்றோம்
இனியெங்கள் வாழ்நாளும் புனிதமாமே.

3. பெருமானார் வழிநின்ற பெரியோர்தம்மில்
இருசாரார் நெறிகளையும் நுணுகிஆய்ந்து
திருமகளுக் குற்றஇடம் இதுதான்என்று
சிறியவரும் உணர்ந்திடவே விளக்கிச்சொன்னீர்
ஒருவருமே வாய்திறக்க வொண்ணுவண்ணம்
உண்மைதனை உரைக்கும்நும் பாங்குகண்டு
திருமகளே மகிழ்ந்தும்மை வாழ்த்துகின்றாள்
சிறுமதியோர் என்றுமிதை யுணர்ந்திடாரே.

4. நிலமளந்த நெடியோன்தன் உளங்களிக்க
நெறிமுறையாம் மறையதனை முழுதும்ஆய்ந்து
உலகுய்ய உண்மைதனை எடுத்துரைத்த
உத்தமரே! உமக்கொருவர் உவமையாமோ?
உலகிலினி அறிவிலிகள் இருக்கமாட்டார்
நும்ஞானப் படைப்புகளைப் படித்தபின்பு;
நிலவுலகும் வானுலகும் இனிதுபோற்ற
புகழ்பெற்ற புண்ணியரே வாழ்க!வாழ்க.



ஸ்ரீ:

# ராமபாணம்

[ஸுதர்சனம் ஆசிரியரின் முன்னுரை]

பல வருடங்களுக்கு முன் ஆனந்தவிகடன், கல்கி, கலைமகள், ஞானபூமி முதலான பொதுஜனப் பத்திரிகைகளில் காமகோடி பீடாதிபதி, வாரியார் போன்ற வைஷ்ணவ த்வேஷத்தில் ஊறிய பிரமுகர்கள் வைஷ்ணவத்தை இழித்தும் பழித்தும் பேசும் பல கட்டுரைகளை வெளியிட்டு வந்தனர். ஸுதர்சனர் பதில் பகுதியின் வாயிலாக இவற்றுக்குத் தக்க ஆதாரங்களை மேற்கோள் காட்டித் தினவடங்க நாமே பதிலுரைத்து வந்தோம். இதன் விளைவாக விகடன் போன்றவற்றில் வைணவத்வேஷ பிரசாரங்கள் பெரும்பாலும் நின்றுவிட்டன. இருந்தபோதிலும் ஞானபூமி போன்ற சில பத்திரிகைகளில் இவை தொடர்ந்து வருகின்றன. அவற்றை நாம் பார்க்க நேருவதில்லை ஆகையால் அவற்றிலுள்ள த்வேஷப் பிரசாரங்களுக்கு ''ராமபாணம்'' என்னும் தலைப்பில் மறுப்பெழுதும் நம்முடைய நண்பர் ஸ்ரீ உ. வே சே. பத்மநாபன் அவர்களுடைய கட்டுரைகள் ஸுதர்சனத்தில் இந்த இதழ் முதல் தொடர்ந்து வெளியிடப்படுகின்றன.

# ராமபாணம்

[சே. பத்மநாபன், இரும்பாநாடு போஸ்ட், ஏம்பல் வழி, புதுக்கோட்டை மாவட்டம்-622 204.]

''ஞானபூமி'' என்ற பெயருடன் ஒரு பொதுஜனப் பத்திரிகை நமது நாட்டில் உலவி வருவது அனைவரும் அறிந்ததே. இப்பத்திரிகையின் நிறுவன ஆசிரியர் மணியன் என்பவர். ஆசிரியர் கே. ஸ்ரீராம். கௌரவ ஆசிரியர் டி எஸ் நாராயணஸ்வாமி. இப்பத்திரிகையில் பல வருடங்களாகவே விஷ்ணு வைஷ்ணவ த்வேஷ உணர்வுகள் கொண்ட கதைகளும் கட்டுரைகளும் வந்து கொண்டிருக்கின்றன. ''ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்'' பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீஸுதர்சனர் அவர்களால் பலமுறை இப்பத்திரிகையில் வரும் வைஷ்ணவ த்வேஷக் கருத்துக்கள் பலமாகக் கண்டிக்கப்பட்டன. இருப்பினும் இப்பத்திரிகையின் ஆசிரியர்களுக்கு சொரணை வந்ததாகத் தெரியவில்லை. மறுபடி மறுபடி தாங்கள் செய்ததையே செய்து வருகிறார்கள். விஷ்ணு வைஷ்ணவ த்வேஷம் இவர்களது இரத்தத்தில் ஊறியதுபோலும்! இந்த (அ)ஞ்ஞானபூமி பத்திரிகையை நம் வைஷ்ணவர்களிலும் பலபேர் வாங்கிப் படிப்பதுதான் மிகவும் வருந்தத்தக்க விஷயம். நம்மவர்களிடையே மறந்தும் புறந்தொழாக் கொள்கை மிகவும் நலிந்து

வருகிற இந்நாளில் இதுபோன்ற பத்திரிகைகள் இரண்டுங்கெட்டான் வைணவர்களை நிச்சயம் முழு மூடர்களாக்கிவிடும். ஆகவே இப்பத்திரிகையில் வரும் வைஷ்ணவ த்வேஷக் கருத்துக்களை அவ்வப்போது வன்மையாகக் கண்டிப்பதைத் தவிர வேறு வழி இல்லை. ஏப்ரல்-2000 'ஞானபூமி' இதழில் வந்த சில விஷயங்கள் மிகவும் கண்டிக்கத்தக்கனவாக உள்ளன. அவற்றைக் கீழே தந்து கண்டிக்கிறேன்.

1. வேங்கடவன் என்பவர் ஸ்ரீராமநவமி பற்றி ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதில் ஓரிடத்தில் "ஸ்ரீதியாகப்ரம்மம் தனது க்ருதி ஒன்றில் ஸ்ரீராமனும் தேவியும் ஒன்று என்று கூறுகிறார். தேவி அஷ்டமி-நவமி சங்கமத்தில் பிறந்தவள். ஸ்ரீராமன் நவமியில் பிறந்தார். ஆகவே தேவி உபாஸகர்கள் அஷ்டமியில் தேவியை பூஜித்துவிட்டு நவமியில் ஸ்ரீராமநவமி கொண்டாடுகின்றனர்" என்று எழுதுகிறார். இதற்கு இவர் ஆதாரமாக எடுத்திருக்கும் தியாகராஜ க்ருதி "கருண ஜூடலம்மா கமல நவமி கலாதருணி கொம்மா" என்பது. இக்கிருதியின் முதல் வரியையே இவர் தவறாக எழுதியுள்ளார் என்பது தெலுங்கு வித்வான்களுக்கும் தியாகராஜ கிருதியில் நல்ல பரிசயம் உள்ளவர்களுக்கும் புரியும்.

"க்ருண ஜூடவம்ம கமலவைரி கலாதருநி கொம்ம" என்பதே சரியான வரி. தோடிராகத்தில் அமைந்துள்ள இக்கிருதியை இவர் தன் கருத்துக்கு ஆதாரமாகக் காட்டுகிறார்! இக்கிருதியில் மூன்று சரணங்கள் உள்ளன. இக்கிருதியில் எந்த இடத்தில் ஸ்ரீராமனும் தேவியும் ஒன்று என்று ஸ்ரீதியாகபிரம்மம் எழுதியுள்ளார்? இவரால் காட்டமுடியுமா? 'ஸ்ரீதியாகராஜ கீர்த்தனைகள்' என்று இன்று அறியப்படும் கீர்த்தனைகளில் பல கிருதிகள் ஸ்ரீதியாகராஜரால் செய்யப்படாதவை என்று அறிஞர்கள் கருதுகின்றனர். இவர் சொல்லும் கீர்த்தனை ஒரு சந்தர்ப்பத்தில் ஸ்ரீதியாகராஜரால் செய்யப்பட்டதென்றே கொண்டாலும், இக்கீர்த்தனையில் இவர் சொல்வதுபோல் ஸ்ரீராமனையும் தேவியையும் ஒன்றுபடுத்தி எந்த இடத்திலுமே ஸ்ரீதியாகராஜர் கூறவில்லை. மாறாக, மூன்றுவது சரணத்தில் காமவைரியான சிவன் உடம்பில் பாதி கொண்டவள் என்றும், புராண புருஷனான ஸ்ரீராமனுக்குத் தங்கை என்றும் தேவியைக் குறிப்பிடுகிறார். ஸ்ரீராமபிரானை "புராண புருஷன்" என்றே ஸ்ரீதியாகராஜர் எழுதுகிறார். நிலை இப்படியிருக்க, கட்டுரை ஆசிரியரான வேங்கடவன் உண்மைக்குப் புறம்பாக எழுதி சைவ சாக்தர்களின் பாராட்டைப்பெற விழைகிறார். இதன்மூலம் இவரது அஜ்ஞானத்தை வெளிப்படுத்திக் கொண்டார். இக்கட்டுரையின் முதல் பக்கத்தில் ஸ்ரீராமன் சிவலிங்க பூஜை செய்யும் படம்

போடப்பட்டுள்ளது. மேலும் ''சிவசக்தி ஐக்யமே ஸ்ரீராமன்'' என்று ராமதாபினி உபநிடதம் கூறுகிறது என்றும் எழுதுகிறார். இவர் சொல்லும் ராமதாபினி உபநிஷத் சான்றோர்களால் ஏற்கப்படவில்லை. சில உபநிஷத்துக்கள் தம் கருத்துக்கு சாதகமாக அமையும்படி சில விஷமிகளால் பிற்காலத்தில் கற்பனை செய்யப்பட்டவை என்று அறிஞர்கள் முடிவு செய்துள்ளனர். வைஷ்ணவ ஸுதர்சனம் பத்திரிகையில் இதுபற்றி விளக்கமாக ''உபநிஷத்துக்கள் நூற்றெட்டா?'' என்ற தலைப்புடன் ஸ்ரீ ஸுதர்சனர் அவர்கள் முன்பு எழுதியுள்ளார் (விஷ்ணுசித்த விஜயம் பாகம்-2-ல் இது இணைக்கப்பட்டுள்ளது.) மேலும் இவர் கட்டுரையின் முடிவில் ஸ்ரீராமன் வேதத்தின் முடிந்த பொருள் என்றும் எழுதுகிறார். இப்படியெல்லாம் எழுதுவதால் இதைப் படிக்கும் மக்கள் குழம்புவார்களா? தெளிவடைவார்களா? இவ்வினாவிற்கு இப்பத்திரிகையின் ஆசிரியர்களே பதில் சொல்ல வேண்டும்.

2. 'திருமால் திருவடிச் செல்வர்கள்' என்ற கட்டுரையில் மதுரகவி ஆழ்வாரைப்பற்றி வித்வான் எம். நாராயண வேலுப்பிள்ளை என்பவர் எழுதியுள்ளார். இவர் மதுரகவி ஆழ்வாரை குமுத கணேசாம்சம் என்று எழுதுகிறார். மேலும் கட்டுரையின் இடையில் போடப்பட்டுள்ள படத்தில் நம்மாழ்வாருக்கும் மதுரகவிக்கும் த்ரிபுண்ட்ரம் (விபூதிப்பட்டை) அணிவித்து சித்திரம் எழுதியுள்ளனர். இக்கொடுமை எங்காவது உண்டா? கட்டுரை வைணவ அடியாரைப் பற்றியது. ஆனால் அதற்குரிய படம் வைணவத்துக்கும் அவ்வடியாருக்கும் முற்றிலும் துரோகம் செய்வதாக வரையப்பட்டுள்ளது. இப்படத்தைப் பார்க்கும் சாதாரண மக்கள் நம்மாழ்வாரையும் மதுரகவியையும் நீறுபூசுபவர்கள் என்றுதானே நினைப்பர்? இந்த வக்ர உணர்வு ஏன்? இது வன்மையாகக் கண்டிக்கத் தக்கது. இப்பத்திரிகை ஆசிரியர்களுக்கு சூடு, சொரணை என்பது கொஞ்சமாவது இருந்தால், இதற்கு வருத்தம் தெரிவித்து, இம்மாதிரி அபத்தங்கள் இனி தம் பத்திரிகையில் இடம்பெறுமல் பார்த்துக்கொள்வார்கள்.

3. ''வேற்றுமையில் ஒற்றுமை'' என்ற கட்டுரையில் காமகோடியான ஜயேந்திர சரஸ்வதி எறும்பு ஒற்றுமை, காக்கை ஒற்றுமை என்றெல்லாம் ஏதேதோ கூறிவிட்டு, ஏதோ பாரத நாட்டு மக்களின் ஒற்றுமைக்கு வழி சொல்வதுபோல் ஸ்ரீராமன் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்ததாகப் புனைந்து கூறப்படும் கதையை ஆதாரங்காட்டி மத ஒற்றுமைக்கு வழி சொல்கிறார். இதன் மூலம் வழக்கமான தனது வைஷ்ணவ த்வேஷ உணர்வை வெளிக்காட்டிக் கொண்டுள்ளார். சமீபத்தில் திருமலையில் இவர் செய்த அட்டூழியத்திற்கு சரியான பாடம் புகட்டியிருந்தால் ஒடுங்கியிருப்

பார். ஆனால் அதிகாரிகள் பலத்தால் ஆட்டம் போடுகிறார். ஆனால் உண்மை அறிஞர்கள் இவரது முகத்திரையைக் கிழித்து இவர் ஒரு கபடவேஷதாரி என்பதைக் கூடிய விரைவில் நிலை நாட்டாமல் விடமாட்டார்கள். அந்த நன்னாளே இவர் பக்தர் களுக்கும் இவரது அடிவருடிகளான பத்திரிகைக் காரர்களுக்கும் விமோசன நாள்.

'குமுதம் பக்தி ஸ்பெஷல்' என்ற குமுதத்தின் துணைப்பத்திரி கையில் 'ஆழ்வார்கள் ஓர் எளிய அறிமுகம்' என்ற தலைப்புடன் ஒரு தொடர் கட்டுரை தற்போது வெளிவந்து கொண்டிருக்கிறது. இத்தொடரை எழுதி வருபவர் சுஜாதா. இத்தொடரில் மாதா மாதம் ஒவ்வொரு ஆழ்வாரைப் பற்றியும் அவர்களது அருளிச் செயல்களை ஆராய்ச்சி செய்தும் எழுதி வருகிறார். இத்தொடர்க் கட்டுரையை மேலோட்டமாகப் படித்துப் பார்த்தால் கட்டுரை ஆசிரியர் ஏதோ நியாயமாகத்தான் சொல்கிறார் என்பதுபோல் தோன்றும். ஆனால் சற்று ஆழமாகப் படித்துப்பார்த்தால் கட் டுரை ஆசிரியரின் வைஷ்ணவத்வேஷ உணர்வும் அருளிச்செயல் களை சராசரி இலக்கிய வகையில் சேர்க்கவேண்டும் என்ற கீழ்த் தரமான எண்ணமும் கட்டுரையில் ஆங்காங்கே பிரதிபலிப்பதைக் காணமுடியும்.

சில நாட்களுக்குமுன் சமயக்காழ்ப்புணர்ச்சி கொண்ட சைவ சாக்த வெறியர்கள் ஆழ்வார்களின் பாசுரங்களுக்கு அபத்தப் பொருள் எழுதி நூல்களாக வெளியிட்டனர். அவற்றுக்கெல்லாம் நம்மதப் பெரியவர்கள் தக்க ரீதியில் கசையடி கொடுத்து அவ் வெறியர்களின் வாயடைத்துவிட்டனர். அதனால் வேறுவழியின்றி 'இனி அப்படியெல்லாம் எழுதினால் நம் பருப்பு வேகாது' என்று நினைத்து 'இலக்கியத் திறனாய்வு' என்ற போர்வையில் (இலக் கியம் என்றால் அதை எந்தக் கோணத்திலும் ஆராய இலக்கியத் திறனாய்வாளர்களுக்கு உரிமை உண்டு என்ற நியாயத்தைத் தங்க ளுக்கு சாதகமாக்கிக் கொண்டு) தற்போது ஆழ்வார்களின் பாசு ரங்களைக் கொச்சைப்படுத்த முயற்சிசெய்கின்றனர். இம்முயற்சியில் வைணவரான சுஜாதாவும் ஈடுபட்டிருப்பதுதான் மிகவும் வருந்தத் தக்கது. சராசரி வாசகன் மயக்கமடையாமலிருக்க இவரது கட் டுரைபற்றிச் சில விஷயங்களைச் சொல்ல வேண்டியுள்ளது.

கட்டுரையின் தலைப்பு "ஆழ்வார்கள் ஓர் எளிய அறிமுகம்" என்பது. 'அறிமுகம்' 'அறிமுகப்படுத்துதல்' — என்றாலே முன்பு அறியாத ஒரு விஷயத்தை அறியச் செய்வது. அதிலும் 'எளிய அறிமுகம்' என்றால் அவ்விஷயத்தின் உண்மைத் தன்மை சிதையாவண்ணம் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தல். உதாரண

மாக, 'கோயில் என்றசொல் வழிபாட்டுக்குரிய இடத்தைக் குறிக்கிறது' என்று எளியமுறையில் அச்சொல்லை அறிமுகப் படுத்திவிட்டு வழிபாட்டுக்குரியது என்ற பொதுப்படைப் பொருளிலிருந்து மாறுபடாவண்ணம் கோயிலைப் பற்றியுள்ள மற்ற விஷயங்களை அவனுக்குத் தெளிவுபடுத்தலாம். இதே ரீதியில் "ஆழ்வார்கள் என்றாலே வைணவத் தொண்டர்கள். நாராயணபரத்வத்தை நிலைநாட்டியவர்கள். வேதசாரங்களையும் வைணவ சித்தாந்தங்களையும் தன்னகத்தே கொண்டுள்ள வையே அவர்களது பாசுரங்கள். பகவானின் உகப்புக்கே படைக்கப்பட்ட இலக்கியங்கள் அவை" என்ற அடிப்படை விஷயங்களை மனத்திற்கொண்டு அருளிச்செயல்களை இலக்கியத் திறனாய்வு செய்தால் ஆழ்வார்களை உள்ளபடி உணரவேண் டும் என்ற ஆர்வம் உள்ளவர்களுக்கு அது பயனுள்ளதாக அமையும். இந்த அடிப்படையிலேயேதான் ,நமது பூர்வாசார் யர்கள் தமது நூல்களில் அருளிச்செயல்களைத் திறனாய்வு செய்துள்ளனர். மனம்போன போக்கில் ஆராய்ந்து சொந்தக் கருத்துக்களைப் புகுத்தி ஆய்வுசெய்ய ஆழ்வார்களின் பாசுரங் கள் வெறும் இலக்கியம் மட்டுமல்ல. ஞானம் வைராக்யம் என்ற வண்ணங்களில் தோய்த்து, பக்தி என்ற தூரிகையால் தீட்டப்பட்ட அழகொளிரும் ஓவியங்கள் அவை. அர்ச்சனைப் பூக்களாய் பகவானின் திருவடியில் சமர்ப்பிக்கப்பட்டவை அவை. ஆகவே அவ்வருளிச் செயல்கள் பகவானின் சொந்த உடைமை கள். அதனால் அவற்றைத் திறனாய்வு செய்யும்பொழுது ஆழ்வார் களின் உள்ளுணர்வுகள், அவர்களின் தத்துவக் கோட்பாடுகள், அவர்களின் பகவத்பக்தி என்ற வட்டத்திற்குள் நின்றுதான் ஆய்வு செய்யவேண்டும். அப்பொழுதுதான் ஆழ்வார்களையும் அருளிச்செயல்களையும் உள்ளபடி உணரமுடியும். ஆனால் ஆழ் வார்களை வாசகர்களுக்குத் தவறாக அறிமுகப்படுத்தவேண்டும் என்ற உள்நோக்கம் கொண்ட எழுத்தாளர்கள் இதைச் சிந்திக்க மாட்டார்கள். பிறப்பால் வைணவரான சுஜாதாவும் இத்தகைய வரே என்பது அவரது கட்டுரையை ஆழ்ந்துபடித்தால் புரியும்.

ஏப்ரல்-2000 குமுதம் பக்தி ஸ்பெஷல் இதழில் ஆண்டாள் பற்றி மனம்போனபடி எழுதியுள்ளார் சுஜாதா. கட்டுரையின் முதல் பாராவிலே "ஆண்டாளைப் படிப்பவர்கள் ஏதோ ஒரு விதத் தில் அவர் பாடல்களால் பாதிப்பு அடையாமல் இருக்கவே முடி யாது" என்று எழுதுகிறார். இந்தவரியில் "ஏதோ ஒரு விதத் தில்" என்ற சொற்றொடர்மூலம் ஆண்டாள் பாசுரத்தை எந்தக் கோணத்தில் வேண்டுமானாலும் ரசிக்கலாம் என்று இவர் உரிமை வழங்குகிறார் என்பது புலனாகிறது. ரசனையே பாதிப்புக்கு அடிப்

படை என்பது எழுத்தாளரான இவருக்குத் தெரியாமலிருக்க நியாயமில்லை. எந்த விதத்தில் அப்பாசுரங்களை ரசித்து அனுப விக்கவேண்டும் என்று அவற்றுக்கு உரை எழுதி ஆய்வுசெய்த நம் பூர்வாசார்யர்கள் தெளிவாகக் காட்டியுள்ளனர். அதற்கு முரணாக 'ஏதோ ஒரு விதத்தில்' என்று எழுதுவதன்மூலம் ''வைணவரான'' இவர் ஆண்டாளை வாசகர்களுக்குத் தவறாக அறிமுகப்படுத்த முயற்சிக்கிறார் என்று தெரிகிறது.

''வாலண்டைன்ஸ் டே—காதலர் தினம்''—என்றெல்லாம் கொண்டாடுகிறார்கள். அதற்கு 'ஆண்டாள் தினம்' என்று பெயர் மாற்றலாம்'' என்று யோசனை கூறுகிறார். ஆண்டாளின் பகவத் சிருங்காரத்தை புனிதமானதாக, பக்தி ரூபமானதாக, வேத விளக்கமானதாகக் கண்டுள்ளனர் நம் பூர்வாசார்யர்கள். அவர் களின் உண்மைப் பார்வைக்கு முரணாக, தற்காலக் காதலர்களின் காதல் உணர்வோடு ஆண்டாள் பகவான் மீது கொண்ட பகவத் பிரேமையை ஒப்பிட்டு எழுதும் சுஜாதா ஒரு மனச் சாட்சியற்ற எழுத்தாளர் என்றே கருதத் தோன்றுகிறது. மேற் கத்திய கலாசாரமே ''வாலண்டைன்ஸ்-டே'' என்பது. அதன் பாதிப்பே ''காதலர் தினம்''; அரைகுறை ஆடையுடன் மது அருந்திக்கொண்டு புகைபிடித்துக்கொண்டு பொது இடங் களில் வெட்கம் சிறிதுமின்றி ஆண்களும் பெண்களும் பலர் பார்க்கக் கட்டிப் பிடித்துக்கொண்டு புரள்வதே வேலண் டைன்ஸ்-டே ஆக இன்று கொண்டாடப்படுகிறது. இந்த அநாகரீக விழாவிற்கு ''ஆண்டாள் தினம்'' என்று பெயர் மாற்றலாம் என்று எழுதும் சுஜாதா அன்னத்திற்கும் மலத் திற்கும் வித்தியாசம் தெரியாதவர் என்றே சொல்லவேண்டும். மேலும் ''ஆண்டாள் பாசுரத்தில் சிற்றின்பத்திலிருந்து பேரின் பத்தை நாடும் தத்துவத்தையும் பார்க்க முடிகிறது'' என்று எழுதுகிறார். சுஜாதாவுக்கு ஓஷோ ரஜனீஷின் கொள்கை பிடிக் கும் என்றால் அவர் தாராளமாக ஓஷோவின் சீடராகிவிடலாம். யார் தடுத்தார்கள் இவரை? அதற்காக வீணாக இவர் ஆண்டாளின் பாசுரங்களுக்கு ஆபத்தப் பொருளுரைத்து, தம் விருப்பத்தை நியாயப்படுத்திக்கொள்ள முயல வேண்டாம்.

பாலுணர்வைத் தூண்டும் சொற்களைப்போட்டுக் கதை எழுதிப் ''புகழ்'' பெற்றவர்களைக் கொண்டு ஆழ்வார்களைப்பற்றி எழுதச் சொன்னால் இப்படித்தான் எழுதுவார்கள். ஆழ்வார்களை உள்ள படி அறிமுகப்படுத்த சிறந்த வைணவச் செம்மல்கள் எத்தனையோ பேர் உள்ளனர் நம்நாட்டில். அவர்களைக் கட்டுரை எழுதச் சொல்லலாம். குமுதம் பத்திரிகை நிர்வாகம் இதைப் புரிந்து கொண்டால் நல்லது.

மே மாதத்தில் வரும் ஆதிசங்கர ஜயந்தியை முன்னிட்டு மே மாத 'ஆன்மீகப்' பத்திரிகைகளில் ஆதிசங்கரரைப் பற்றிய கருத்துக்கள் கட்டுரைகளாக வெளிவந்துள்ளன. அக்கருத்துக்கள் ஆதிசங்கரரின் கொள்கைக்கு முற்றிலும் முரண்பட்டவையாயும் மிகமிக அபத்தமாகவும் உள்ளன. பெரும்பாலும் இப்படிப்பட்ட அபத்தக் கருத்துக்களை அள்ளி வழங்குபவர்கள் ஆதிசங்கரரின் வழிவந்தவர்களாகத் தங்களைச் சொல்லிக் கொள்ளும் காமகோடி பீடாதிபதிகளும் சிருங்கேரி பீடாதிபதியுமேயாவர். ஆதி சங்கரரது ஜயந்தி கொண்டாடப்படும் இவ்வேளையில் இப்பீடாதிபதிகளின் அபத்தக் கருத்துக்களைக் களைந்து ஆதிசங்கரரது உண்மையான கொள்கையை நம் மக்களுக்குத் தெரியப்படுத்த வேண்டியது நம் கடமை ஆகிறது.

ஶ்ருதி வாக்யங்களில் பலவற்றைத் தள்ளிவிட்டு, சிலவற்றை மட்டும் எடுத்துக்கொண்டு அத்வைதக் கொள்கையை ஸ்தாபித்தவர் சங்கரர். "குணமற்ற உருவமற்ற வெறும் அறிவு மாத்ரமான பிரஹ்மம் ஒன்றே ஸத்யம். கண்ணால் காணப்படும் மற்ற பிரபஞ்சத் தோற்றங்கள் அனைத்தும் பொய். இதனையுணர்ந்து ஜீவன் பிரஹ்மமாவதேமோக்ஷம்" — இதுவே அத்வைதக் கொள்கை. மேலும் உபாஸிப்பதற்கு வசதியாக பிரஹ்மத்திற்கு ஓர் உருவம் கொடுத்தால் அது நாராயண வடிவம் தான் என்றும், குணம் என்று எடுத்துக் கொண்டால் அது நாராயணனுக்குரிய ஸத் குணங்களாகவே இருக்கும் என்றும் சொல்லி ஸகுண பிரஹ்மமாக நாராயணனே உபாஸிக்கத் தகுந்தவன் என்றும் போதித்தார் சங்கரர். இது அவரது பிரஸ்தானத்ரய பாஷ்ய நூல்களிலிருந்து தெளிவாகின்றது. அவர் தமது பிரஹ்ம சூத்ர உரையில் நாராயணனே பரமாத்மா என்ற கருத்தை, தாம் ஏற்றுக்கொள்வதாகக் கூறுகிறார். தமது கீதை உபநிடத உரைகளில் மூலத்தில் ஈச்வரன், 'பிரஹ்மம்' என்று பொதுவாக வருமிடங்களிலெல்லாம் 'நாராயணன் என்ற பெயரையுடைய' 'வாசுதேவன் என்ற பெயரையுடைய' என்று உரையிட்டு, இச்சொற்கள் நாராயணனைத்தான் குறிக்கும் என்று காட்டி, பரப்ரஹ்மம் நாராயணனே என்பதை எல்லோரும் உணரும்படி செய்திருக்கிறார். ஆகவே அவர் கருத்துப்படி 'பிரஹ்மம்' என்ற சொல் நாராயணனைத் தவிர வேறு எந்த தேவதையையும் குறிக்காது என்பதும் புலனாகின்றது.

தமது கீதை உரையில் நாராயணனைத் தவிர மற்ற தெய்வங்களை வழிபடுபவர்கள் சிற்றறிவுள்ளவர்கள் என்று தெளிவாகக் கூறியுள்ளார் சங்கரர். தமது மாயாவாதக் கொள்கையால் உலகோரை மயங்கவைக்க சிவாம்சமாக அவதரித்தவர் என்று கொண்டாலும், நாராயணனே பரமாத்மா என்பதை ஒளிவு மறைவின்றி உலகறியச் செய்துவிட்டுப் போயிருக்கிறார் அவர். இப்படிப்பட்ட கொள்கையையுடைய சங்கரர், மிகச்சிறந்த பிரஹ்மசர்ய விரதமுடையவராய் இருந்தார். சந்தனத்தால் ஊர்த்வபுண்ட்ரமணிந்தவராய் நாராயண பராயணராய் வாழ்நாள் முழுதும் வாழ்ந்தவர் அவர். இதுவே ஆதிசங்கரரின் உண்மை நிலை. உண்மையான அத்வைதிகள் இதை ஏற்றுக் கொள்கின்றனர். சிருங்கேரி, காமகோடி போன்ற கபட வேஷதாரிகளே சங்கரரின் உண்மைக் கொள்கைக்கு முரணாகப்பேசி, சங்கரரை இவர்களைப்போல் சமரசவாதியாகக் காட்டி மக்களை ஏமாற்றுகின்றனர். இவர்களின் சுயநலத்திற்காக அவரது உண்மைக் கொள்கைகளை மறைத்துப் பேசுகின்றனர். இனி மேமாத ஆன்மிகப் பத்திரிகைகளில் வந்த இப்பீடாதிபதிகளின் அபத்தக் கருத்துக்களைப் பார்ப்போம்.

'ஞானமணி' மே மாத இதழில் காமகோடி ஜெயேந்திரர் "பிரஹ்ம தத்வமே நிலையானது மற்றதெல்லாம் உலகிலே மாறக்கூடியது" என்பதுதான் அத்வைதம் என்கிறார். இப்படிச்சொல்வதிலிருந்து தமது ஆசார்யரின் கொள்கையான அத்வைதமே இவருக்குத் தெரியாது என்பது தெரியவருகிறது. 'உலகமே பொய். உருவம், குணம் இவையற்ற பிரஹ்மம் ஒன்றே உண்மை" என்பதே அத்வைதம். இப்படிருக்க, "உலகிலே மற்றதெல்லாம் மாறக்கூடியது" என்ற கருத்து எப்படி அத்வைதமாகும்? மேலும் "அன்றைக்கு இருந்த தவறான மதங்களைக் கண்டித்து சரி செய்து ஷண்மதங்களை ஸ்தாபித்தார் சங்கரர்" என்று பேசுகிறார் இவர். ஷண்மதம் என்று இவர்கள் சொல்லும் சைவம் முதலான மதங்களை சங்கரர் தமது ப்ரஸ்தானத்ரய உரைகளில் கண்டித்து, நாராயண பரத்வத்தை மட்டும் ஏற்றுக்கொண்டிருப்பதை இவர் படிக்கவில்லை போலும்! "உள்ளத் தூய்மைக்காக உருவ வழிபாட்டை ஏற்படுத்தினார் சங்கரர்" என்றும் "விஞ்ஞானிகள் அத்வைதக் கொள்கையை ஆதரிக்கின்றனர்" என்றும் கூறுகிறார் இப்பீடாதிபதி. அத்வைதக் கொள்கையில் உருவ வழிபாட்டிற்கு எள்ளளவும் இடமில்லை. உலகம் பொய் என்ற வாதத்தை விஞ்

ஞானிகள் ஏற்பதில்லை. "விஞ்ஞானிகள் அத்வைதத்தை ஆதரிக்கின்றனர்" என்று கூறும் இப்பீடாதிபதிக்கு விஞ்ஞானத்தின் அடிப்படையே தெரியாது என்பது தெளிவாகிறது.

'அம்மன் தரிசனம்' மே மாத இதழில் சிருங்கேரி பீடாதிபதி அத்வைதக் கொள்கையை விளக்குமிடத்தில் "வழிபடும் மக்களின் நன்மைக்காக பிரஹ்மம் சிவன், விஷ்ணு போன்ற பெயர்களைத் தாங்கி அனுக்ரஹம் செய்கிறது" என்கிறார். சங்கரர் விஷ்ணுவைத் தவிர மற்ற எந்த தெய்வத்தையும் ஸகுணப்ரஹ்மமாக வழிபாட்டுக்குரியதாக ஏற்றவரில்லை என்பதால் இவரது இக்கருத்தும் அபத்தமானது என்பது தெளிவு. "சங்கரர் ஸகுணத்தில் தாத்பர்யமில்லாதவராயினும் இதுவும் முக்கியம் என்றுதான் எல்லாத் தேவதைகளைப் பற்றியும் ஸ்தோத்ரங்கள் செய்திருக்கிறார்" என்று கூறுகிறார் இவர், எத்தனையோ ஸஹஸ்ரநாமங்கள் இருக்க, விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தை மட்டும் எடுத்து அதற்கு உரை எழுதி நாராயணனே ஸகுண பிரஹ்மம், அவன் புகழே பாடத்தகுந்தது என்று நிலை நாட்டிய பெருந்தகை ஆதிசங்கரர். அவர் தமது வாழ்நாளில் நாராயணனைத் தவிர வேறு எந்த தேவதை மீதும் ஸ்தோத்ரங்கள் செய்யவில்லை. மற்ற தேவதைகள் வழிபாட்டுக்குரியதாக அவர் கனவில் கூட நினைத்திருக்க இடமில்லை. அவர் வழிவந்தவர்களாகச் சொல்லப்படுபவர்களில் 'சங்கரர்' என்ற பெயரையுடைய சிலரால் எழுதப்பட்ட மற்ற தேவதாஸ்தோத்ரங்களை ஆதிசங்கரர் செய்ததாகக் கூறி ஊரை ஏமாற்றிக் கொண்டிருக்கின்றனர் இவர்கள்.

இவை தவிர, குமுதம் பக்தி ஸ்பெஷல் மே மாத இதழில் எஸ். ஜெயந்திநாதன் என்பவர் சிருங்கேரி பீடாதிபதியின் கருத்தாக ஆதிசங்கரர் ப்ரகாயப் பிரவேசம் செய்து இல்லறசுகம் அனுபவித்தார் என்று எழுதியுள்ளார். தமது வாழ்நாள் முழுதும் சிறந்த முறையில் பிரஹ்மசர்யத்தைக் கடைப்பிடித்த சங்கரரைப் பற்றி இப்படி எழுதுவது, அந்த சிறந்த மனிதருக்குச் செய்யும் மஹாத்ரோகமாகும். அந்த மஹானின் கொள்கையை இழிவுபடுத்துவதும் ஆகும். இப்படியெல்லாம் பேசுவது தம்முடைய ஆசார்யருக்கே செய்யும் துரோகம் என்பதைக்கூட இவர்கள் அறியவில்லை. இப்பீடாதிபதிகளின் 'பொன்'(புன்) மொழிகளை வெளியிடும் பத்திரிகைகளைப் படித்து மக்கள் மயங்காதிருப்பார்களாக!

கோவையிலிருந்து வெளிவரும் 'ஞானமணி' மேமாத இதழில் முதல் பக்கத்திலேயே நரஸிம்ஹத்தை சரபம் வதம் செய்வதுபோல் ஒரு படத்தைப்போட்டு அதன்கீழே சரபத்தைப் பற்றிய ஸ்லோகம் ஒன்றை எழுதி அதைத் தினமும் பாராயணம் செய்தால் பேராபத்துக்களும் கஷ்டங்களும் விலகும் என்று எழுதியுள்ளனர். நரஸிம்ஹாவதாரம் பற்றி விரிவாகக் கூறும் விஷ்ணுபுராணம் பாகவதம் முதலிய புராணங்களில் நரஸிம்ஹத்தோடு சரபம் போர் செய்ததாகக் குறிப்பே இல்லை. கம்பராமாயணத்தில் வரும் இரணியன் வதைப் படலத்தில் கூட சரபம் பற்றிய குறிப்பே இல்லை. பிரஹ்மாண்ட புராணத்தில் அஹோபில மாஹாத்மியத்தில் நரஸிம்ஹத்தை அடக்க சிவன் சரபபக்ஷி உருவம் கொண்டதாகச் சொல்லப்படுகிறது ஆனால் அந்த சரபபக்ஷியை நரஸிம்ஹம் தன் கூரிய நகங்களால் கிழித்துக் கொன்றதாகவே அப்புராணத்தில் சொல்லப்படுகிறது. ஸ்ரீவராஹ புராணத்திலும் இப்படியேதான் சொல்லப்படுகிறது. உண்மை இப்படியிருக்க, விஷ்ணுத்வேஷ உணர்வினால் உண்மைக் கதையை மாற்றி சரபம் நரஸிம்ஹத்தைக் கொன்றதாகப் பின்னாளில் சைவ வெறியர்கள் கட்டுக்கதை கட்டிவிட்டனர். மேலும் விஷ்ணுத்வேஷிகளாயும் சைவவெறியர்களாயுமிருந்த சில மன்னர்கள் தாங்கள் கட்டிய சிவன் கோவில்களில் சரபம் நரஸிம்ஹத்தை வதம் செய்வதுபோல் சிலை அமைத்து விட்டனர். பகவானின் பல அவதாரங்கள் பற்றிய குறிப்புகள் வரும் சங்க இலக்கியங்களில் கூட நரஸிம்ஹாவதாரச் செய்தி வருகிறதே யொழிய, சரபம் பற்றிய குறிப்பே இல்லை. காளிதாஸன் போன்ற பழைய சிவபக்த கவிகளின் காவியங்களிலும் சரபம் பற்றியபேச்சே இல்லை. இந்த உண்மையை உணராத இவர்கள் கூறியுள்ளபடி சரபஸ்துதியை தினமும் சொல்லி வந்தால் விஷ்ணு த்வேஷ பாபத்தினால் வாழ்க்கையில் மேன்மேலும் துக்கமும் கஷ்டமும் வேதனைகளும் உண்டாகுமே தவிர இவர்கள் சொல்வதுபோல் வாழ்க்கையில் நன்மை விளையாது. விஷ்ணுத்வேஷிகளான இரண்யன், இராவணன் போன்றோரின் கதி இறுதியில் என்னாயிற்று என்பதற்கு இதிஹாஸங்களே சான்று. மக்கள் உண்மையைப் புரிந்து கொண்டு நடப்பார்களாக!

மேலும் இப்பத்திரிகையில் 'மகான்கள் வாழ்வில் விநோதங்கள்' என்ற தலைப்பில் ஸ்ரீபார்த்தசாரதிதாஸன் என்பவர் சில கருத்துக்களைக் கூறியுள்ளார். அதாவது ''ஸ்ரீராமானுஜர் ஆரம்ப காலத்தில் அத்வைதத்தின் மீது மோகம் கொண்டு அத்வைதி

யாய் இருந்தவர்'' என்றும், ''தியாகராஜ ஸ்வாமிகள் இராமலிங்க அடிகள் மீதும் கீர்த்தனை ஒன்று பாடியுள்ளார்'' என்றும் ஆதாரமில்லாமல் கூறி, தன் அறிவீனத்தைப் பறைசாற்றிக்கொண்டிருக்கிறார் இவர். ஸ்ரீராமாநுஜர் அத்வைதம் முதலான குறையுள்ள மதங்களைக் கண்டித்து முறையான வேதமார்க்கமான விசிஷ்டாத்வைதத்தை நிலைநாட்டவே அவதரித்தவர். ஒருவரின் கொள்கையை சரியான ஆதாரங்களுடன் கண்டிக்க வேண்டுமெனில் அவருடைய கொள்கையை முழுமையாகவும் தெளிவாகவும் தெரிந்துகொள்ளவேண்டியது கண்டிப்பவருக்கு மிகவும் அவசியமாகிறது. அந்த வகையில் அத்வைதத்தைப் பூர்வ பக்ஷமாக வைத்து அந்தக் கொள்கையில் உள்ள குறைபாடுகளை எடுத்துக்காட்டிக் கண்டிப்பதற்கு அத்வைதத்தை முழுமையாகவும் தெளிவாகவும் கற்கவேண்டிய அவசியம் ஸ்ரீராமாநுஜருக்கு ஏற்பட்டது. அதற்காகவே அவர் யாதவ ப்ரகாசர் எனும் அத்வைதியிடம் அத்வைதம் கற்றார். அவர் அத்வைதம் கற்றதற்கான முறையான காரணத்தைப் புரிந்து கொள்ளாமல், 'அவர் அத்வைதமோகம் கொண்டு அத்வைதியாயிருந்தவர்' என்று எழுதுவது அறிவீனமேயாகும். மேலும் தியாகராஜர் இராமலிங்க அடிகள் மீது பாடிய கீர்த்தனை என்று எதைச் சொல்கிறார் இவர் என்பது விளங்கவில்லை. தியாகராஜருடைய கொள்கைக்கும் இராமலிங்க அடிகளின் கொள்கைக்கும் உள்ள சம்பந்தம் அமாவாசைக்கும் அப்துல் காதருக்கும் உள்ள சம்பந்தம்தான். ஸ்ரீ தியாகராஜர் மிகச்சிறந்த ராமபக்தர். படிப்படியாக ஆன்மிக முன்னேற்றம் அடைந்த அவர் இறுதியில் நாராயணனே பரம்பொருள் என்பதைத் தெளிவாக உணர்ந்து, தம் முடிவான கருத்தைத் தமது க்ருதிகளில் எழுதி நாராயண பரத்வத்தைத் தம் இசை வாழ்வில் நிலைநாட்டிய பெருமை மிக்கவர். இராமலிங்க அடிகளோ 'சமரச சன்மார்க்கம்' என்ற போர்வையைப் போர்த்திக்கொண்டு சைவராயிருந்து விஷ்ணுத்வேஷம் கொண்ட பாடல்களை எழுதியவர். இதையுணராமல் இராமலிங்க அடிகள் மீது ஸ்ரீ தியாகராஜர் கீர்த்தனை பாடியுள்ளார் என்று எழுதுவது ஆதாரமற்றதும் பொய்யானதுமாகும்.

ஞானபூமி மேமாத இதழில் சிருங்கேரி அபிநவ வித்யா தீர்த்த ஸ்வாமிகள் ''கடவுளிடம் எதைக் கேட்பது'' என்ற தலைப்பில் உள்ள ஒரு கட்டுரையில் சிவனையும் விஷ்ணுவையும் ஒன்றுபடுத்தி வாதம் செய்கிறார். தம் கருத்துக்கு ஆதாரமாக ''சிவாய விஷ்ணு

ரூபாய சிவ ரூபாய விஷ்ணவே யதா சிவமயம் விஷ்ணு ரேவம் விஷ்ணுமய: சிவ'' என்ற ஸ்லோகத்தை எடுத்துக்கொண்டு இந்த ஸ்லோகம் சந்தியாவந்தனத்தில் உள்ளதாகவும் கூறுகிறுர். பல நூற்ருண்டுகளாக நடைமுறையில் இருக்கும் சந்தியா வந்தனப் பிரயோகங்களில் இந்த மந்திரம் காணப்படவில்லை. யாருடைய அனுஷ்டானத்திலும் இம்மந்திரம் இல்லை. குறிப்பாக ஸ்மார்த் தர்கள் வெளியிட்டுள்ள சந்தியாவந்தனப் புத்தகங்களில்கூட இம் மந்திரம் காணப்படவில்லை. ஸந்தியாவந்தனத்திலேயே உள்ளது என்று கூறிவிட்டால் அது உண்மையாகிவிடுமா? இவரது ஆசாரிய ரான சங்கரரே சிவனையும் விஷ்ணுவையும் ஒன்று என்று கூற வில்லை. ஆனுல் மக்களை ஏமாற்ற சிவ விஷ்ணு ஐக்யவாதம் பேசு கிருர்கள் இவர்கள்.

குமுதம் பக்தி ஸ்பெஷல்—மேமாத இதழில் சீ. சு. ராகவன் என்பவர் 'அம்மன் கதைகள்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். இக்கட்டுரையில் ''முனிவர் ஒருவரால் பாம்பு கடித்து இறக்கும்படியான சாபத்தைப்பெற்ற பரீட்சித் மன்னன் தான் இறப்பதற்கு முன் பாகவதம் முதலான இறைவனது திரு விளையாடல்களைக் கூறும் நல்ல நல்ல நூல்களை சுகர் என்ற பர ப்ரம்மன் மூலம் கேட்டு தன்னை நல்லவனுக்கிக் கொண்டான்'' என்றும், ''முனிவர் சாபப்படி பரீட்சித் இறந்தபின் அவனது மகன் ஜனமேஜெயன் தன் தந்தையின் ஆத்மா தூய்மையுடைய 9 நாட்கள் தேவியை உபாஸனை செய்து தேவியைக் குறித்து வேள்விகள் நடத்தினுன்'' என்றும் அதனுலேயே பரீட்சித் நற் கதியடைந்தான் என்றும் ஆதாரமின்றி மனம் போனபடி எழுதி யுள்ளார். பரீட்சித் மன்னனைப் பற்றிய செய்திகளை விரிவாகக் கூறும் ஸ்ரீமத் பாகவதத்திலோ மஹாபாரதத்திலோ இவர் கூறிய கருத்துக்களுக்கு எந்தவித ஆதாரமும் இல்லை. முனிவரால் சபிக் கப்பட்ட பரீட்சித் தன் இறப்பிற்குச் சில நாட்களுக்கு முன் பரமாத் மாவான ஸ்ரீவாசுதேவரின் லீலைகளைக் கூறும் ஸ்ரீமத்பாக வதத்தை சுகமுனிவர் மூலமாகக் கேட்டு மகிழ்ந்தான். அதை இறப்பதற்கு முன் கேட்ட புண்ணியத்தாலேயே இறந்தபின் அவன் நற்கதியடைந்தான். தன் தந்தை பாம்பு கடித்து இறந்த தால் ஆத்திரம் கொண்ட ஜனமேஜெயன் தன் தந்தை இறப் புக்குப் பழி தீர்ப்பதற்காக உலகில் உள்ள பாம்புகள் எல்லாம் அழி வதற்குரிய ஸர்ப்பயாகம் செய்தான். அந்த யாகம் ஆர்த்திகர் என்ற முனிவரால் இடையிலேயே முடித்துவைக்கப்பட்டது. அப்

போது தன் மூதாதையரின் சரித்திரங்களைக் கேட்கும் ஆவலோடு இருந்த ஜெனமேஜெயனுக்கு மஹாபாரதத்தைக் கூறும்படி தமது சீடரான வைசம்பாயனருக்குக் கட்டளையிட்டார் வியாஸர். அதன் படி ஜெனமேஜெயனுக்கு மஹாபாரதத்தை வைசம்பாயனர் சொன்னார். மஹாபாரதத்திலும், பாகவதத்திலும் இப்படித்தான் உள்ளது. கட்டுரை ஆசிரியர் தேவி உபாஸகராக இருப்பதால் தேவிக்குப் பெருமை சேர்க்கவேண்டும் என்ற எண்ணத்தில் "ஜெனமேஜெயன் தேவி உபாஸனை செய்துதான் தன் தந்தையின் ஆத்மாவை சாந்தியடையச் செய்தான்" என்று உண்மைக்குப் புறம்பாக எழுதியிருக்கிறார். மேலும் சுகப்ரம்மம் என்று எழுதுவதற்குப் பதிலாக சுகர் என்ற பரப்ரம்மன்' என்று எழுதுவதன் மூலம் இவருக்கு அடிப்படை அறிவே இல்லை என்று புலப்படுகிறது. உண்மைக்குப் புறம்பான செய்திகளையே எழுதும் நபர்களைத் தேடிப்பிடித்து அவர்களைக் குத்தகைக்கு எடுத்துள்ளது குமுதம் பக்தி ஸ்பெஷல். இப்பத்திரிகையைப் படிக்கும் மக்கள் உண்மையைப் புரிந்து கொள்வார்களாக!

'ஆன்மீகம்'—மாத இதழ் 'மாதம்தோறும் மகத்தான பதில்கள்' என்ற தலைப்பில் வாசகர்களின் கேள்விகளுக்கு டாக்டர் அ. அறிவொளி என்பவர் பதிலளித்து வருகிறார். இந்த அறிவொளி பட்டி மண்டபங்கள் சொற்பொழிவுகள் மூலம் தமிழ் மக்களுக்குப் பிரபலமானவர். மே மாத இதழில் "பிரஹ்மஹத்தி தோஷம் என்றால் என்ன?" என்று ஒருவர் கேட்ட கேள்விக்கு, கீழ்க்கண்டவாறு பதிலளித்துள்ளார் இவர். "ஹத்தி என்பது துன்புறுத்துவது, கொலை செய்வது என்று பொருள்படும். வேதம், ஆகமம் ஓதிடும பெரியோர், நெறி தவறாத அந்தணர், நைஷ்டிக பிரஹ்மச்சாரி முதலியோர் எப்போதும் பிரஹ்மம் ஆகிய பெருந் தெய்வத்தோடு ஐக்யமாகி இருப்பார்கள். அவர்களைக் கொலை செய்தால் அது பிரஹ்மத்தையே துன்புறுத்திய பாவத்தைச் செய்தது ஆகும். இராவணன் பிறப்பால் அந்தணன். இராமன் பிறப்பால் சத்திரியன். ஆகவே இராவணனைக் கொன்றதால் இராமனுக்கு பிரஹ்மஹத்தி தோஷம் வந்தது. அதை நீக்க வ இராமேசுவரத்தில் மணலால் லிங்கம் செய்து பூஜித்தான இராமன். திருவானைக்கோவிலும் இராமன் இப்படி லிங்கத்தை வணங்கியதாகத் தலபுராணம் கூறுகிறது" இதுவே அறிவொளி அளித்துள்ள பதில்.

ஆதி காவ்யமான வால்மீகி ராமாயணத்திலோ, தமிழில் அதற்கு இணையான இடத்தில் வைத்துப் போற்றப்படும் கம்பராமாயணத்திலோ இராவணனைக் கொன்றதால் ராமனுக்கு பிரஹ்மஹத்தி தோஷம் பிடித்ததாகவோ, அதற்குப் பிராயச்சித்தமாக ராமன் லிங்கபூஜை செய்ததாகவோ எந்த இடத்திலும் இல்லை.

தலபுராணங்கள் கல்பிதங்களே. அறிவொளி சைவராக இருப்பதால் நல்ல நூலறிவு இருந்தும் வால்மீகி ராமாயணத்திலும் கம்ப ராமாயணத்திலும் இல்லாத ஒரு விஷயத்தைக் கூறி, அதற்கு தலபுராணத்தைப் பிரமாணமாக்குகிறுர். ''நெறி தவருத அந்தணரைக் கொன்றால் பிரஹ்மஹத்தி தோஷம் வரும'' என்று அறிவொளி கூறுகிறுர். அப்படியாளுல் அறிவொளியின் கருத்துப்படி இராவணன் நெறிதவருத அந்தணன் என்றல்லவா ஆகிறது. கொலே, கற்பழிப்பு, பிறன்மனே நயத்தல் போன்ற மஹா பாதகங்களைச் செய்தவன் இராவணன். (ஒருவேளே, இப்படிப்பட்ட மா பாதகங்கள் செய்பவன்தான் நெறிதவருத அந்தணன் என்று சைவாகமங்கள் கூறுகின்றனவோ என்னவோ? அறிவொளியிடம் தான் கேட்கவேண்டும்) இப்பாதகங்களைச் செய்த இராவணனை சத்திரியனுன இராமன் கொன்றதால் இராமனுக்கு எப்படி தோஷம் வரும்? துஷ்ட நிக்ரஹமும் சிஷ்ட பரிபாலனமும்தானே க்ஷத்ரிய தர்மம். அதைத்தானே இராமன் செய்தான்? சரி! வாதத்திற்காக ராமனுக்கு தோஷம் ஏற்பட்டதாகவே கொண்டாலும், சிவனைப் பூஜிப்பதால் பிரஹ்மஹத்தி தோஷம் விலகும் என்று எந்த சாஸ்திரத்தில் உள்ளது? பிரமன் தலேயைக் கிள்ளிய பாபத்தால் பிரம்மஹத்திதோஷம் பிடித்து அலேந்த சிவன் இறுதியில் கபால நன் மோக்கத்துக்காக நாராயணனேப் பூஜித்தல்லவா தன் தோஷத்தைப் போக்கிக் கொண்டான்? அந்த வகையில் சிவனே தோஷமுள்ளவனன்ருே! தோஷமுள்ள ஒருவன் பிறர் தோஷத்தை எப்படிப் போக்கமுடியும்? இதற்கெல்லாம் அறிவொளிதான் பதில் சொல்லவேண்டும். ''அபஹத பாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:'' [ஸுபால உபநிஷத்] என்றபடி பாப ஸம்பந்தமே இல்லாத திவ்யனுன தேவன் ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே. தைத்திரீய உபநிஷத் ''நாராயண பரம்ப்ரஹ்ம'' என்கையால் நாராயணனே அந்த பிரஹ்மமாகிய பெருந்தெய்வம், அந்த ஸர்வேஶ்வரனுன ஸ்ரீமந்நாராயணனின் அவதாரமாகிய ஸ்ரீராமபிரான் மீது தோஷம் கல்பித்து அவன் லிங்கபூஜை செய்து பரிகாரம் தேடிக்கொண்டான் என்று அபத்தமாகக் கதை கட்டும் இந்த சைவர்களே உண்மையில் (பிரஹ்மத்தைத் துன்புறுத்திஞல் பிரஹ்மஹத்தி தோஷம் வரும் என்ற அறிவொளியின் கருத்துப்படியே) பிரஹ்மஹத்திதோஷம் பிடித்தவர்கள். இவர்களே அதற்குப் பரிகாரம் தேடிக்கொள்ளவேண்டும். 'ஸ்ரீராமன் சிவலிங்க பூஜை செய்தான்' என்று யார் சொன்ஞலும் அவர்கள் பிரஹ்மஹத்திதோஷம் பிடித்தவர்களே. விஷ்ணுத்வேஷ உணர்வைக் கைவிட்டு, தன் கருத்தைச் சரியான ஆதாரங்களுடன் நிலே நாட்ட முடியுமாஞல் முனைவர் அறிவொளி அதைச்செய்யவேண்டும் அல்லது தான் தெரிவித்த தவருன கருத்துக்கு வருத்தம் தெரிவிக்கவேண்டும். இந்த இரண்டில் எந்த ஒன்றை அவர் செய்யாவிடினும் அவர் அறிவொளி அல்லர். அறிவிலிதான்.

'அம்மன் தரிசனம்' மேமாத இதழில் 'குலதெய்வ வழிபாடு' என்ற தலைப்பில் நீ. த. வெங்கட் சர்மா என்பவர் "எந்த தெய்வமாக இருந்தாலும் அது ஒருவருடைய குலதெய்வமாக இருந்தால் அதை அவர் வழிபட்டுத்தான் ஆகவேண்டும்" என்றும், "குல தெய்வ வழிபாடுதான் தேவகடன், பித்ருகடன், ரிஷிகடன் இவற்றை நிறைவேற்ற வழிவகை செய்கிறது" என்றும், "எந்த தெய்வத்தை இஷ்ட தெய்வமாகக் கொண்டிருந்தாலும் குல தெய்வ வழிபாடு செய்யாமல் எதுவும் சித்திக்காது" என்றும், "ஆழ்வார்கள் பாடியதுபோல் தொண்டனுக்கும் தொண்டனாய் ஆண்டவன் சேவையிலும் அவன் அடியவன் சேவை உயர்ந்தது என்பதைப் புரிந்துகொண்டு எல்லோரும் குலதெய்வ வழிபாட்டை அவசியம் செய்யவேண்டும்" என்றும் கூறியுள்ளார்.

நம் வைணவ மக்களிடையே சிலர் இவர் கருத்தை ஆதரிப்பர். காரணம், இன்றைய வைணவ சமூகத்தில் சிலர் 'குலதெய்வங்கள்' என்ற பெயரில் பதினெட்டாம்படிக் கறுப்பர், காளி, மகமாயி, ஐயனார், காமாட்சி போன்ற தேவதாந்தரங்களை வழிபட்டு வருவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். இது மிகவும் வேதனைக்குரிய, வெட்கக்கேடான விஷயம். இந்தப் பாதைமாறிய சில வைணவ மக்களுக்காகத்தான் மேற்கண்ட கட்டுரை ஆசிரியரின் கருத்தை விமர்சித்து எழுதவேண்டியுள்ளது.

சில லௌகிக பலன்களுக்காக, ஏற்றமிகு வைணவ சமயத்தில் பிறந்திருந்தும் 'குல தெய்வம்' என்ற பெயரில் தேவதாந்தரங்களின் வாசலை நாடி மிகவும் கேவலமான பிழைப்புப் பிழைக்கின்றனர் நம்மில் சிலர். இதற்குக் காரணம் இவர்களுக்கு, பரவஸ்துவான ஸ்ரீமந்நாராயணன் மீது முழு நம்பிக்கை இல்லை என்பது தான். ஸ்ரீமந்நாராயணனால் கொடுக்க இயலாத பலனும் உண்டோ? தேவதாந்தரங்களிடம் இவர்கள் நாடும் அனைத்துப் பலன்களையும் எம்பெருமானால் வழங்கமுடியும். அந்தத் தேவதாந்தரங்களால் கொடுக்க இயலாத மேலான மோக்ஷத்தை எம்பெருமான் ஒருவனேதான் கொடுக்கமுடியும். இதை உணராது மற்ற தெய்வங்களின் உதவியை நாடிச் செல்லும் நம்மவரில் சிலர் நம்மிடையே இருந்துகொண்டே நம் மதப் பெருமையைக் கெடுக்கின்றனர். இந்நிலை நன்கு உணரப்பட்டு நம்மவரிடையே உள்ள அந்த சிலர் அவசியம் மாறவேண்டும்.

"...முதல் பெருங்கடவுள் நிற்ப, புடைப்பல தான் அறி தெய்வம் பேணுதல்; தனுது புல்லறிவாண்மை..." என்றும், "கண்ணனல்லால் தெய்வமில்லை" என்றும், "மால்தனில் மிக்குமோர் தேவும் உளதே?" என்றும், "திருமாலையல்லது தெய்வமென்று ஏத்தேன்" என்றும் கூறிய ஆழ்வார்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வந்தவர்களான நம்மில் சிலர் லௌகிகத் தேவைகளுக்காக 'குலதெய்வம்' என்ற பெயரில் தேவதாந்தர வழிபாடு செய்வது வெட்கக் கேடான விஷயம்.

"தேவ-பித்ரு-ரிஷி கடன்கள் குலதெய்வ வழிபாட்டால்தான் நிறைவேற்றப்படும் என்ற கட்டுரை ஆசிரியரின் கருத்து மிகவும் அபத்தமானது. இவரது கருத்துக்கு எந்த சாஸ்திரத்திலும் ஆதாரம் இல்லை. மேலும் தனது கருத்துக்கு வலிமை சேர்க்க ஆழ்வார்களை வேறு இழுக்கிறார் இவர். பகவான் ஸ்ரீமந்நாராயணனையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் கொண்டு அநந்ய சிந்தையோடு அவனையே அனுதினமும் வழிபடும் பரம பாகவதோத்தமர்களை பகவானுக்கு சரிசமமாக மதித்து வணங்கவேண்டும் என்பதுதான் ஆழ்வார்களின் கொள்கையே தவிர, குலதெய்வம் என்ற பெயரில் காளி கறுப்புக்களை வழிபடச் சொல்லி எந்த ஆழ்வார்களும் சொல்லவில்லை. அரைகுறை வைணவர்களை மேலும் வழிமாறச் செய்ய வழி காட்டுகிறார் கட்டுரை ஆசிரியர். வைணவர்கள் விழிப்புடன் இருப்பார்களாக!

குமுதம் பக்தி ஸ்பெஷலில் "ஸ்ரீவேணுகோபாலன்" என்பவர் 'கேளுங்கள் கொடுக்கப்படும்' என்ற தலைப்பில் ஒவ்வொரு மாதமும் வாசகர்களின் கேள்விகளுக்குப் பதில் அளித்து வருகிறார். ஜூன் மாத இதழில் "ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் வரும் 'சுக்லாம்பரதரம்' என்னும் ஸ்லோகம் விஷ்ணுவைப் பற்றியதா? பிள்ளையாரைக் குறித்ததா?" என்ற கேள்வியை ஒரு வாசகர் கேட்டுள்ளார். அதற்கு ஸ்ரீ வேணு கோபாலன் "ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு உரை எழுதிய ஆதி சங்கரர் இந்த ஸ்லோகத்துக்கு விளக்கம் எழுதாவிட்டாலும் பரமாச்சார்ய ஸ்வாமிகள் அனுக்கிரகித்து வழங்கிய நூலில் இதற்கு அர்த்தம் கீழ்க்கண்டவாறு கொடுக்கப்பட்டுள்ளது:—

'வெள்ளை ஆடையுடுத்து, சந்திரன் போன்ற நிறமும், நான்கு தோள்களும், யானை முகமும் உடையவராய் சர்வ வியாபியான விநாயகக் கடவுளை, எல்லா இடையூறுகளும் அற்றுப் போவதற்

காக தியானிக்கவேண்டும்' இதற்கு மாருக வைணவ வழியாக எழுதப்பட்ட 'பகவத் குண தர்ப்பணம்'' என்ற நூலில் பராசர பட்டர் இஸ்லோகம் விஷ்ணுவைப் பற்றியதாக அர்த்தம் செய்துள்ளார்'' என்று பதிலளித்துள்ளார்.

வாசகரது கேள்வி 'சுக்லாம்பரதம்' என்ற ஸ்லோகம் விஷ்ணுவைப் பற்றியதா? பிள்ளையாரைப் பற்றியதா? என்பது. கேள்வி கேட்டவரின் சந்தேகம் தீர்வதற்குரிய வகையில் இவர் பதில் சொல்லவில்லை. இந்த ஸ்லோகத்திற்கு ஸ்ரீபராசர பட்டரும் உரை எழுதவில்லை என்பதையே இவர் உணரவில்லை. வேறிடத்தில் உள்ள இந்த ஸ்லோகத்தை ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் சேர்த்து பக்தர்கள் பாராயணம் செய்து வருவதையும் இவர் உணரவில்லை. வடகலை வைஷ்ணவப் பிரிவைச் சேர்ந்த இவர் பரமாசார்ய ஸ்வாமிகள் என்று சமீபத்தில் மறைந்த காமகோடி பீடாதிபதியைக் குறிப்பிடுகிருர். அவர் காமகோடி பீடத்தைச் சார்ந்தவர்களுக்கு ஆசார்யரேயொழிய, சிருங்கேரி பீடத்தைச் சேர்ந்த அத்வைதிகளுக்கும், மத்வர்களுக்கும், வைஷ்ணவர்களுக்கும் சைவர்களுக்கும் ஆசார்யரல்லர் என்பதையே இவர் உணரவில்லை. ''அரனை மறவேல்'' என்று ஆத்திசூடியில் உள்ளதாக எழுதிய இப்பீடாதிபதிக்குத் தமிழறிவே சரியாகக் கிடையாது வடமொழியறிவும் அவருக்கு இல்லை என்பது ஸுதர்சனர் பதில்களில் நிரூபிக்கப்பட்டுள்ளது.

அவருடைய நூலில் உள்ள இந்த ஸ்லோக விளக்கத்தில் ''யானை முகம் உடையவராய்'' என்று உரையிட்டுள்ளார். 'யானை முகம் உடையவர்' என்பதற்கு அந்த ஸ்லோகத்தில் என்ன இடம் இருக்கிறது? ஒருவேளை 'ப்ரஸன்ன வதனம்' என்பதற்கு இவர் 'யானை முகம்' என்று பொருள் கொண்டிருக்கலாம். 'ப்ரஸன்ன வதனம்' என்பதற்கு 'தெளிந்த முகம்' என்றல்லவா பொருள் வரும்? ப்ரஸன்ன சப்தத்திற்கு 'யானை' என்னும் பொருள் 'அமரகோசம்'. 'வைஜயந்தீ' போன்ற ப்ராசீனமான நிகண்டுக்கள் எதிலும் இல்லை. ஏழாவது நூற்றுண்டுக்கு முற்பட்ட எந்த வடமொழி தென்மொழி இலக்கியத்திலும் சிவ புத்திரரான விநாயகரைப் பற்றிய பேச்சே இல்லை என்று ஸுதர்சனரும், பல தமிழறிஞர்களும் காட்டியுள்ளனர். பாரதத்தைப் பிள்ளையார் எழுதினுர் என்று கூறும் ஸ்லோகங்களும் இடைச் செருகலே

எனப் பழைய பதிப்புகளில் உள்ளது. இப்படியிருக்க, "விஷ்ணு என்னும் நாராயணனைக் குறிக்கும் பதமும், நாராயணனையே குறிப்பதாலே, ஐங்கரனை பிள்ளையாரைக் குறிக்கமாட்டாததான சதுர் புஜசபீதமும் இருப்பதைக் கொண்டு இந்த ஸ்லோகம் விஷ்ணுவைக் குறிப்பதே" என்று பதில் எழுதாமல், எவரோவொருவர் எழுதியதைக் காட்டி இது பிள்ளையாரைப் பற்றியது என்று எழுதும் இவரது பதில் நேர்மையானதுமல்ல; நடுநிலை நின்று எழுதியதுமல்ல. "திருமாலுக்கும் க்ருதயுகத்தில் வெளுத்த நிறம் உண்டு என்பதற்கு ப்ரமாணமாகப் பெரியவாச்சான்பிள்ளை திருநெடுந்தாண்டகம் (3) வ்யாக்யானத்தில் இந்த ஸ்லோகத்தை எடுத்திருக்கையாலும், ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் தொடக்கத்தில் எல்லா விஷ்ணு பக்தர்களாலும் அனுஸந்திக்கப்படுகையாலும் இந்த ஸ்லோகம் விஷ்ணுவைப் பற்றியதே" என்பதே சரியான பதில்.

தினபூமி-ஆன்மீகபூமி, 2—6—2000 இதழில் காமகோடி ஜெயேந்திர சரஸ்வதி 'மதமும் அமைதியும்' என்ற தலைப்பில் சில 'பொன்' (புன்) மொழிகளைக் கூறியுள்ளார்.

"உலக சரித்திரத்தில் பல தேசங்களில் பல மகான்கள் தோன்றிப் பரத்துவமாய் அமைந்த உண்மைகளை எடுத்துக்கூறி, தங்களைப் பின்பற்ற வைத்துப் பல்வேறு சமயங்கள் போலத் தோன்றினாலும் அவை எல்லாமே நம்முடைய பழைய வைதிக சமயத்தின் அடிப்படைக் கோட்பாடுகளைக் கற்றுத்தெளிந்து, தாங்கள் அறிந்த விதமாக விளக்கம் கூறி எடுத்துச் சொன்னார்கள் என்பதே உண்மை" என்று எடுத்த எடுப்பிலேயே கூறியிருக்கிறார் இவர். நல்ல மொழியறிவும் விஷயஞானமும் உள்ள ஒருவர் மேற்கண்ட இவரது வரிகளைப் படித்தால் இவர் குழப்பத்துடன் கூறியிருக்கிறார் என்ற முடிவுக்குத்தான் வருவர். மேலும் இவர் "கோட்பாடுகள் வேறுபட்டாலும் எல்லா மதங்களும் ஒன்றுதான். வேதத்தின் சாரமே எல்லா மதங்களும், பகவான் கீதையில் தன்னை எந்த ரூபத்திலும் வழிபடலாம் என்று கூறியுள்ளான். இதை உணர்ந்தால் மதச் சண்டைகள் வளராது" என்றும் கூறியுள்ளார். இனி இவரது நிலைப்பாட்டை சற்று அலசுவோம்.

ஏதோ இவர்கள் (காமகோடிகள்) தான் தேச ஒற்றுமையையும் உலக ஒற்றுமையையும் பாதுகாப்பவர்கள் போலவும், தம் மதாசார்யர்களின் வழி நின்று தம் மதநெறிகளை முறையாகக்

கடைப்பிடித்து ஒழுகுபவர்கள் எல்லாம் ஏதோ தேசிய ஒருமைப் பாட்டுக்குக் குந்தகம் விளைவிப்பவர்கள் போலவும் பேசுகிறார்கள் இவர்கள். இப்பீடாதிபதியின் ஆசார்யரான ஆதிசங்கரரே எல்லா மதமும் ஒன்றுதான் என்றோ, எல்லா மதமும் வேதசாரம்தான் என்றோ கூறவில்லையே? வைஷ்ணவத்தை மட்டும் வேதத்தை ஒட்டியது என்று ஏற்றுக்கொண்டு மற்ற மதங்களை எல்லாம் வேத விருத்தமானவை என்று தள்ளியவரல்லவா அவர்? அவர் வழிவந்தவராகத் தம்மைக் கூறிக்கொள்ளும் இப்பீடாதிபதி ஏன் இப்படி அபத்தமாகப் பேசுகிறார்? இவர் கருத்துப்படி பார்த்தால் பௌத்தம், சமணம், இஸ்லாம், கிறிஸ்தவம் முதலிய எல்லா மதங்களுமே வேதசாரம் என்றல்லவா ஆகிறது? இப்படிப் பேச இவருக்கு எப்படித் துணிவு வந்தது? இப்படிப் பேசும் இவர் எப்படி இருக்கவேண்டுமெனில் எல்லா மதச் சின்னங்களையும் நெற்றியில் அணிந்தவராய், இஸ்லாத்திற்காகத் தலையில் தொப்பி அணிந்து கொண்டு கிறிஸ்துவத்துக்காகக் கழுத்தில் சிலுவை மாலை அணிந்து சைவத்திற்காகத் தலையைச்சுற்றி ருத்ராட்சம் கட்டிக்கொண்டு சமணத்திற்காக உடலில் உடை ஏதும் அணியாமல் நிர்வாணமாகவும், பௌத்தத்திற்காக 'புத்தம் சரணம் கச்சாமி' என்ற சொற்களை வாயால் முணுமுணுத்துக் கொண்டும் இருக்கவேண்டும். தோற்றத்தில் இவர் இப்படி இருந்தால் எல்லா மதமும் ஒன்றுதான் என்று கூறும் கருத்துக்கு மிகவும் பொருத்தமானதாக இருக்கும். தம் கருத்துப்படி இவர் நடக்கிறார் என்று கருத வாய்ப்பு ஏற்படும். ஆனால் எல்லா மதமும் ஒன்றுதான் என்று கூறும் இப்பீடாதிபதி நெற்றியில் நீறு பூசி சைவராகவல்லவா காட்சி தருகிறார்? இதுதான் ருத்ராட்சப் பூனைக்கதை என்பதோ?

மனிதநேயம் மற்றும் சக மனிதனை சகோதரத்வத்துடன் அணுகுதல் போன்றவற்றை எம்மதமும் மறுக்கவில்லை. அதற்காக எந்த ஒரு மதப்பற்றுள்ள மனிதனும் தன் மதாசார்யர்கள் காட்டிய வழியிலிருந்து விலகவேண்டிய அவசியம் இல்லை. விலகுவதும் தவறானது. உதாரணமாக, ஒரு வைணவன் சாலை வழியாகச் சென்று கொண்டிருக்கும்போது ஒருவனைப் பாம்பு கடித்து விடுகிறது என்று வைத்துக்கொள்வோம். குறிப்பிட்ட நேரத்திற்குள் சிகிச்சை அளிக்காவிட்டால் பாம்பு கடிபட்டவன் இறக்க நேரிடும். அந்த நேரத்தில் உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும் அந்த மனிதனை அவனது சாதி மதம் பாராது பொதுவான மனிதநேய உணர்வோடு அந்த வைணவன் அவனை மருந்

துவமனைக்கு எடுத்துச்சென்று சிகிச்சை செய்ய உதவுகிறான். அவன் செய்த அந்த உதவியால் அம்மனிதன் உயிர் பிழைத்துக் கொள்கிறான். கஷ்டத்தில் இருந்தவனுக்கு வைணவன் உதவினான் என்பதற்காக அந்தக் கஷ்டத்தில் இருந்தவன் சார்ந்திருக்கும் மதக்கொள்கைகளையும் அந்த வைணவன் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துவது நியாயமாகுமோ? சக மனிதனிடம் அன்பு வைப்பதும், சக மனிதனால் அன்பு செய்யப்படுவதும் கஷ்டத்தில் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வதும் பொதுவான மனித நேய உணர்வு. இவ்வுணர்வை வேறுபட்ட மதக்கொள்கைகள் என்றுமே பாதிக்காது. இப்பொதுவான உணர்வோடு மதக் கொள்கைகளைத் தொடர்புபடுத்தும் பொழுதுதான் பிரச்சினை உருவாகிறது. மற்ற மதத்தை த்வேஷிக்காமல், தன் மதக் கொள்கையில் உறுதியாக நின்று, பிற மதத்தினரோடு கொள்கை விஷயத்தில் சகிப்புத்தன்மையோடு இருந்து வருவதுதான் ஒற்றுமைக்கு உயர்ந்த வழி. வேறுபட்ட மதக்கொள்கைகளைப் பின்பற்றும் மனிதர்கள் ஒன்றிணைய முடியும். ஆனால் வேறுபட்ட மதக்கொள்கைகள் என்றுமே ஒன்றிணைய முடியாது. சமரசம் என்ற பெயரில் 'எல்லா மதமும் ஒன்று என்று கூறுவது போலி வாதமும் மக்களை ஏமாற்றுவதும் ஆகும். மேலும் சங்கரர் போன்ற மதாசார்யர்களை எல்லாம் முட்டாளாக்குவதும் ஆகும். அச்சான்றோர்களின் கொள்கைகளுக்கு முரணாக எம்மதமும் சம்மதம்' என்று கூறும் இப்பீடாதிபதி கபட நாடக சுயநலவாதியே.

இதே பத்திரிகையில் இன்னோரிடத்தில் ''திருமாலும் சிவனும் ஒன்றே'' என்ற தலைப்புடன் கூடிய கட்டுரையில் பொய்கை ஆழ்வார் ''திருமாலும் சிவனும் ஒன்று. திருமாலை வணங்குவோர் சிவனை வெறுக்கவேண்டாம். சிவனைத் தொழுவோர் அரியைப் பழிக்கவேண்டாம்'' என்று கூறியுள்ளதாக எழுதப்பட்டுள்ளது. இக்கட்டுரை எழுதிய நபர் பெயரைப் போடவில்லை. பொய்கை ஆழ்வாரின் முதல் திருவந்தாதியில் உள்ள நூறு பாடல்களில் எந்த ஒரு பாடலிலும் ஆழ்வார் மேற்கண்ட கருத்தைச் சொல்லவில்லை. அப்படி இருக்கும்போது 'திருமாலும் சிவனும் ஒன்று' என்று பொய்கை ஆழ்வார் கூறியுள்ளார் என்று எழுதுவது ஆழ்வார்களை சமரச வாதிகளாகக் காட்டி மக்களைக் குழப்பமடையச் செய்யும் முயற்சியே ஆகும். எந்த ஆதாரமும் இன்றி இப்படி எழுதுவது வன்மையாகக் கண்டிக்கத்தக்கது. ஏற்கனவே இவ்வாதம் ஸுதர்சனரால் ஆதாரங்காட்டி மறுக்கப்பட்டுள்ளது,

16—6—2000 ஆன்மீகபூமி இதழில் சேலத்தைச் சேர்ந்த எம். ஈ. ஜீவரத்னம் என்பவர் ஸ்ரீகிருஷ்ணன் பாணாசுரனுடன் செய்த யுத்தத்தை ஹரியும் ஹரனும் ஒன்றுதான் என்பதை உலகத்தார் அறிய நடைபெற்ற சம்பவமாக வர்ணித்து ''அரக்கர் குலத்தோடு அமரர்குல பந்தம் உருவாக்கிய யுத்தம்'' என்ற தலைப்பில் சில அபத்தக் கருத்துக்களைக் கூறியுள்ளார். அவரது அபத்தக் கட்டுரையில் இடம்பெற்றுள்ள மிகமட்டமான அபத்தங்களில் சில வற்றை மட்டும் கீழே தந்து கண்டிக்கிறேன்.

''...பாணாசுர பட்டணத்தை முற்றுகையிட்டு போரைத் தொடங்கிவிட்டான் ஸ்ரீகிருஷ்ணன். கோட்டையின் முதல் வாயிலைக் காத்துக் கொண்டிருக்கிறார் மூலகணபதி. அவரைத் தாண்டிச் செல்லும் வழிமுறையை வகுக்கிறான் கண்ணன். சூரியதேவனைத் தன் தேரின் சாரதியாக்குகிறான். மஹா கணபதியின் குரு சூரிய பகவான். அத்யந்த தேஜஸ்ஸுடன் தன் எதிரே முன்னேறி வரும் தன் குரு சூரிய தேவனைக் கண்டதுமே தன்னை மறந்து நின்ற ஞான கணபதியை தரிசித்து அவன் அநுக்ரஹத்துடனேயே கோட்டையில் நுழைகிறான் கண்ணன். அடுத்த வாயிலின் காவல் தெய்வம் சண்முகன். அவன் பிரணவத்தின் மூலப்பொருள் என் பதுணர்ந்து பிரணவ மந்திரத்தைத் தன் பாஞ்ச சன்யத்தில் ஒலிக் கச்செய்து அவனையும் கடந்து பாணாசுர சேனாதிபதியான சிவனை சந்திக்கிறான் கண்ணன். ...ஹரிஹர யுத்தத்தில் கண்ணன் தான் எய்யும் அஸ்திரங்கள் அனைத்தும் சிவன் மீது வில்வ தளங்களாக விழும்படி செய்கிறான். ...கண்ணனின் அடுத்த அஸ்திரம் பாணா சுரனைத் தாக்கி அழிக்கும் முன்பு சிவபெருமான் கண்ணனைத் தடுத்து அவன் பிரகலாதனுக்குக் கொடுத்த வரத்தை நினைவூட்டு கிறார். சிவபெருமான் நியமனப்படி கண்ணன் பாணாசுரனைக் கொல்லாமல் விடுகிறான். அப்போது தன்னைக் காப்பாற்றிய சிவன் பாதங்களில் விழுந்து வணங்குகிறான் பாணாசுரன். அப் போது அங்கே ஹரியின் பாதம் ஒன்றாகவும் ஹரனின் பாதம் ஒன்றாகவும் இருக்கக் கண்டான்...'' இது அவரது கட்டுரை வரி களில் சில.

படு முட்டாள் தனமான கற்பனைவளம் மிக்கவர்களில் சிறந்த வர் எம். ஈ. ஜீவரத்னம் என்பதற்கு இவ்வரிகளே சான்று. எந்த

நூலிலும் கூறப்படாத பிரமாண விருத்தமான செய்திகளை இவ்வளவு துணிச்சலாக இவர் சொல்லக் காரணமென்ன? ஆன்மிக விஷயத்தில் எதைச் சொன்னாலும் மறுப்பின்றித் தலையாட்டுகின்ற ஒரு (செம்மறியாட்டுக்) கூட்டம் நம் நாட்டில் உள்ளது என்பது ஒரு காரணம். இரண்டாவது காரணம் எம். ஈ. ஜீவரத்னம் ஒரு சைவர் மற்றும் சிவாபிமானி, இனி இவரது கருத்து அபத்தமானது என்பதை நிரூபிப்போம்.

ஸ்ரீகிருஷ்ண-பாணாசுர யுத்தவர்ணனம் ஸ்ரீமத் பாகவதம்-தசமஸ்கந்தம் அறுபத்து மூன்றாம் அத்யாயத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதில் கூறப்பட்டுள்ள விஷயங்களின் ஸாரத்தைச் சுருக்கமாகக் கீழே தருகிறேன்.

''ஸ்ரீகிருஷ்ணனின் பேரனான அநிருத்தன் பாணாசுரனின் மகளான உஷாவைக் காதலிக்கிறான். இதையறிந்த பாணாசுரன் அநிருத்தனைச் சிறையில் அடைத்து விடுகிறான். இச்செய்தியை நாரதர் மூலம் அறிந்த ஸ்ரீகிருஷ்ணன் தனது யாதவ சைந்யத்துடன் வந்து பாணாசுரனின் கோட்டையை முற்றுகையிடுகிறார். சிவன் தான் பாணாசுரனுக்குக் கொடுத்தவரத்தின்படி அவனது கோட்டையைத் தனது சமஸ்த பூத கணங்களுடன் பாதுகாக்கிறார். யுத்தம் தொடங்குகிறது. யாதவ சைந்யம் சிவகணங்களை அடித்துத் துரத்துகிறது. ஸ்ரீகிருஷ்ணனின் மகனான பிரத்யும்னன் மயூர வாகனனான முருகனை நையப்புடைக்கிறார். உடலிலிருந்து ரத்த வெள்ளம் பெருக, புறமுதுகிட்டு ஓடுகிறார் தேவசேனாதிபதி. கணபதி முதலான சிவகணங்களையும் அடித்துத் துரத்துகிறார் பிரத்யும்னர். சிவனுக்கும் ஸ்ரீகிருஷ்ணனுக்கும் பயங்கர யுத்தம் நடக்கிறது. சிவனது ஒவ்வொரு அஸ்திரத்திற்கும் தக்க பதிலடி கொடுக்கிறார் ஸ்ரீகிருஷ்ணன். இறுதியில் ஜ்ரும்பணாஸ்திரத்தால் சிவனை மயக்கமடையச் செய்து விடுகிறார் ஸ்ரீகிருஷ்ணன். சிறிது நேரத்தில் மயக்கம் தெளிந்தெழுந்த சிவன் ஜ்வராஸ்திரங்களைப் பிரயோகிக்க அவற்றையும் தக்க முறையில் கண்டித்து விடுகிறார் ஸ்ரீகிருஷ்ணன். பிறகு பாணாசுரனை ஸம்ஹரிக்க தனது சுதர்சனத்தைப் பிரயோகிக்கிறார் ஸ்ரீகிருஷ்ணன். பயங்கரமான அக்னிஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டு வரும் ஸ்ரீசுதர்சனாழ்வானது வெப்பத்தைத் தாங்கமுடியாமல் தேவ சேனாதிபதியான கார்த்திகேயன் (சிவநேசர்களே! இவரது வாகனமான மயிலா வைகுண்டத்தை அழிந்தது?) கணபதி (சிவாபிமானிகளே! இவரா சுதர்சனத்தை

விழுங்கியவர்?) மற்றுமுள்ள சிவ கணங்கள், கோட்டையின் காவல் தெய்வமான காளி (சக்தி உபாசகர்களே! நீங்கள் சொல்லும் இவளா ஆதிபராசக்தி) ஆகிய எல்லோரும் தங்கள் தங்கள் பின் கால்கள் பிடரிகளில் அடிக்க ரணபூமியைவிட்டு ஓட்டம் பிடித்தார்கள். இதைக் கண்டு சிவனும் அவர்களைப் பின் தொடர்ந்தார். அப்போது பாணாசுரனது கரங்களை ஸ்ரீசுதர்சனாழ்வார் வெட்டித் தள்ளிக்கொண்டிருந்தார். அதைக் கண்ட உமாபதியான சங்கரர் தான் பாணாசுரனுக்குக் கொடுத்த வரம் வியர்த்தமாகிவிடுமே எனப் பயந்து ஸ்ரீகிருஷ்ணன் முன் ஓடி வந்து அவரை வணங்கி ஸ்ரீபுருஷ ஸூக்த மந்திரங்களால் அவரை ஸ்தோத்திரம் செய்து தான் கொடுத்த வரம் வீணாகாதிருக்க பாணாசுரனைக் கொல்லாமல் விடவேண்டும் என்று பிரார்த்தித்தார். பசுபதியின் பிரார்த்தனைக்கு மகிழ்ந்தே ஸ்ரீகிருஷ்ணன் தான் பிரகலாதனுக்குக் கொடுத்த வரத்தையும் மனத்திற்கொண்டு பாணாசுரனைக் கொல்லாமல் விட்டார்''— இப்படித்தான் ஸ்ரீமத் பாகவதத்தில் உள்ளது.

தான் சைவர் என்பதற்காக உண்மையைத் திரித்து, கன்னு பின்னு என்று எழுதிக் கயிறு திரிக்கும் வேலையில் இறங்கியுள்ள எம். ஈ. ஜீவரத்தினத்தை மஹா பாகவதனான கங்காதரனே மன்னிக்கமாட்டான். பெரும்பான்மையான மக்கள் படிக்கும் பத்திரிகைகளில் இம்மாதிரியான அபத்தக் கட்டுரைகளை வெளியிடுவது வன்மையாகக் கண்டிக்கத் தக்கது. ஆன்மீகபூமி நிர்வாகிகள் கவனத்திற்கொள்வார்களாக.

ஞானபூமி ஜூலைமாத இதழில் 'சுதர்சன சக்கரத்தைப் பெறத் திருமால் சிவனைத் தன் கண்ணைப் பிடுங்கி அர்ச்சித்தார்' என்ற கதையும், 21—7—2000 ஆன்மீகபூமி இதழில் அடிமுடி தேடிய கதையும், ராவணனை வெல்ல ராமன் சக்தியை வழிபட்டார் என்ற தேவி பாகவதக் கதையும் கட்டுரை ஆசிரியர் பெயர் குறிப்பிடப் படாமல் வெளியிடப்பட்டுள்ளன. இப்படிப்பட்ட விஷ்ணு தூஷணக் கதைகள் ஏற்கனவே பலமுறை ஸ்ரீஸுதர்சனர் அவர்களால் தக்க ஆதாரங்களுடன் மறுக்கப்பட்டுக் கண்டிக்கப்பட்டுள்ளன. எனினும் இப்பத்திரிகைகள் திருந்துவதாகத் தெரியவில்லை. வேதங்களால் சிவ பரத்வத்தை நிலைநாட்ட வக்கில்லாதவர்கள் உண்மைக்குப் புறம்பான கட்டுக்கதைகளைக் கூறி மக்களை மூளைச் சலவை செய்து வருகின்றனர். இம்மாதிரி பேர்வழிகளின் கட்டுரைகளை, பெரும்பாலோர் படிக்கும் பத்திரிகைகளில் பிரசுரிப்பது

வன்மையாகக் கண்டிக்கத் தக்கது. வேதங்கள், அவற்றுக்குச் சரியான உரைகளான இதிஹாஸ புராணங்கள், சங்க இலக்கியங்கள் இவற்றிலெல்லாம் இப்படிப்பட்ட அபத்தக் கதைகளுக்குத் துளிகூட ஆதாரமில்லை. ஏன், சிவ பக்தர்களான காளிதாஸன் முதலியோரின் படைப்புக்களில்கூட இம்மாதிரிக் கதைகள் இடம் பெறவில்லை. நிலை இப்படியிருக்க, ஸ்வமதாபிமானத்தால் ஆதாரமின்றி எழுதும் பேர்வழிகளின் கட்டுரைகளை இப்பத்திரிகைகள் வெளியிடுவது மிகவும் கண்டனத்துக் குரியது. பத்திரிகை நிர்வாகிகள் நாகரிகம் தெரிந்தவர்களாக, உண்மைக்கு மதிப்புக் கொடுப்பவர்களாக இருந்தால் நமது கருத்தைக் கவனத்திற் கொள்வர்.

இன்றைய தகவல் தொடர்பு சாதனங்களில் மிக முக்கியமான ஒன்று தொலைக்காட்சி. இதுவும் சமீப காலமாக ஆன்மிக விஷயங்களில் நேர்மையற்றுச் செயல்படுகிறது. சராசரி மக்கள் உட்பட எல்லோராலும் பார்க்கப்படும் சென்னை மற்றும் தூர்தர்ஷன் ஒளிபரப்புகளில் பெரும்பாலும் விஷ்ணு வைஷ்ணவ தூஷணக் கருத்துக்கள் கொண்ட தொடர்களே ஒளிபரப்பப்படுகின்றன. விஷ்ணுவுக்கு ஏற்றம் சொல்லக்கூடிய கதையாக இருந்தாலும் அதிலும் சில மாறுதல்களைச் செய்து விஷ்ணுவுக்குத் தாழ்வு ஏற்படுமாறு சில காட்சிகளைக் கற்பனையாக இணைத்து விடுகின்றனர். யாராவது ஒரு இயக்குனர் விஷ்ணுவின் பரத்வத்தை ஒளிவு மறைவின்றித் தன் தொடரின் மூலம் சொல்ல நினைத்தாலும் அத்தொடரை இடையில் நிறுத்திவிடுகின்றனர் சிலநாட்களுக்கு முன் நிதிஷ் பரத்வாஜ் என்ற ஒரு வட இந்தியர் கீதா ரஹஸ்யம் என்ற ஒரு தொடரை எடுத்து அதை தூர்தர்ஷனில் ஒளிபரப்பி வந்தார். அத்தொடரை மிகச்சிறந்த முறையில் விஷ்ணு பரத்வத்திற்குக் கொஞ்சம் கூட பங்கம் வராமல் தெளிவாக எடுத்திருந்தார். ஆனால் சில சைவ விஷமிகளின் தூண்டுதலின் பேரில் அத்தொடர் இடையிலேயே நிறுத்தப்பட்டுவிட்டது. மேலும் அரசுத் தொலைக்காட்சியைப் பெரும்பாலும் சைவர்களே ஆக்ரமித்துள்ளனர். சிவனுக்குத் தாழ்வு வருமாறு எடுத்தால் பெரும்பான்மையாக உள்ள சைவர்கள் கோபிப்பார்கள் என்றால், விஷ்ணுவுக்குத்தாழ்வு வருமாறு எடுத்தால் வைணவர்களுக்குக் கோபம் வராதா? ஏன் வரத்தான் கூடாதா? சிவனுக்குத் தாழ்வு வருமாறு காட்சிகளை அமைக்கவேண்டும் என்று நாம் சொல்லவில்லை. திருமாலுக்கு வேதத்தில் சொல்லப்பட்ட ஏற்றத்தை ஒளிவு மறைவின்றிச்

சொல்லவேண்டும் என்று தான் நாம் கூறுகிறோம். சில வருடங் களுக்கு முன் கிறித்துவமத வேத நூலான பைபிளை அடிப்படை யாக வைத்து ஒரு தொடர் தூர்தர்ஷனில் ஒளிபரப்பப்பட்டது. அதில் சில காட்சிகள் பைபிளுக்கு முரணாக உள்ளது என்று எடுத்துக்காட்டி நீதிமன்றத்தின் மூலம் அத்தொடர் மேலும் ஒளி பரப்ப முடியாதபடி தடை செய்து விட்டனர் சிலர். இப்படி மற்ற மதத்தினருக்கெல்லாம் மத விஷயத்தில் சொரணை இருக்கும் பொழுது நம் மக்களுக்கு மட்டும் ஏன் அந்த உணர்வு இல்லை? ''மற்ற மதத்தவருக்கு ஒரே நூல் தான் உள்ளது. ஆனால் நம் மதத்தில் ஏராளமான நூல்கள் உள்ளன. அவை கருத்தில் ஒன் றுக்கொன்று முரண்பட்டு இருக்கின்றன. ஒரு நூல் சிவன் பெரிய வர் என்று சொன்னால், மற்றொரு நூல் விஷ்ணு பெரியவர் என்று கூறுகிறது. ஆகவே நூல்களை அடிப்படையாக வைத்துத்தான் தொடரை எழுதுகிறோம்'' என்று இத்தொடர்களைத் தயாரிக்கும் தயாரிப்பாளர்களால் சமாதானம் சொல்ல இயலும். அவர்களுக்கு நாம் கூறுவது என்னவென்றால், நம் மதத்தில் உள்ள எல்லா நூல் களுமே வேதத்தை அடிப்படையாகக் கொண்டவை அல்ல. சில, வேதங்களை அடிப்படையாகக் கொண்டவை. சில வேதங்களுக்கு முரணானவை. எவையெல்லாம் வேதத்தின் ஸாரமான நூல்கள் என்பதையும் எவையெல்லாம் வேதத்திற்கு முரணானவை என்பதை யும் மிகத் தெளிவாக ஆதிசங்கரர் முதலிய சான்றோர்கள் இனங் கண்டு நமக்குக் காட்டியுள்ளனர். நமது சநாதன வைதிக சம யத்தின் ஆன்மிக அறிவை வேதத்திலிருந்தும், வேதக்கருத்துக்கு முரண்படாமல் உள்ள மற்ற இதிஹாஸ புராணங்களிலிருந்தும்தான் பெறமுடியும் என்றும், வேதத்துக்குப் புறம்பானதாக இருந்தால் அந்நூல் யார் செய்ததாயினும் தள்ளத்தக்கதே என்றும் கல்வெட் டாகக் கூறியுள்ளனர் நம் சான்றோர். ''எந்தப் புளுகும் கந்தபுரா ணத்தில்'' என்னும் வாக்கியமும் பொதுமக்களிடையே வழங்கி வருகிறது. இதையெல்லாம் கவனத்திற் கொள்ளாமல், தன் சொந்தக் கருத்துக்கேற்றபடி தொடரின் காட்சிகளை அமைத்து அதற்கு ஆதாரம் இருப்பதாக ஏதோ ஒரு அபத்தப் புராணத்தைக் காட்டி, சில தயாரிப்பாளர்கள் தங்கள் தொடர்களை ஒளிபரப்ப தூர்தர்ஷனை அணுகுகின்றனர். அரசுத் தொலைக்காட்சி நிலையத்தை ஆளுமை செய்பவர்களும் பெரும்பா லும் விஷ்ணுத்வேஷிகளாகவும் சிவாபிமானிகளாகவும் இருப்ப தால், கிராமப்புற மக்கள் உட்பட சகல ஜனங்களும் பார்க்கும் அந்தச் சேனலில் இவ்விதமான அபத்தத் தொடர்களை ஒளிபரப்பு

கிரூர்கள். தொலைக்காட்சி நிலையத்தினரின் இந்த அடாத செயலைக் கண்டித்து வைஷ்ணவ உணர்வுள்ள அனைவரும் தொலைக் காட்சி நிலைய இயக்குனர்களுக்குக் கண்டனக் கடிதம் எழுத வேண்டும். இக்கண்டனக் கடிதங்களால் தொலைக்காட்சி நிலையத்தாரின் போக்கில் மாற்றம் தெரியாவிடில் இவ்வபத்தத் தொடர்களை நிறுத்தக்கோரி நீதிமன்றத்தின் வாயிலை அடைவதுதான் சாலச் சிறந்தது. தீவிர வைஷ்ணவ உணர்வுள்ள செல்வந்தர்களை இப் பிரச்சினையை கவனத்திற் கொள்ளுமாறு பிரார்த்திக்கிறேன். எல்லோருக்கும் பொதுவான அரசுத் தொலைக்காட்சி நிலையம் உண்மைக்கு மதிப்பு அளிக்காமலும், சிறுபான்மையோரான வைஷ்ணவ மக்களின் மனம் புண்படும்படியும் நடந்துகொள்வது வன்மையாகக் கண்டிக்கத்தக்கது.

## ஸுதர்சனம் ஆசிரியரின் குறிப்பு

"சே. பத்மநாபன் (ஹோரா சாஸ்திரக்கலைஞர்); இரும்பாநாடு அஞ்சல். ஏம்பல் வழி, புதுக்கோட்டை மாவட்டம்-622 204" என்னும் முகவரியுடைய நமது நண்பரால் எழுதப்படும் இராம பாணக் கட்டுரை வைணவவுலகில் பெருத்த வரவேற்பைப் பெற்று வருகிறது. நம் நாட்டில் பொதுஜனப் பத்திரிகைகளும், தொலைக் காட்சிகளும், திரைப்படங்களும் வைணவ விரோத மனப்பான்மையுடன் உண்மைக்கு முரணாகப் பல செய்திகளைப் பரப்பி வருவதை நாம் பல வருடங்களாக ஸுதர்சனத்தின் மூலம் எடுத்துக்காட்டி வருகிறோம். ஆயினும் எவரும் கண்டு கொள்வதில்லை. தொலைக் காட்சியில் வால்மீகி, வியாஸர் போன்ற விஷ்ணு பக்த முனிவர்களையும் நீறு பூசியவர்களாகவே காட்டுகின்றனர். சமீபத்தில் "யாமறிந்த புலவரிலே" என்னும் தலைப்பில் கம்பரைப் பற்றி ஒளி பரப்பும்போது, அவரைப் பட்டை பட்டையாக விபூதியணிந்தவராகக் காட்டிவிட்டு, இராமாயணத்தை அரங்கேற்றும்போது மட்டும் அவரைத் திருநாமம் அணிந்தவராகக் காட்டினார்கள். 'இவர்கள் சந்தித்தால்' நிகழ்ச்சியில் பெரியாழ்வாரைச் சித்திரிக்கும் போது, எல்லாக் கோயில்களிலும் அவர் பூர்வசிகை (முன் குடுமி) யோடு காட்சியளிப்பதற்கு முரணாகப் பின் குடுமியுள்ளவராகக் காட்டினர். இதை நாம் எடுத்துக்காட்டியபோதும் எந்த பதிலும் நிலையத்தாரிடமிருந்து வரவில்லை. வரலாற்று நாயகர்களையும், புராண புருஷர்களையும், திரைப்படங்களிலும், தொலைக்காட்சியிலும் காட்டும்போது உண்மைக்கு ஊறு விளைவிக்கக் கூடாது என்னும் நேர்மை உணர்ச்சி இவர்களுக்கு என்றுதான் வருமோ?

சென்னையிலிருந்து வெளிவரும் ''காமகோடி'' செப்டம்பர்-2000 இதழில் டில்லி பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டாக்டர் சிவப்ரியா என்பவர் ''சிவகளிறுப் பிள்ளையார்'' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அக்கட்டுரையில் உள்ள அபத்தக் கருத்துக்களைக் கீழே தந்து கண்டிக்கிறேன்.

''எல்லா உலகங்களும் அழியும் ஊழிக்கால முடிவில் பிரம்ம விஷ்ணுக்களின் கபாலங்களை (மண்டை ஓடு) தாங்கி நிற்கும் கோலத்திற்கு 'கபாலி' என்று பெயர் ... பரமனுடைய பல்வேறு கோலங்களிலே கணேச வடிவமும் ஆறுமுகக் கோலமும் தனித்து வழிபட்டபோது, கணேசனும் ஆறுமுகனும் மகன் (பிள்ளை, சேய்) என்று கூறப்பட்டனர். ...சிவனது ஆனைமுக வடிவுக்கு கஜானனன் என்று பெயர். சிவன் யானை முகத்தோடு தோன்றிய போது ஆனைமுகன் தோன்றினன். சிவன் ...ஆறுமுகத்தோடு தோன்றிய போது ஆறுமுகன் தோன்றினன்.

''சங்க இலக்கியமான கல்லாடத்தில் கடவுள் வாழ்த்தில் நீண்ட பிள்ளையார் வணக்கம் உள்ளது. மற்றொரு சங்கப் பாடலான திருமுருகாற்றுப்படை பிள்ளையாரை தும்பிக்கையானாகவும் முருகனுக்கு மூத்தவனாகவும் போற்றுகிறது. பரிபாடல் ''ஐங்கர மைந்தனை'' என்று குறிக்கின்றது. கபிலர், அதிரா அடிகள் ஆகிய சங்கப்புலவர்களின் பாடல்கள், தேவாரம் மற்றும் ஔவையார் நம்பியாண்டார் நம்பியின் பாடல்கள் இவற்றையெல்லாம் பொருள் புரிந்து ஓதினால்,...பிள்ளையார் வழிபாடு பிற்காலத்தில் எழுந்தது எனக் கதையளக்கும் ஆய்வாளர்கள் மற்றும் ஆசிரியர்கள் பின்னால் ஓடி பொய் எல்லாம் மெய் என்று எண்ணும் மயக்கம் தெளிந்து விடும்'' என்பது அக்கட்டுரையின் சில வரிகள்.

பிரம்ம விஷ்ணுக்களின் கபாலங்களை ஊழிக்காலத்தில் ஏந்தியுள்ளதாலேயே சிவன் 'கபாலி' என்று பெயர் பெற்றான் என்று முற்றிலும் பிரமாண விருத்தமாக எழுதுகிறார் கட்டுரை ஆசிரியர்

சிவப்ரியா. ஊழிக்காலத்தில் பிரம்மன் சிவன் முதலிய தேவர்கள் அனைவரும் மஹாவிஷ்ணுவிடம் ஒடுங்கிவிடுகின்றனர். ஊழியில் பகவான்விஷ்ணு ஒருவனே இருந்தான். வேறு யாருமே இல்லை என்று வேதமே மஹோபனிஷத்தில் "ஏகோஹவை நாராயண ஆஸீந்ந ப்3ரஹ்மா நேஸாந:" என்று பறைசாற்றுகின்றது. வேதத்தைத் தழுவிய இதிஹாஸ புராணங்களும் இப்படியே சொல்லுகின்றன. பிரம்மனின் தலையைக் கிள்ளியதால் பிரம்மஹத்தி தோஷம் பிடித்து, கபாலியாக அலைந்த சிவன் கபாலநன் மோக்கத்திற்காக பகவான் விஷ்ணுவை வழிபட்டு தோஷ நிவ்ருத்தி பெற்றான் என்பது உலகப்ரசித்தம். விஷ்ணுசித்த விஜயத்தில் ஆயிரக்கணக்கான பக்கங்களில் ஸுதர்சனர் விஷ்ணுவே முழுமுதல்வன் என்பதை நிலைநாட்டியுள்ளார். பிரமாணங்கள் இவ்வண்ணமிருக்க, எந்த ஒரு நூலையும் ஆதாரம் காட்டாமல் தன் மனம் போனபடி எழுதும் சிவப்ரியாவை ஒரு அபத்த எழுத்தாளர் என்றுதான் சொல்ல வேண்டும். அடுத்து, 'சிவனே ஆறுமுகனாகவும் யானைமுகனாகவும் ஆகிறார்' என்று முன்பின் யோசிக்காமல் எழுதுகிறார் இவர். ஆதி காவ்யமான வால்மீகி ராமாயணத்திலும் சங்க இலக்கியமான ஐந்தாம் பரிபாடலிலும் சிவனும் பார்வதியும் புணர்ந்தே முருகனைப் பெற்றனர் என்று கூறப்பட்டுள்ளது. 'டாக்டர்' சிவப்ரியாவுக்கு இது தெரியவில்லை போலும். அல்லது தெரிந்தே உண்மையை மறைக்கிறாரோ என்னவோ? இது ஒருபுறமிருக்கட்டும். இவரது கூற்றையே சற்று அலசுவோம். சிவனே ஆறுமுகனாகவும் யானைமுகனாகவும் ஆகிறார் என்று கூறும் இவர், சிவனுக்கு மனைவியாகவும், ஆறுமுகனுக்கும் யானைமுகனுக்கும் தாயாகவும் உலகத்தாரால் அறியப்படும் பார்வதியின் நிலையில் எந்த மாற்றத்தையும் சொல்லவில்லையே? ஏன்? இவர் கூற்றுப்படி பார்த்தால், பார்வதி சிவனுக்கு மனைவியாகவும் தாயாகவும் இருக்கிறாள் என்றல்லவா ஆகிறது? ஒரு பெண் ஒருவனுக்குத் தாயாகவும், மனைவியாகவும் எப்படி இருக்கமுடியும்? தாயிடம் பாலருந்தும் பிள்ளைகள் உருமாறி அந்தத் தாயையே மனைவியாக பாவித்துப் புணரலாமோ? இதையெல்லாம் சிந்திக்காமல், ஆறுமுகனும் யானைமுகனும் சிவன்தான் என்று எழுத சிவப்ரியாவுக்கு எப்படித்

துணிவு வந்தது? எதையோ சொல்ல வந்த இவர், எதையோ சொல்லி சிவகுடும்பத்திற்குக் களங்கத்தையல்லவா கற்பித்து விட்டார். இது சைவர்கள் சிந்திக்க வேண்டிய விஷயமாயினும், விஷ்ணுத்வேஷியான இந்த சிவப்ரியாவின் புத்திக் கூர்மையைத் தெளிவாக்கும் நோக்குடன் இது குறித்து இவ்வளவு எழுத வேண்டியதாயிற்று.

அடுத்தபடியாக, பிள்ளையார் வழிபாடு பற்றி இவர் கூறும் கருத்தை அலசுவோம்.

கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்குப் பின்னரே தமிழ்நாட்டில் பிள்ளையார் வழிபாடு வந்தது என்றும், பல்லவ மன்னனின் தளபதியான பரஞ்சோதி என்பவர் வாதாபியிலிருந்து கணபதி உருவத்தைத் தமிழகத்திற்குக் கொண்டுவந்த பின்பே சைவத்தில் பிள்ளையார் புகுந்தார் என்றும், அதற்குப் பின்னரே பிள்ளையாரைப் பற்றிய புராணங்கள் கற்பிக்கப்பட்டன என்றும், வைணவத்தில் விஷ்வக்ஸேனரின் தளபதிகளில் ஒருவரான கஜானனருக்கு யானைமுகம் இருப்பதைக் கொண்டு, 'வைணவக் கோயில்களில் நம் விநாயகரே தும்பிக்கை ஆழ்வாராக உள்ளார்' என்று சைவர்கள் கற்பித்து விட்டனர் என்றும், கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னுள்ள எந்த வடமொழி தென்மொழி நூல்களிலும் பிள்ளையாரைப் பற்றிய பேச்சே இல்லை என்றும், பிள்ளையார் என்ற ஒரு தெய்வமே கல்பிதம் என்றும் ஸ்ரீஸு"தர்சனர் முதலான அனைத்துத் தமிழ் நடுநிலை ஆராய்ச்சியாளர்களும் ஒருமித்துக் கூறுகின்றனர். சரியான ஆதாரங்களுடன் அசைக்கமுடியாமல் நிரூபித்துள்ள இவர்களது முடிவு என்னும் மலையை, தன் சிற்றறிவு கொண்ட தலையால் முட்டித் தன் மண்டையை உடைத்துக் கொள்ளப் பார்க்கிறார் சிவப்ரியா. இனி சிவப்ரியா தன் கருத்துக்கு ஆதாரமாகக் கூறும் விஷயங்களைப் பார்ப்போம். கல்லாடம் சங்க இலக்கியமன்று. சங்க இலக்கியகாலம் என்பது கி.மு. 500 முதல் கி.பி. 200 வரை என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்து. கல்லாடம் என்ற நூல் தோன்றியது கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்குப் பிறகு. இந்நூலை இயற்றியவர் கல்லாடர் என்பவர்.

இராமாயணமும் பாரதமும் தமிழ் வடிவம் பெற்று வந்த நேரத்தில் வைணவர்களுக்குப் போட்டியாக சைவர்களும் கற்பனையாக சிவனது திருவிளையாடல்களைத் தமிழ்க் காப்பியங்களாக்க முனைந்தனர். அந்த முயற்சியே கல்லாடம் என்ற நூல். சிவனது திருவிளையாடல்களைக் கூறும் இந்நூல் அகவற்பாவில் நூறு செய்யுட்களைக் கொண்டது. அது சங்க இலக்கியமாகிவிடாது. அது தோன்றிய காலமே முக்கியம். கல்லாடம் இயற்றப்பட்ட நேரத்தில் பிள்ளையார் சைவத்தில் பிரசித்தி பெற்றுவிட்டார். அதனுல் அதில் பிள்ளையாரைப் பற்றிய பாடல் இருப்பது வியப்பல்ல. ஆகவே கல்லாடத்தை வைத்து 'பிள்ளையார் வழிபாடு பிற்காலத்தில் எழுந்தது' என்ற ஆராய்ச்சியாளர்களின் ஒருமித்த முடிவை அசைத்து விட முடியாது. திருமுருகாற்றுப் படையிலும் பரிபாடலிலும் விநாயகர் பற்றிய குறிப்பு இருப்பதாகக் கூறும் இவர் அக் குறிப்பு இருக்கும் பாடல்வரிகளை எடுத்துக்காட்டவில்லை. சான்று காட்டாமல் கருத்துக் கூறுவது அயோக்கியத்தனம், அடி முட்டாள் தனம் என்பதை இவர் உணரவில்லை. மேலும் சங்ககாலக் கபிலர் தன் பாடல்களில் எந்தப் பாடலில் விநாயகரைப் பற்றிக் கூறியுள்ளார் என்று இவர் காட்டவேண்டும். அதிரா அடிகள் என்ற பெயரில் ஒரு சங்கப்புலவர் இருந்ததாக இதுவரை நாம் கேள்விப்படவே இல்லை. சிவப்ரியாதான் இவர் யார் என்று சொல்லவேண்டும். தவிர ஔவையார், நம்பியாண்டார் நம்பி, தேவார மூவர் இவர்கள் காலத்தில் சைவத்தில் பிள்ளையார் பிரசித்தி பெற்றுவிட்டதால் இவர்களது பாடல்களில் பிள்ளையார் பற்றி இருப்பது வியப்பல்ல. தமிழ் ஆராய்ச்சியாளர்களைச் சாடும் சிவப்ரியாவின் கருத்துக்கு எவ்வித ஆதாரமும் இல்லை. ஆதாரம் அவர் காட்டவும் இல்லை. பொய்யை மெய்யென எண்ணும் மயக்கம் சிவப்ரியாவுக்குத்தான் இன்னும் தெளியவில்லை. சிவப்ரியாவுக்கு "டாக்டர்" பட்டம் எந்தத் துறையில் ஆய்வு செய்ததற்காகக் கொடுத்தார்கள் என்று தெரியவில்லை. ஒருவேளை தமிழ் இலக்கியத்துறை ஆய்வுக்காக அவருக்கு டாக்டர் பட்டம் வழங்கியிருந்தால் அது மறுபரிசீலனைக்கு உரியது. அல்லது இவர் பணம் கொடுத்து அந்தப் பட்டத்தை வாங்கியிருப்பாரோ என்ற சந்தேகமும் எழுகின்றது.

•

அதே இதழில் 'ஸ்ரீபரமாச்சார்யாள் பாதையிலே (ஆர்பி)' என்ற தலைப்பில் மறைந்த காமகோடிப் பெரியவரின் வேத விருத்தக் கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். காமகோடிப் பெரியவர் வாழ்ந்த காலத்திலேயே அவரது கருத்துக்கள் ஸ்ரீசுதர்சனர் அவர்களால் ஆதாரபூர்வமாக மறுக்கப்பட்டுக் கண்டிக்கப்பட்டு விட்டன. ஆகவே அக்கருத்துக்கள் செத்த பாம்பாகிவிட்டன. ஆனால் செத்தபாம்பைப் பிழைக்க வைக்கும் முயற்சிபோல் அவரது கருத்துக்களைத் திரும்பத் திரும்ப ஆன்மிகப் பத்திரிகைகள் வெளியிட்டு வருகின்றன. அதனால் அக்கருத்துக்களை மறுபடியும் நாம் வன்மையாகக் கண்டிக்கவேண்டியுள்ளது—

''காமகோடி'' செப்டம்பர்-2000 இதழில் காமகோடிப் பெரியவரின் கருத்தாகக் கீழ்க்கண்டவாறு உள்ளது.

''விநாயக புராணத்திற்கு பார்க்கவ புராணம்னு ஒரு பேருண்டு. ஒரு தடவை மகாப்ரளயம் வந்தபோது...ஸப்த லோகங்களும் தண்ணீரிலே மூழ்கிப் போச்சு. மும்மூர்த்திகளும் ஒரே மூர்த்தி ஆயிட்டா. அப்போ வக்ரதுண்டராக விநாயகம் வெளிப்பட்டு லோகங்களை சிருஷ்டி பண்ணினதா பார்க்கவ புராணம் சொல்றது. ...விநாயகரோட உதரத்திலே சகல புவனங்களும் அடங்கி இருந்தது. .. தும்பிக்கை வழியா பிரம்மாவையும் இரண்டு காதுகள் வழியா விஷ்ணு, ருத்திரனையும் வெளியே அனுப்பினார் கணபதி. புவனம் உற்பத்தி பண்றது விஷ்ணுவா, பராசக்தியா, பிள்ளையாரா என்று குழம்ப வேண்டாம். ...அப்பப்போ ஒவ்வொருத்தருக்கு முக்கியத்துவம் கிடைக்கும்.

''மஹாவிஷ்ணு மதுகைடபயுத்தம் ஜெயிக்க முடியல. கைலாசத்துக்குப் போய் ஏன் ஜெயிக்கமுடியலேன்னு கேட்டார் மஹாவிஷ்ணு 'விநாயகரை முதல்ல பூஜைபண்ண மறந்துட்டியே' ன்னார் சிவன். தேவ வருஷத்திலே 100 வருஷம் 'ஓம் விநாயகாய நம'ன்னு சொல்லிண்டே தவமிருந்தார் நாராயணன். பிள்ளையார் காட்சி தந்து 'வெற்றி உனக்குத்தான்' என்றருளினார்''.

விநாயகர் என்ற தெய்வமே கற்பனையானது என்று ஆராய்ச்சியாளர்களால் ஆதாரபூர்வமாக முடிவு செய்யப்பட்டபின், விநாயக புராணம் எங்கிருந்து வந்தது? விநாயகரைக் கற்பனை செய்து வைத்தவர்களே விநாயகர் சம்பந்தமாகப் புராணங்களையும் கற்பனை செய்து வைத்துவிட்டனர். லோகசிருஷ்டி குறித்து காமகோடிப் பெரியவர் கூறியிருக்கும் கருத்துக்கு வேதங்களில் ஆதாரமே இல்லை. மற்றும் பிரசித்தமான ஸாத்வீக புராணங்கள், இதிஹாஸங்கள், சங்க இலக்கியங்கள், ஏழாம் நூற்றுண்டுக்கு முற்பட்ட வடமொழி தென்மொழிக் காப்பியங்கள், நூல்கள் இவை எதிலுமே இவர் சொன்னபடி இல்லை. ஆதிசங்கரரின் வழிவந்தவராகத் தம்மைக் கூறிக்கொள்ளும் இப்பீடாதிபதி தம் ஆசார்யரின் கொள்கைக்கும் முரணுகப் பேசுகிருர். மேலும் இவர் கருத்து வேத விருத்தமாகவும் உள்ளது. இவர் காலத்திலேயே கண்டிக்கப்பட்ட இவரது கருத்துக்களை இவர் காலத்திற்குப் பிறகும் பத்திரிகைகள் வெளியிடுவதால் அக்கருத்துக்கள் உண்மையானதும் நியாயமானதுமாகி விடாது.

''காமகோடி'' நவம்பர்-2000 இதழில் முருகனைப் பற்றி இவர் கூறிய கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். பிராம்மண்யத்தை வளர்த்து வைதிக தர்மத்தை நிலைநாட்டவே முருகன் அவதரித்தான் என்றும், அதனுலேயே சுப்ரமண்யன் என்று பெயர் பெற்றுன் என்றும், 'ஓம்' என்ற பிரணவத்திற்குப் பொருள் தெரியாமல் விழித்த பிரம்மாவைக் குட்டி சிறையில் அடைத்துவிட்டு முருகன் தானே படைப்புத் தொழிலைத் தொடங்கியபோது தேவர்கள் அனைவரும் பயந்து ''சுப்ரம்மண்யோம், சுப்ரம்மண்யோம்'' என்று ஸ்தோத்ரம் செய்ததாகவும், அப்போதுதான் சுப்ரம்மண்யத்தோடு 'ஓம்' சேர்ந்து கொண்டதாகவும், 'ப்ர' என்ருல் சிறந்தது, 'நவம்' என்ருல் புதுசு என்று ஆரம்பித்து முருகன் தன் தந்தைக்குப் பிரணவத்திற்கு பொருள் கூறினுன் என்றும் இப்பெரிய பீடாதிபதி கூறியுள்ளார்.

இப்பீடாதிபதியின் பரமாசார்யரான ஆதிசங்கரர் தமது கீதா பாஷ்யத்தின் அவதாரிகையில் "ஆதிகர்த்தா நாராயணாக்யோ விஷ்ணு: பௌமஸ்ய ப்ரஹ்மண: ப்ராஹ்மணத்வஸ்ய ச அபி ரக்ஷணார்த்தம் தேவக்யாம் வஸுதேவாதம்சேந க்ருஷ்ண: கில ஸம்பபூவ:" [உலகங்களுக்கெல்லாம் ஆதி கர்த்தாவான நாராயணன் என்ற பெயரையுடைய விஷ்ணு பூமியில் உள்ள ப்ராஹ்மணர்களையும், ப்ராஹ்மண்யத்தையும் ரக்ஷிப்பதற்காகவே தேவகி வசுதேவர்களுக்குப் பிள்ளையாக கிருஷ்ணனாய் அம்சாவதாரமாய்ப் பிறந்தார்.] என்று கூறியுள்ளார். "ப்ரஹ்மண்யோ தேவகீபுத்ர:" என்று வேதம் கூறுகிறது. ஸஹஸ்ரநாமத்தில் வேத வியாஸர் 'ப்ரஹ்மஜ்ஞோ பிராஹ்மணப்ரிய' என்று கூறுகிறார். ப்ராஹ்மண்யத்தை வளர்ப்பதற்காகவே முருகன் அவதரித்ததாகக் கூறுவதன்மூலம் இப்பீடாதிபதி இவரது ஆசார்யரின் கருத்துக்கும் இவரது ஆசார்யரின் ஆசார்யரான வேதவியாஸரின் கருத்துக்கும் வேதக்கருத்துக்கும் முரணாகப் பேசுகிறார். மேலும் 'சுப்ரம்மண்யன்' என்ற பெயர் இதிஹாஸ புராணங்களில் முருகனுக்குச் சொல்லப்படவில்லை. அமரகோசத்தில் முருகனுக்குச் சொல்லப்பட்ட பதினேழு நாமங்களில் 'சுப்ரம்மண்யன்' என்ற நாமம் இல்லை. "சுப்ரம்மண்யோம்' என்பது காடக மந்திரம். இதற்கு "நான் பிரஹ்மத்திற்கு அடிமைப்பட்டவன் என்று ஓங்காரம் சொல்கிறது" என்பதே பொருள் என்று ஸுதர்சனர் அவர்கள் தமது நூல் ஒன்றில் கூறியுள்ளார்கள். அதனால் இம்மந்திரத்திற்கும் முருகனுக்கும் எள்ளளவும் சம்பந்தமில்லை. "ப்ரணவம்" என்ற சொல்லுக்கு இப்பீடாதிபதி கூறியுள்ள விளக்கத்தை வடமொழி ப்ரமாண நூல்கள் அறிந்த எவரும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். பொய்யைத் திரும்பத் திரும்பச் சொல்வதால் மெய்யாகிவிடாது. இப்படிப்பட்ட பரம அபத்தங்களை வெளியிடும் துணிச்சல் காமகோடிகளின் அடிவருடிகளுக்கே வரும்.

எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

என்ற திருக்குறளுக்கேற்ப, மக்கள் இப்பீடாதிபதிகளின் கருத்துக்களைக் கண்ணை மூடிக்கொண்டு அப்படியே ஏற்றுக்கொள்ளாமல் உண்மையை ஆராய்ந்து உணர்வார்களாக. அப்பொழுதுதான் இப்பீடாதிபதிகளின் சுயநலம் வெட்டவெளிச்சமாகும்.

'திருமால்' செப்டம்பர்-2000 இதழிலும் 'யதிராஜபாதுகா' நவம்பர்-2000 இதழிலும் வெளிவந்த கடிதக் கட்டுரைகள் மூலம் "ஸ்ரீராமாநுஜர் ஶேஷாவதாரமாக இருப்பதால் அவருக்குப் பாலபிஷேகம் செய்து வழிபட்டால் ஜாதகரீதியாக வரும் ராகு கேது தோஷங்கள் நீங்கும்" என்று ஸ்ரீபெரும்பூதூர் தேவஸ்தானத்தார் சமீப காலமாகப் பிரசாரம் செய்து வரும் செய்தியை அறிய நேர்ந்தது. இதுபற்றி நமது கருத்து கீழே.

ராகு கேதுக்களுக்கும் ஆதிஶேஷனுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. அநந்யார்ஹ ஶேஷத்வ குணத்தில் முதன்மையானவர் ஆதிஶேஷன். பகவத் ஸ்பர்சத்தால் தோஷமே இல்லாதவர், ஆனால் ராகு கேதுக்கள் நிழல் வடிவமான பாபக்ரஹங்கள். இக்கிரஹங்களின் ப்ரீதிக்காக ஶேஷாவதாரமான ஸ்ரீராமாநுஜரை வழிபடவேண்டும் என்று சொல்வது அவ்வுத்தம புருஷருக்குச் செய்யும் மஹாத்ரோஹமாகும். மேலும் அம்மஹநீயர் உலகுக்கு அளித்த சித்தாந்தத்தின் ஆணிவேரையே அசைப்பதுமாகும். அதுவும் அவர் அவதரித்த திவ்யதேசத்திலேயே இவ்வபத்தப் பிரசாரம் செய்யப்படுவது நிந்திக்கத்தக்கதும் வருந்தத்தக்கதுமாகும்.

ஸ்ரீவைஷ்ணவர்கள் குறிப்பிட்ட எந்த தோஷத்திற்காகவும் பரிகாரம் செய்யக்கூடாது. எந்த தோஷத்திற்கும் பகவானது திருவடிகளில் சரணாகதி செய்வதைத் தவிர வேறெதுவும் அவர்களுக்கு விதிக்கப்படவில்லை. இதனை நம் ஸ்ரீவைஷ்ணவ சமூகம் உணர்ந்தால் நல்லது. சமீப காலமாகப் பணவசூலைப் பெருக்கும் நோக்கத்துடன் மக்களைக் கவர சில பொய்ப்பிரசாரங்கள் செய்யப்படுகின்றன. ஸ்ரீபெரும்பூதூர் தேவஸ்தானத்தாரின் அபத்தப் பிரசாரத்திற்கும் இதுவே காரணம். பணவசூலுக்காக சம்பிரதாயக் கொள்கைகளுக்கு முரணாகப் பிரசாரம் செய்வது பணத்திற்காக விபசாரம் செய்யும் ஒரு குடும்பப்பெண்ணின் செயலைப் போன்றதாகும். ஸ்ரீபெரும்பூதூர் தேவஸ்தானத்தார் இதனைக் கவனத்திற்கொள்ளவேண்டும். அங்குள்ள ஜீயர் ஸ்வாமிகளும் ஆசார்ய புருஷர்களும் இவ்வபத்தப் பிரசாரத்தைக் கண்டித்து நிறுத்த வேண்டும்.

'ஞானமணி'—நவம்பர்-2000 இதழில் 'சூரியனார் கோயில் ஆதீனம்' என்ற தலைப்பில் சூரியனார் கோயில் ஆதீன வித்வான் தி. பாலசுப்ரமணியன் எனபவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் ஓரிடத்தில், ''ஒருமுறை தென்கலை வைணவராகிய மணவாள மாமுனிகள் என்பவர் தமது சீடர்களுடன் சின்னச்சேவக்க நாயக்க மன்னனை அணுகி, நாடெங்கும் வைணவத்தைப் பரப்ப உதவவேண்டும் என்ற கோரிக்கையை வைத்தார். இயல்பிலேயே சைவப்பற்றுடைய இம்மன்னன் சிவாக்ரயோகிகள்பால் பெருமதிப்பும் மரியாதையும் வைத்திருந்தமையால், மாமுனியின் விருப்பத்திற்கு இசைந்திலன். மனந்தளராத மாமுனிகள் ''மன்னா! நீங்கள் போற்றும் சிவாக்ரயோகிகளுடன் வாதிட்டு வென்று, வைணவமே மேலானது என்று யான் நிறுவுவேன். அதற்குத் தாங்கள் ஒருவாத அரங்கிற்கு ஏற்பாடு செய்தால் 18 நாட்களில் வாதம் முடிவுற வேண்டும். தோற்றவர் வென்றவரின் சமயத்தில் இணைந்து விடவேண்டும்'' எனக்கூற, மன்னனும் உத்தரவு பிறப்பித்தான். வாதங்கள் தொடங்கின. பதினேழு நாட்களிலும் வைணவர் தோற்றனர். இதனைக்கண்டு அஞ்சிய வைணவர்கள், மன்னனின் உத்தரவிற்குப் பயந்து, சிவாக்ரயோகிகள் தங்கியிருந்த திருமடத்திற்கு எரியூட்டி ஓடி மறைந்தனர். அதனால் மணவாள மாமுனிகளை மன்னன் தண்டித்தான்'' என்று பிதற்றியிருக்கிறார்.

ஸ்ரீமணவாள மாமுனிகளின் வாழ்க்கையில் இப்படிப்பட்ட சம்பவம் ஒன்று நடந்ததாக அவர் வாழ்க்கை வரலாற்றைக்கூறும் எந்த நூலிலும் இல்லை. வைணவத்வேஷ உணர்வோடு, ஆதாரம் இல்லாமல் இப்படிக் கண்டபடி எழுதுவது வன்மையாகக் கண்டிக்கத்தக்கது. தென்கலை வைணவ ஆசார்யரான ஸ்ரீமணவாள மாமுனிகளை இழிவுபடுத்துவதன் மூலம் தென்கலை வைணவர்கள் அனைவரையுமே இழிவுபடுத்தியுள்ளார் பாலசுப்ரமணியன். தான் எழுதிய செய்திக்கு எந்த ஆதாரத்தையும் அவர் காட்டவில்லை. வாதம் என்று ஏற்பட்டால் சைவர்கள் வைணவர்களை வென்றதாக வரலாறே இல்லை. வைணவர்கள் என்றுமே தோல்வி கண்டதில்லை. வைணவர்களை வெல்ல முடியாத சைவர்கள் பொறுமை கொண்டு வைணவர்களுக்குத்தான் ஏகப்பட்ட உபத்ரவங்களைக் கொடுத்துள்ளதாக வரலாறு. சிவாக்ரயோகிகளின் எந்த எந்தக்

கேள்விக்குப் பதில் சொல்லமுடியாமல் மணவாள மாமுனிகள் தோல்வி கண்டார் என்பதை பாலசுப்ரமணியன் கூறவேண்டும். அதையும் ஆதாரத்தோடு கூறவேண்டும். அதற்கு வக்கில்லாமல் தான் இப்படி எழுதியுள்ளார். இப்படி எழுதியதற்காகத் தவறை ஒப்புக்கொண்டு மன்னிப்புக் கேட்க வேண்டும். இப்படிப்பட்ட வைஷ்ணவத்வேஷக் கட்டுரைகளை வெளியிடும் ஞானமணியின் நிர்வாகிகள் வன்மையாகக் கண்டிக்கத் தக்கவர்கள்.'

''ஆன்மீக பூமி'' 17—11—2000 இதழில் ''சுவாமி திந்தகத்தோம் அய்யப்ப திந்தகத்தோம்'' என்ற தலைப்பில் புலவர் மார்க்ஸ் என்ற சக்திவேல் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் ஐயப்பன் வழிபாடு சைவ-வைணவ ஐக்யத்தைக் குறிக்கிறது என்றும் சைவ வைணவ பேதமின்றி யார் வேண்டுமானாலும் சபரி மலைக்கு மாலையிட்டுச் செல்லலாம் என்றும் எழுதியுள்ளார். இது குறித்து நம் கருத்து வருமாறு :—

கார்த்திகை மாதம் பிறந்து விட்டாலே சபரிமலை சீஸன். இதில் கொடுமை என்னவென்றால் நம் வைஷ்ணவர்களிலும் சில பேர் மாலை போட்டுக்கொண்டு சபரிமலை செல்கிறார்கள் என்பது தான். ஏன்! தேசிக ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்கள் என்று பெருமை அடித்துக் கொள்பவர்களிலும் ஐயப்ப பக்தர்களைக் காண முடிகிறது. ''முதற் பெரும் கடவுள் நிற்ப, புடைப்பல தானறி தெய்வம் பேணுதல் தனது புல்லறிவாண்மை'' என்றும், ''கண்ணனல்லால் தெய்வமில்லை'' என்றும், ''மால்தனில் மிக்குமோர் தேவும் உளதே'' என்றும், ''திருமாலையல்லது தெய்வமென்று ஏத்தேன்'' என்றும் கூறிய சீரிய வைணவச் செம்மல்களாம் ஆழ்வார்களின் வழிவந்த நம்மில் சிலர் ஐயப்ப பக்தர்களாகிவிட்டது வருந்தத்தக்கது. அருவருக்கத்தக்கது. இனி இந்த ஐயப்பன் என்ற தெய்வம் குறித்து நம்மவர்களின் கவனத்திற்காகச் சில விஷயங்களைக் கூற விரும்புகிறேன்.

ஐயப்பன் என்ற தெய்வத்தின் தோற்றம் பற்றி ஒன்றுக்கொன்று முரண்பட்ட பல கருத்துக்கள் நிலவி வருகின்றன. சைவத்தில் பிள்ளையார் என்ற தெய்வம் எப்படிக் கற்பனையானதோ அதே போல் ஐயப்பன் என்ற தெய்வமும் சில காரணங்களுக்காகப் பிற்காலத்தில் கற்பனை செய்யப்பட்டதொன்று என்பதில் சிறிதும் ஐயமில்லை. வேதத்திலும் அதைத்தழுவிய புராண இதிஹாஸங்களிலும் ஐயப்பன் பற்றிய குறிப்பே இல்லை. பரிபாடல்

முதலிய பழம்பெரும் சங்க நூல்களிலும் ஐயப்பன் பற்றிய செய்தி இல்லை. சங்க காலத்திற்குப் பிற்பட்ட சில நூல்களில் சாத்தான் ஐயனார் என்ற பெயரில் ஒரு சிறு தெய்வம் வழிபடப்பட்டு வந்த தாகச் செய்திகள் உள்ளன. அதுவும் இந்தச் சிறு தெய்வம் ஊர்க்காவல் தெய்வமாக ஊரின் எல்லையில் வைத்து, பாமர மக்கள் வழிபட்டு வந்ததாகச் செய்திகள் உள்ளன. இப்போதும் இந்தச் சிறுதெய்வம் ஊர்க்காவல் தெய்வமாக ஊரின் எல்லையில் வைத்துப் பாமர மக்களால் வழிபடப்பட்டு வருகிறது. சில கிராமங்களில் ஊர் ஓரத்தில் காட்டை அண்டி. இன்றும் ஐயனார் கோயில்கள் இருப்பதைக் காணமுடியும். பிற்காலத்தில் கற்பிக்கப்பட்ட ஒரு சிவாகமதேவதையே ஐயனார் எனலாம். ஆனால் இந்த தேவதை விஷ்ணுவுக்கும் சிவனுக்கும் பிறந்தது என்பதற்கு எவ்வித ஆதார மும் இல்லை. இது நிற்க, பொதுவாக ஐயப்ப பக்தர்கள் மோஹினியான திருமாலுக்கும் சிவனுக்கும் பிறந்தவரே ஐயப்பன் (ஐயனார்) என்று கதை சொல்லி வருகின்றனர். திருமாலின் பல அவதாரங்களில் மோஹினி அவதாரமும் ஒன்று என்பது உண்மை தான். அதாவது "பாற்கடல் கடைந்தபோது, அசுரரை மயக்கி தேவர்களுக்கு அமிர்தம் வழங்குவதற்காக மஹாவிஷ்ணு மோஹினி அவதாரம் எடுத்தார். அப்போது மோஹினியைக் கண்டு மயங் கிய சிவனுக்கு வீரியம் வெளிப்பட்டு பூமியில் சிதறி விழுந்தது. அவ்வீரியம் விழுந்த இடங்களே பூமியில் தங்கம் வெள்ளிபோன்ற கனிமங்கள் விளையும் பிரதேசங்களாயின" என்று ஸ்ரீமத்பாகவதத் தில் வருகிறது அதே பாகவதத்தில். "யார் தலைமீது கை வைத்தா லும் அவர் எரிந்து சாம்பலாக வேண்டும் என்ற வரத்தை சிவனி டமிருந்து பெற்ற வ்ருகாஸுரன் (பஸ்மாசுரன்) தான் பெற்ற வரத்தை சிவனிடமே பரீட்சித்துப் பார்க்க எண்ணியபோது அவனைக் கண்டு பயந்து ஓடிய சிவனை அவ்வசுரனிடமிருந்து பிரம்மசாரி வேடத்தில் வந்த மஹாவிஷ்ணு காப்பாற்றினார்" என்றும் வருகிறது. இந்த பஸ்மாசுர விருத்தாந்தத்தில்தான் கதையின் போக்கை மாற்றி பிரம்மசாரியாக வந்ததாகச் சொல் லப்படும் திருமாலை மோஹினியாக வந்ததாகக் கூறி அம்மோஹினி யைக் கண்டு மயங்கிய சிவனுக்கு வீரியம் வெளிப்பட்ட போது அவ்வீரியத்தை மோஹினி கையிலேந்திய வுடன் அது குழந்தையாயிற்று என்றும் அக்குழந் தையே ஐயப்பன் என்றும் கற்பனை வளம்மிக்க கட்டுக்கதை புனைந்துவிட்டனர். சைவ வைணவப் போட்டி பலம் பெற்று

இருந்த நேரத்தில் சில சமரச (சாக்கடை) வாதிகள் இக்கதையை மக்கள் மத்தியில் விதைத்தனர். அதற்கேற்றாற்போல் சில புளுகு புராணங்களைக் கற்பிதம் செய்தனர். இதனால் சிவன் விஷ்ணு பேதம் மக்களிடையே மறையும் என்று கருதினர். மடையர்கள் மட்டுமே இம்முட்டாள் தனமான கதைக்குச் செவி சாய்த்தனர். இது ஒரு புற மிருக்க, சபரிமலையில் உள்ள ஐயப்பன் கோயில் சுமார் 50 வருடத்திற்குள்தான் பிரசித்தம். மாலைபோட்டுக்கொண்டு இருமுடி கட்டி அங்கு சென்று வழிபடும் பழக்கமும் சமீபகாலமாகத்தான். இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகவும் ஜாதி பேதத்தை ஒழிப்பதற்காகவும் இந்தக் கோயிலை பிரசித்தியடையச் செய்து, வழிபாட்டு முறைகள் என்று சில விதிகளையும் ஏற்படுத்தி அதற்கு ஆதாரமாகச் சில கற்பனைக்கதைகளைக் கூறிவைத்தனர். அதாவது ஐயப்பனுக்கு வாவர் என்ற இஸ்லாமிய நண்பர் ஒருவர் இருந்ததாகவும், எரிமேலியில் உள்ள வாவர் பள்ளிவாசலில் பாத்தியா ஓதிச்சென்றால் தான் ஐயப்பனின் அருள் கிடைக்கும் என்றும் விதியை ஏற்படுத்தி இந்து முஸ்லிம் பேதத்திற்கு முற்றுப்புள்ளி வைக்க முற்பட்டனர். (கிறிஸ்துவ மதத்தை ஏன் விட்டு வைத்தார்கள் என்று தெரியவில்லை ஐயப்பனுக்கு ஸ்டெல்லா என்ற கிறிஸ்துவப்பெண் காதலியாக இருந்ததாக ஒரு கதை விடலாமல்லவா!) மேலும் மாலையிட்ட அனைவருமே ஐயப்பன் தானும். அதனால் எல்லா ஜாதியினரும் மாலை போடுவதால் பாதபூஜையின்போது ஜாதி பேதமின்றி ஒருவரை மற்றொருவர் வணங்க வழியுண்டு. இதனால் ஜாதி பேத உணர்வு இல்லாமல் போகும் என்றும் கனவு கண்டனர். இதுதான் இந்த சபரிமலைக் கோயிலைப் பிரசித்தியடையச் செய்ததற்கான காரணம். ஆனால் நடைமுறையில் பார்த்தால், எந்த நோக்கத்திற்காக இக்கோயிலைப் பிரசித்தியடையச் செய்தனரோ அந்நோக்கம் நிறைவேறவில்லை என்று புலப்படும். ஐயப்பன் வழிபாட்டால் இந்து முஸ்லிம் பேதம் மறையவில்லை. ஜாதி பேதமும் மறையவில்லை மாறாக வலுவடைந்துள்ளது எல்லா ஜாதிக்காரரும் மாலை போடுவதால், சிலபேர் பாதபூஜை செய்யும் நடைமுறையைக் கூட நிறுத்திவிட்டனர். புரிகிறதா இவர்களது லட்சணம்? இப்படிப்பட்ட அபத்த விதிமுறைகள் கொண்ட, சில நோக்கங்களுக்காகப் பிரசித்தி பெறச் செய்த ஐயப்பன் என்ற கற்பனைத் தெய்வவழிபாட்டில் நம்மவர்களும் சிலர் மூழ்கி இருக்கிறார்கள் என்பதுதான் மிகப் பெரிய வெட்கக்கேடு. இன்னொரு கொடுமையைக் கேளுங்கள். ஐயப்ப பக்தர்கள் போற்றி சொல்லும்போது "சபரிக்கு மோட்சம் அளித்தவனே போற்றி" என்று சொல்கின்ற

னர். (நம்மவர்களில் உள்ள ஐயப்ப பக்தர்களும்தான் இதைச் சொல்கிறார்கள்) சபரிக்கு மோட்சம் அளித்தவன் ஸ்ரீராமனா? ஐயப்பனா? சபரிக்கு மோட்சம் அளித்தவன் ஸ்ரீராமன் என்றல்லவா ஆதிகாவ்யம் கூறுகிறது? பிறகு ஏன் இந்தத் திருட்டுத் தனம்? இன்னும் கொஞ்ச நாளில் வாலியைக் கொன்றவனும், ராவணனைக் கொன்றவனும் கூட ஐயப்பன்தான் என்று ஐயப்ப பக்தர்கள் கூறினால்கூட ஆச்சர்யப்படுவதற்கில்லை. கதை விடுவதற்கும் ஒரு அளவில்லையா? ஆன்மீக விஷயத்தைப் பொறுத்தவரை எதைச் சொன்னாலும் கேட்பதற்கு ஒரு செம்மறியாட்டுக் கூட்டம் நம் நாட்டில் உள்ளது. இதற்கு நம்மவர்களும் பலியாகிறார்களே என்பதுதான் வெட்கப்படவேண்டிய விஷயம். ஆன்மீக விஷயத்தில் எதை வேண்டுமானாலும் ஆதாரமில்லாமல் சொல்வதாலும், எதைச் சொன்னாலும் கேட்பதற்கு ஆள் இருப்பதாலும்தான் நம்மதத்தை நாத்திகர்கள் நையாண்டி செய்கின்றனர். ஆன்மீக விஷயத்தில் கண்டதெல்லாம் காட்சி கொண்டதெல்லாம் கோலம் என்ற மனப்போக்கும், நாத்திகமும் கிட்டத்தட்ட ஒன்றுதான் என்பது நம் கருத்து. ஆகவே நம் மத ஸம்ப்ரதாயத்திற்கு முற்றிலும் புறம்பானதும் வைணவர்களுக்குத் தகாததுமான இந்த ஐயப்பன் வழிபாட்டை இதுவரை செய்துவந்த நம்மவர்கள் இனிமேலாவது திருந்தி இதைக் கை விடவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

ஜனவரி 2001 ''அம்மன் தரிசனம்'' இதழில் திருவையாறு இசைக் கல்லூரி முதல்வர் ராம. கௌசல்யா ''தியாகராஜரும் சிவ பக்தியும்'' என்ற தலைப்பில் தியாகராஜரை சமரசவாதியாகக்காட்டி அதற்கு ஆதாரமாக அவரது கிருதிகளாகச் சிலவற்றை மேற்கோள் காட்டியுள்ளார்.

தியாகராஜ கீர்த்தனைகள் என்று இன்று அறியப்படும் கீர்த்தனைகளில் பல கீர்த்தனைகள் தியாகராஜரால் செய்யப்படாதவை என்பது ஆராய்ச்சியாளர்களின் ஒருமித்த முடிவு. ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தின் வெளியீடான ''ஸங்கீத டக்தி சாரர்'' என்ற நூல் இதுபற்றித் தெளிவாகவும் விரிவாகவும் விளக்குகிறது. இந்நூல் திருச்சி, புத்தூர் அக்ரஹாரம், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் அலுவலகத்தில் கிடைக்கும்.

அதாவது-ஒருவர் பிறந்த குடும்பச் சூழ்நிலை, வளர்ந்தவிதம், வளர்த்தவர்கள் இவற்றின் பாதிப்பும் தாய் தந்தையர் கொண்டுள்ள கொள்கையின் பாதிப்பும் ஒருவருக்கு ஒரு குறிப்பிட்ட காலம் வரை இருக்கத்தான் செய்யும். ஆனல் ஆழமாகச் சிந்திக்கும் ஆற்ற லின் உதவியால் உண்மையைப் புரிந்து கொள்ளும் மனப்பக்கு வம் வந்த பின்பு தன்னை அதுவரை பாதித்திருந்த கருத்துக்கள், கொள்கைகள்; பழக்கவழக்கங்கள் ஆகியவை தவருக இருப்பின் அவற்றை முழுமையாகக் கைவிட்டு உண்மையை மட்டும் ஏற்று அதன்படி நடக்கும் மன உறுதி வந்துவிடும். இதுதான் தியாக ராஜரின் வாழ்க்கையிலும் நிகழ்ந்திருக்கிறது. தியாகராஜர் ஸ்மார்த்த பிராம்மண குடும்பத்தில் பிறந்தவர். வேத வேதாந் தங்களை வழுவறக் கற்றவராயினும் தான் பிறந்த குடும்பத்திற்கு ஏற்ற ஆன்மீக உணர்வால் சிலகாலம் வரை பாதிக்கப்பட்டிருந் தார். காலப்போக்கில் தான் கற்ற வேத வேதாந்தங்களின் உதவி யால் உண்மையைத் தேடும் முயற்சியில் குழப்பமும் அடைந்திருந் தார். விடாமுயற்சியுடன் கூடிய ஆழமான வேதவேதாந்த ஆராய்ச்சிக்குப்பின் வேதத்தின் முடிந்த பொருள் ஸ்ரீராமனே என்று கண்டு கொண்டார். அந்த முடிவு அவருக்குத் தெளிவாக ஏற்பட்டபின் அவர் பாடிய கிருதிகளை ஆழமாக ஆராய்ந்தால் தியாகராஜர் ஸ்ரீராமனைத் தவிர வேறு எந்த தெய்வத்தையும் தொழாத மிகச்சிறந்த வைஷ்ணவ சிரேஷ்டர் ஆவார் என்பதை உணரமுடியும். மற்ற தெய்வங்கள் மீது அவர் பாடியதாகக் கூறப் படும் கிருதிகள் ஒருவேளை அவர் ஆன்மீக முதிர்ச்சி பெறுவதற்கு முன் பாடியிருக்கவேண்டும். அல்லது அவர் பெயரால் வேறு யாரா வது செய்திருக்கவேண்டும். இதுதான் உண்மை. தியாகராஜர் செய்ததாகக் கூறப்படும் கோவூர் பஞ்சரத்னம், லால்குடி பஞ்ச ரத்னம் ஆகிய கிருதிகளின் ஸாஹித்ய அமைப்பைக் கூர்ந்து கவ னித்தால் அவை அவரால் செய்யப்படாதவை என்பது தெளி வாகப் புலப்படும். பரம வைணவரான ஸ்ரீதியாகராஜரை சமரச வாதியாக்கச் சில சைவ விஷமிகள் அவர் பெயரால் சில கீர்த்தனை களைச் செய்து வைத்துள்ளனர்.

திருவையாற்றில் வருடந்தோறும், அவர் சமாதியடைந்த இடத்தில் புஷ்ய பகுள பஞ்சமியில் அவருக்கு ஆராதனை உற்சவம் நடைபெற்று வருகிறது. அந்த சமாதி முழுதும் சைவர்களால் ஆக்ரமிக்கப்பட்டு, ஸ்ரீதியாகராஜரை சைவச் சாமியாராகவே

ஆக்கிவிட்டனர். இசைத்துறையிலும் இன்று சைவர்களே மிகுந்துள்ளதால் ஆராதனை என்ற பெயரில் தங்கள் தொழிலுக்கு விளம்பரம் செய்து கொள்ளும் நாளாகவே அந்த ஆராதனை உற்சவத்தை நடத்தி வருகின்றனர்.

உபாஸனைகளில் நாதோபாசனை ஒன்று. அது வைணவத்திலும் ஏற்கப்பட்டுள்ளது. இதற்கு உதாரணமாக, திருப்பாணாழ்வாரைக் கூறலாம். ஆகவே வைணவர்கள் இசை கற்றுக் கொள்வதில் தவறில்லை. ஆனால் அந்த இசையை ஸ்ரீமந் நாராயணனின் புகழ்பாடுவதற்காக மட்டுமே உபயோகிக்க வேண்டும். இசை கற்ற வைணவர்கள் மற்ற தேவதைகள் மீது உள்ள கீர்த்தனைகளைப் பாடக்கூடாது. மற்ற தெய்வக் கீர்த்தனைகளைக் கேட்டு ரசிக்கவும் கூடாது. ஆகவே இசைத்துறையில் உள்ள வைணவ அன்பர்கள் ஸ்ரீமந்நாராயணனைத்தவிர வேறு எந்த தெய்வத்தின் மீது உள்ள கீர்த்தனைகளையும் கச்சேரிகளில் பாடக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன். எத்தனை எதிர்ப்புகள் வந்தாலும் தங்கள் கொள்கைகளிலிருந்து மாறுமல் வைணவ இசைக் கலைஞர்கள் இருக்கவேண்டும். சென்ற நூற்றுண்டில் அப்படிக் கொள்கைப் பிடிப்புள்ளவராக வாழ்ந்த வைணவ இசைக்கலைஞர் ஸ்ரீமான் டைகர் வரதாச்சாரி. இவரது கச்சேரியை நேரில் கேட்டு அனுபவித்த முதியவர்கள் இவரது கொள்கைப் பிடிப்பைப் பற்றி இன்றும் கூறுகின்றனர். ஆனால் அப்படிப்பட்ட மிகச்சிறந்த வைணவ இசைக் கலைஞரைப்பற்றி, அவர் வைணவத்தில் பிடிப்புள்ளவராக இருந்தார் என்பதற்காகவே, சைவர்களாக இருந்த இசை விமர்சகர்கள் அவதூறு பேசினர். சைவர் நடத்திய பத்திரிகைகளில், டைகர் குடிகாரர் என்றும் குடித்தால்தான் அவருக்குப் பாடவரும் என்றும், ஸ்ருதியோடு சேர்ந்து பாடத் தெரியாதவர் என்றும் பலவாறு கீழ்த்தரமான விமர்சனங்கள் வெளிவந்தன. அவரது இசையை ஸ்ரீவைஷ்ணவப் புளியோதரை என்று கேலி செய்தனர். அவரது மிகச்சிறந்த பாடல்களை ஒலிப்பதிவு செய்யாமலும் செய்திருந்த ஒரு சில ஒலி நாடாக்களை அழித்தும், அவரது பாடல்களில் உள்ள நுணுக்கம் இளைய தலைமுறையினருக்குத் தெரியாதபடி செய்துவிட்டனர். இதற்குக் காரணம், இசைத்துறையையும் பத்திரிகைத் துறையையும், செய்தி ஒலிஒளிபரப்புத் துறையையும் பெரும்பாலும் சைவர்கள் ஆக்ரமித்து இருப்பதுதான். ஆகவே இசைத்துறையில் உள்ள வைணவ அன்பர்கள் வைண

வத்தில் பிடிப்புடன் இருக்கவேண்டும். தம் கச்சேரிகளில் ஸ்ரீமந் நாராயணனைத் தவிர வேறு எந்த தெய்வத்தின் மீதும் பாடாமல் இருக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ரசிகர்களைத் திருப்தி செய்தால் பணம் கிடைக்கும். பகவானைத் திருப்தி செய் தால் பரமபதம் கிடைக்கும். வைணவர்களாகிய நமக்குப் பணம் பெரிதல்ல. பரமபதமே பெரிது. ஆகவே ஸ்ரீமந் நாராயணனை மட்டுமே பாடுங்கள். அவன் புகழ் கூறும் பாடல்களையே கேட்டு அனுபவியுங்கள். மற்ற தெய்வங்கள் மீது உள்ள பாடல்களை நாராசம் என ஒதுக்கித் தள்ளுங்கள். வைணவ இசைக்கலைஞர் களுக்கும் இசைப் பிரியர்களுக்கும் இதுவே எனது தாழ்மையான வேண்டுகோள்.

கடந்த மாத ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் இதழில் "திருமலை யில் ஜயேந்திரர் மீண்டும் அத்துமீறல்" என்ற தலைப்பில் ஒரு செய்தி வெளியிடப்பட்டிருந்தது. அச்செய்தியைப் படிக்கும்போது மனம் வெடிக்கிறது. வைணவர்கள் பொறுமையோடு இருப்பதால் தான் ஜயேந்திரர் இவ்வளவு வாலாட்டுகிறார். இவருக்குச் சரி யான பாடம் புகட்ட வைணவ சமூகம் முன் வரவேண்டும். இல்லை யெனில் திருமலையையும் சமரசச் சாக்கடை நாற்றம் வீசும் இட மாக்கி விடுவார் இந்த பஸ்மதாரித்துறவி. வைணவர்களில் பெரிய இடத்தில் உள்ளவர்கள் ஏன் மௌனம் சாதிக்கின்றனர் என்றுதான் புரியவில்லை. இவ்விடத்தில் ஒரு விஷயத்தைக் குறிப் பிடவேண்டியுள்ளது. தேசிக ஸம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள் என்று மார்தட்டிக் கொள்ளும் வடகலை வைணவர்களில் பலர் காம கோடியின் அடிவருடிகளாக உள்ளனர். (அவருக்கு இடம்கொடுக் காத தூய வைணவசிரேஷ்டர்கள் வடகலையாரிலும் பலர் இன்றும் உள்ளனர். அவர்களை நாம் குறை கூறவில்லை) காமகோடிகளை யும் விஷ்ணு வைஷ்ணவத்துவேஷ பிரசாரங்களையும் கண்டித் தால் சம்பந்தப்பட்டவர்களுக்குக் கோபம் வருகிறதோ இல்லையோ இந்தப் புறம்போக்கு வடகலை வைணவர்களுக்கு ஆத்திரம் பொங்குகிறது. ஏன் என்றுதான் தெரியவில்லை. நமது ராம பாணக் கட்டுரையை வடகலை வைணவர் ஒருவர் படித்துவிட்டு "இது வேண்டாத வேலை" என்றும், "அடுத்தவர்களைக் குறை கூறுவது தகாது" என்றும் விமர்சித்தார். அதாவது "மானம் கெட்டவர்கள் ராஜாவில் பெரியவர்கள்" என்று ஒரு உலக வழக்கு உண்டு. அதுபோல இவர்கள் ஏன் தன்மானத்தைக் காமகோடி-

களிடம் அடகு வைக்கிருர்கள் என்றுதான் புரியவில்லை. விக்ரம-ஹுமார்கழி-மீ ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவில் ''திருமலைக் கோயில்'' என்ற தலைப்பில், திருப்பதிக்கோயில் முன்னுள் அறநிலைய ஆணையாளர் டாக்டர் M S ரமேசன், I A S என்பவரின் ஆங்கிலக் கட்டுரையின் தமிழாக்கம் வெளியிடப்பட்டுள்ளது. கட்டுரையின் தொடக்கத்தில் ஆசிரியரைப் பற்றிய குறிப்பு கூறுமிடத்து. ''ஸமீப காலத்தில் திருப்பதி மூலவர் விஷ்ணுவா, ஶிவனு, ஶக்தியா, முருகனு என்ற அநாவஶ்ய சர்ச்சை கிளப்பிவிடப்பட்டிருக்கிறது. இந்த சர்ச்சைக்கு முற்றுப்புள்ளி வைக்கும் வகையில் திருப்பதிக்கோயில் முன்னுள் இந்து அறநிலைய ஆணையாளரும், காஞ்சி மஹாஸ்வாமிகளைக் கடவுளாக நினைத்து வழிபட்டு வந்தவருமான திரு. டாக்டர் M S ரமேசன், I A S (ஓய்வு) அவர்களின் ஒரு ஆராய்ச்சிக் கருத்துரையைக் கீழே வெளியிடுகிருேம்'' என்று பீடிகை.

கட்டுரை ஆசிரியர் ரமேசன் திருப்பதி மூலவர் விஷ்ணுதான் என்பதற்குச் சிறந்த ஆதாரங்களைக் காட்டியுள்ளார் என்பது உண்மை. ஆனால் கட்டுரையின் கடைசிப் பாராவில் அவர் கூறியுள்ள கருத்து இப்பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைப்பதாக இல்லை. பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைப்பதாக இருந்தால் ''திருப்பதி மூலவர் விஷ்ணுதான். இதில் ஐயமில்லை. அவரை மற்ற தெய்வமாக்க நினைப்பதோ, மற்ற தெய்வமாக நினைத்து வழிபடுவதோ மிகப் பெரிய தவறு'' என்று கட்டுரையை முடித்திருக்கவேண்டும். ஆனுல் அவர் அப்படி முடிக்கவில்லை. ஏனெனில் அவர்தான் காஞ்சி மஹாஸ்வாமிகளை நடமாடும் தெய்வமாகப் பாவித்து வழிபட்டவர் என்று ந்ருஸிம்ஹப்ரியாவே சான்றிதழ் வழங்கி விட்டதே! பிறகு எப்படி அவரது முடிவு தெளிவாக இருக்கும்? அவர் கட்டுரையின் கடைசிப் பாராவைக் கீழே தருகிறேன்.

''வெளித் தோற்றத்தில் திருப்பதியில் உறைபவன் மஹாவிஷ்ணுதான். ஆனால், அவனே, எல்லா உயிர்களின் உள்ளத்திலும் உறைபவன் (ஸர்வபூத அந்தராத்மா); ஶிவனுக்கும், முருகனுக்கும், பார்வதிக்கும் உள் உறைபவன் மஹாவிஷ்ணுதானே. ஆதலால் யார் எப்படி நினைத்துக்கொண்டு வழிபட்டாலும் அது நாராயணனையே போய்ச்சேரும். இதுதான் ஏழு மலைகளுக்கு அதிபதியான ப்ரபுவின் ரஹஸ்யம்'' இந்தப் பாராவை மேலோட்டமாகப் படித்தால் ஏதோ நியாயமாகத்தான் கூறியிருக்கிருர் என்

பது போல் தோன்றும். ஆனால் கூர்ந்து கவனித்தால்தான் இக் கருத்தில் உள்ள விஷமத் தன்மை புரியும். இது காமகோடி களுக்கும் அவரது அடிவருடிகளுக்கும் கைவந்த கலையல்லவா?

இவர் சொன்னபடி பார்த்தால், இவ்வுலகில் திருமாலுக் கென்று தனிக்கோயிலே தேவையில்லை என்றல்லவா கருதத் தோன்றுகிறது? எந்தப் பெருமாள் கோயிலுக்குச் சென்றாலும் அவரவர் இஷ்டப்படி எந்தத் தேவதையை வேண்டுமானாலும் நினைத்துக்கொண்டு அந்தத் தேவதைதான் அந்தக் கோயில் கர்ப்பக் கிருஹத்தில் இருப்பதாக எண்ணிக்கொண்டு வழிபட்டால் பெருமாள் அருள் கிடைத்துவிடுமா? பிறகு பெருமாளுக்கென்று தனி ஆகமம் தனிக்கோயில் என்று ஏன் தான் வைக்கவேண் டும்? அப்படி வைத்தவர்களை எல்லாம் முட்டாள் என்று ரமேசன் கருதுகிறாரா? எல்லா தேவதைகளுக்கும் அந்தராத்மா விஷ்ணு தான் என்பதை ரமேசன் சொல்ல வேண்டியதில்லை. அதை வேதம் சொல்லி விட்டது. திருப்பதி ஸ்வாமி யார்? என்ற கேள்விக்குத்தான் ரமேசன் பதில் சொல்லவேண்டும். திருப்பதி ஸ்வாமி விஷ்ணுதான் என்பதற்குச் சரியான ஆதாரங்களையெல் லாம் காட்டிவிட்டு முடிவில் திருப்பதி ஸ்வாமியை எந்த தெய்வ மாக வேண்டுமானாலும் நினைத்து வழிபடலாம் என்று கூறுவது எவ்விதத்தில் நியாயமாகும்? காஞ்சி ஸ்வாமியை நடமாடும் தெய்வமாகப் பாவிப்பவர் இப்படிக் கூறுவதில் வியப்பில்லை. ஆனால் இக்கட்டுரையைச் சரியாகப் படித்துப் பார்க்காமல் ந்ருஸிம் ஹப்ரியா வெளியிட்டதுதான் வியப்பாக உள்ளது. காமகோடி களின் அடிவருடிகள் எழுதும் இப்படிப்பட்ட (தொட்டிலையும் ஆட்டுவது பிள்ளையையும் கிள்ளுவது என்ற நிலையில் உள்ள) தெளிவற்ற கட்டுரைகளை வெளிடுவது ந்ருஸிம்ஹப்ரியா போன்ற வைணவப் பத்திரிகைகளுக்கு அழகல்ல. இப்படியெல்லாம் காம கோடிகளின் கருத்துக்களுக்கு ந்ருஸிம்ஹப்ரியா போன்ற வைணவப் பத்திரிகைகள் வக்காலத்து வாங்குவதால்தான் திரு மலையில் காமகோடிகள் வரம்புமீறிப் போகின்றனர். இந்நிலை தொடர்ந்தால் இன்னும் சில நாட்களில் திருப்பதிக் கோயில் ஒற்றைக்கோல் ஆசாமிகளின் பிடிக்குள் வந்துவிடும். இதனை உபயகலையாரிலும் உள்ள தூய வைணவ உணர்வுள்ள அன்பர் கள் புரிந்துகொண்டு காமகோடிகளுக்கு நல்ல பாடம் புகட்ட முன்வ ரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

ஜனவரி 2001 காமகோடி இதழில், 25—11—2000 அன்று சென்னையில் காமகோடி ஜெயேந்திரர் நிகழ்த்திய உரை வெளியிடப்பட்டிருந்தது. அதில் கீழ்க்கண்டபடி ஜெயேந்திரர் கூறியதாக வெளிவந்துள்ளது.

''ராமேஸ்வரம் கோயிலில் ஸ்ரீகாஞ்சி பீடத்திற்கு பாரம்பரியமாக மூலஸ்தானத்தில் போய் பூஜை செய்துவிட்டு வரும் வழக்கம் உள்ளது போல் திருப்பதிக் கோயிலிலும் உண்டு. திருப்பதியில் ஸ்ரீகாஞ்சி பீடத்திற்கு இப்படி ஒரு ஸ்பெஷல். இது என்னுடைய காலத்தில் வந்ததல்ல. அந்தக் காலத்திலேயே, ஸ்ரீ பரமாச்சார்யாள் காலத்திற்கு முன்பிருந்தே இருந்து வரும் வழக்கம் இது. ஆதி சங்கரர் அங்கே *தனுஹர்ஷண யந்திரம் வைத்ததாக ஸ்தல வரலாறு இருக்கிறது. அதிலிருந்து ஸ்ரீ காஞ்சி பீடத்திற்கு உள்ள ஸ்பெஷாலிட்டி இது. திருப்பதிக் கோயிலில் ஸ்ரீ ஆஞ்சநேயர் இருக்கும் மரத்தடிவரை கோயில் நிர்வாகத்தினர் வந்து எங்களுக்கு பிரசாதம் கொடுத்து மரியாதை செய்து, கோயில் கர்ப்பக் கிரஹத்துக்கு எங்களை அழைத்துச் செல்லவேண்டும். கர்ப்பக் கிரஹத்துக்குள் நாங்கள் சென்று ஸ்வாமியைத் தொடாமல் சாமரங்களைப் போட்டு பிரார்த்தனை பண்ணி தியானம் செய்வோம். பிறகு ஸ்வாமிக்கு ஹாரத்தி பண்ணி, ஸ்வாமிக்கு சாத்தும் வஸ்திரங்களை எங்களுக்குக் கொடுப்பர். பிறகு கோயில் அதிகாரிகள் எங்களைத் திரும்ப அழைத்துக்கொண்டு வந்து குறிப்பிட்ட ஒரு இடத்தில் கோயில் குடையை எங்களுக்குப் பிடித்து மரியாதை செய்வர். இப்படி காஞ்சீ பீடத்தில் திருப்பதிக் கோயிலில் ஒரு ஸ்பெஷாலிட்டி. அந்தக் காலத்திலிருந்தே இருந்து வருகிறது. இந்த விபரமெல்லாம் தேவஸ்தான பட்டயத்தில் இருக்கிறது. *வைதீக ஸம்ப்ரதாயம் உள்ள கோயில்கள் இவை. இப்போது ஸ்ரீ சிருங்கேரி ஸ்வாமிகளுக்கும் இரண்டு வைஷ்ணவாளுக்கும் இந்தக் கோயிலின் கர்ப்பக்ரஹத்துக்குப் போக அனுமதி கொடுத்திருக்கா.

''ராமேஸ்வரத்தில் மூலஸ்தானத்தில் யாரும் ஸ்வாமியைத் தொட்டு அபிஷேகம் பண்ணமுடியாது. ஸ்ரீகாஞ்சி பீடமும் ஸ்ரீ சிருங்கேரி பீடமும் தான் ஸ்வாமியைத் தொட்டு மூலஸ்தானத்தில் அபிஷேகம் செய்யலாம். இவை *வைதீகாள் பூஜை செய்யும்

---

'தனுஹர்ஷண' என்பது பிழை. 'தனுகர்ஷண' என்று இருக்க வேண்டும். 'வைதீக' என்பதும் பிழை. 'வைதிக' என்பதே சரி.

கோயில்கள். குருக்கள் பூஜை செய்யும் கோயில்கள் இல்லை என்பதை முதலில் தெரிந்துகொள்ள வேண்டும் வைஷ்ணவாளும் வைதீகாள்தான். 'சிவ ஓம்' என்பதற்கு பதிலாக திருமண் போட றுங்கற ஒன்றைத் தவிர வேறு வித்யாசம் கிடையாது. அதனால் ராமேஸ்வரத்திற்கும் திருப்பதிக்கும் எங்களை அழைப்பார்கள் போய் வருவோம். இந்த மாதிரி மரியாதை ஆதிசங்கரர் காலத்திலிருந்தே இருந்து வருகிறது''

மொட்டைத்தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுவது என்ற பழமொழிக்கேற்ப தனது குள்ளநரித்தனத்திற்கு ராமேஸ்வரத்தையும் திருப்பதியையும் இணைத்துப்பேசி சமாதானம் கூறுகிறார் காமகோடி ஜெயேந்திரர். ஸ்ரீராமன் தன் தோஷ நிவ்ருத்திக்காக சிவலிங்க பூஜை செய்தான் என்ற வேதத்ரோகமான கற்பனைக் கட்டுக்கதைக்கு ஆதாரமாகச் சைவர்களால் ஏற்படுத்தப்பட்டதுதான் ராமேஸ்வரம் கோயில் என்பது அனைவரும் அறிந்ததே. ஆகவே அக்கோயில் பற்றி நாம் எதுவும் சொல்ல அவசியமில்லை. ஆனால் திருப்பதி பற்றிய ஜெயேந்திரரின் கருத்துக்கு நாம் பதிலடி கொடுத்தே ஆகவேண்டும். இதிஹாஸங்கள், புராணங்கள், சங்க இலக்கியங்கள், ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் இவற்றிலெல்லாம் இடம்பெற்ற புகழ்மிக்க வைணவத் தலம் திருப்பதி. எம்பெருமானார் காலத்தில் அத்தலம் சைவர்களால் ஆக்ரமிக்கப்பட்டிருந்தபோது, எம்பெருமானாரின் தீவிர முயற்சியால், அத்தலம் குறித்து சைவர்கள் எழுப்பிய பொய்க் கருத்துக்கள் முறியடிக்கப்பட்டு, அது வைணவத் தலம்தான் என்று சந்தேகத்திற்கிடமின்றி உண்மை நிரூபிக்கப்பட்டது. அன்று முதல் வைணவ ஆகமங்களில் ஒன்றான வைகானஸ ஆகமப்படி அக்கோயிலில் வழிபாட்டு நடைமுறைகள் நடைபெற வழிவகை அமைத்துக் கொடுத்துள்ளார் எம்பெருமானார். ஆனால் ஜெயேந்திரர் ஆதிசங்கரர் காலத்திலிருந்தே திருப்பதிக்கோயில் கர்ப்பக்ருஹத்திற்குள் நுழைந்து வழிபாடு செய்யும் உரிமை காஞ்சி மடத்திற்கு வழங்கப்பட்டிருக்கிறது என்று கூறுகிறார். இவர் கூற்று பெரும் பொய்யல்லவா? இந்தக் காமகோடி மடம் தோன்றியே சில நூற்றுண்டுகள்தான் ஆகிறது என்று பாரத தேசத்திலுள்ள சிருங்கேரி, பூரி, துவாரகை சங்கரமடாதிபதிகள் ஒரு மனத்துடன் கூறுகிறார்களே? ஆதி சங்கரர் அங்கே 'தன ஹர்ஷண யந்திரம்' அமைத்துள்ளதாக இவர் கூறுவது வடிகட்டின பொய். அப்படி ஒரு செய்தி அக்கோயில் ஸ்தல வரலாற்றில்

இல்லை. திருப்பதிக் கோயிலில் காணிக்கை வசூல் பெருகி அக் கோயில் செல்வச் செழிப்புடன் விளங்குவதால் இப்படிக் கூறுகிறார் போலும். அப்படியானால் ரோமாபுரியில் உள்ள வாட்டிகன் நகர் சர்ச்சில் திருப்பதிக்கு இணையாக காணிக்கைவசூல் நடக்கிறதாம்; அங்கும் 'தனுஹர்ஷண' யந்திரத்தை ஆதிசங்கரர் அமைத்தார் என்று இவர் கூறுவாரா? உண்மை என்னவெனில்—பிருகு விஷ்ணுவின் மார்பில் உதைத்ததால் கோபம் கொண்ட பெரிய பிராட்டியார் விஷ்ணுவைவிட்டுப் பிரிந்தார். பிராட்டியைப் பிரிந்த பகவான் திருமலை வந்து பத்மாவதியை மணந்துகொண்டார். பிராட்டியைப் பிரிந்து இருந்ததால் பெருமாளின் அர்ச்சாவிக்ரஹத்தின் மார்பில் மஹாலக்ஷ்மி இல்லாமல் இருந்தது. எம்பெருமானார் சைவர்களின் வறட்டு வாதங்களை முறியடித்துவிட்டு, பொன்னுலான ஸ்ரீமஹாலக்ஷ்மியை, பெருமாளின் வல மார்பில் அமைத்தார். அதனால் பெருமாளின் மாமனார் என்ற வகையில் எம்பெருமானார் புகழப்பட்டார் என்று பிரபன்னாம்ருதம் கூறுகிறது. உண்மையில் ஶேஷாவதாரமான ஸ்ரீமத்ராமானுஜரின் திருக்கரத்தால் எம்பெருமான் திருமார்பில் மஹாலக்ஷ்மி வைக்கப்பட்டதாலேயே அங்கு செல்வம் கொழிக்கிறது.

காஞ்சி மடாதிபதிகள் திருமலை கர்ப்பக்ருஹத்துள் நுழைவதற்கு உரிமைப்பட்டையமே தேவஸ்தானத்தில் இருக்கிறது என்கிறார் ஜெயேந்திரர். அந்தப்பட்டையம் தொன்று தொட்டு இருந்தது என்பதற்கு என்ன ஆதாரம்? தேவஸ்தான அதிகாரிகள் சைவர்களாகவும் காமகோடி பக்தர்களாகவும் இருப்பதால் இவர் காலத்திலேயே இவரை கர்ப்பக்ருஹத்திற்குள் விடுகிறார்கள் என்பதல்லவோ உண்மை. காமகோடிகளுக்கு ஆள் பலமும் அரசாங்க பலமும் இருப்பதாலும், இப்படிப்பட்ட விரும்பத்தகாத அருவறுக்கத்தக்க சம்பவங்கள் திருமலையில் நிகழ்கின்றன. இதை லேசில் விட்டால், நாளை எல்லா வைணவத் தலங்களிலுமே காமகோடி கர்ப்பக்ருஹத்திற்குள் வரப் பட்டயம் இருப்பதாகக் கூறிவிடுவார் இவர். அப்புறம் நம் எம்பெருமானாரின் தர்சனத்தை நம் வீட்டுக்குள் மட்டும் வைத்துக்கொள்ளவேண்டிய நிலைதான் வரும். வைஷ்ணவ உணர்வுள்ளவர்களும் உண்மை வைணவர்களும் தீவிரமாகச் சிந்தித்து நீதிமன்றத்தில் நியாயம் கேட்க வேண்டிய விஷயமிது. எம்பெருமானாரின் தர்சனக் காப்பாளர்களாக மடங்களை இன்று அலங்கரித்துக் கொண்டிருக்கும் 'அழகிய சிங்கர்'

களும் ஜீயர்களும் இவ்விஷயத்தைக் கண்டு கொள்ளாமல் யோக நித்திரை செய்வது ஏன்? காமகோடிகளுக்கு பயந்து விட்டார்களா? இந்த அநியாயத்தைத் தடுத்து நிறுத்த இயலாமல், டோலோற்சவத்தையும், ததீயாராதனத்தையும் செய்து கொண்டிருந்தால் எம்பெருமானாரின் திருவுள்ளத்திற்கு உகப்பாகுமோ? வைணவ மடாதிபதிகள் சிந்திக்க வேணுமாய்ப் பிரார்த்திக்கிறேன்.

அத்வைதிகளுக்கு ஆலயத்தில் வேலையில்லை எனும் போது, தன்னை அத்வைத ஆசார்யரான ஆதிசங்கரரின வழிவந்தவர் என்று கூறிக்கொண்டு, சைவ வேஷம் தரித்து, ஊரை ஏமாற்றிக் கொண்டிருக்கும் இவரை திருப்பதிக் கருவறையில் நுழைய விடலாமா? அங்குள்ள வைணவர்கள் ஏன் கொதித்தெழவில்லை? வைணவர்களின் இந்தப் பொறுமை சரியில்லை. வைதிகத்தைப் பற்றிப் பேசுகிறார் இந்த ஆசாமி. சைவ சமயமும், அச்சமயத்தின் பழக்க வழக்கங்களும் அவைதிகமென்றும் வேதத்திற்கு முற்றிலும் புறம்பானவை என்றும் தமது ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யத்தில் எழுதியவர் ஆதிசங்கரர். அவர் வழி வந்தவராகக் கூறிக்கொள்ளும் இவரை, உணர்வால் முழுச் சைவராக இருந்துகொண்டு அதற்குரிய வேஷமான சாம்பலையும் ருத்ராட்சத்தையும் அணிந்து கொண்டு இருக்கும் இவரை, வைதிக வைஷ்ணவ ஸம்ப்ரதாயமுள்ள ஆலயங்களின் கருவறையில் நுழைய விடலாமா? இது வைகாநஸாகமத்திற்கு முரணாயிற்றே. இவரது அக்ரமங்களுக்கெல்லாம் ஆதி சங்கரரை வேறு அடிக்கடி துணைக்கு இழுக்கிறார் இவர். பாவம் ஆதி சங்கரர்! ஆதிசங்கரரின் பெயரையும் கெடுத்து திருமலைக்கோயிலையும் கெடுத்துக் கொண்டிருக்கும் இவரை மக்கள் புரிந்துகொள்வது நல்லது

பிப்ரவரி-2001 'ஆன்மீக ஜோதி' இதழில் வேம்பத்தூர் கிருஷ்ணன் என்பவர் பழந்தமிழர்களின் சமயம் சைவம் தான் என்று தனது கட்டுரையில் நிரூபிக்க முனைகிறார். சில மேலை நாட்டு ஆராய்ச்சியாளர்களின் கருத்துக்களாகச் சிலவற்றைக் கூறிவிட்டு, வழக்கம்போல் மொஹஞ்சதாரோ அகழ்வாராய்ச்சித் தகவல்களையும் சொல்லி சைவத்தைத் தமிழர் சமயமாக்க முயற்சிக்கிறார். மேலும் கீழ்க்கண்ட ஒரு செய்தியையும் குறிப்பிடுகிறார்.

"பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த ஆதித் தென் மதுரையிலே முதல் தமிழ்ச்சங்கம் இருந்தது. சிவனும் முருகனும்

அகத்தியரும் இருந்து ஆதிசைவ சமய வேத ஆகமங்களை (பண்டைய நான்மறை) அருளினர். முதல் தமிழ்ச்சங்கம் கடற் கோளால் அழிந்து அடுத்து உருவான கபாடபுரத்தில் இரண்டாம் தமிழ்ச்சங்கம் உருவாகி அதுவும் கடலுள் மூழ்கியது. இப்போ தைய குமரிக்கடல், அப்போது தமிழ்ப் பொதிகைத் திருமலையாக இருந்தது. இப்போதைய இமயமலை அப்போது கடலாக இருந்த தற்கான விஞ்ஞான பூர்வச் சான்றுகள் இன்றும் உண்டு. மூன்று வது மதுரையான உத்தர மதுரையின் தமிழ்ச்சங்க இலக்கியங் களே தொல்காப்பியம், அகநானூறு, புறநானூறு முதலான நாம் காணும் இன்றைய சங்க இலக்கியங்களாகும். தொன்மையான தமிழர்களின் ஆகம நாகரீகமும் வடக்கிலிருந்து வந்த ஆரியவேத இதிஹாஸ மந்திர நாகரீகமும் இரண்டறக் கலந்து, இறைவழி பாட்டில் புதியதோர் சகாப்தத்தை ஏற்படுத்தின. கடற்கோளால் அழிந்துபோன பழந்தமிழர் ஆகமங்களுக்குப் பதிலாக சிவபெரு மானின் திருவருளால் சிவனருட்செல்வர்களால் பாடப்பெற்ற, காலத்தால் அழியாத, அழிக்கமுடியாத சைவ சமயமெனும் மணி மாளிகையின் பிரதானத் தூண்களாக விளங்குபவை பன்னிரு திரு முறைகள்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

ஒருவன் மற்றொருவனைப் பார்த்து ''உனக்கென்று சொல்லிக் கொள்ள சொத்து எதுவும் உண்டா?'' என்று கேட்டானும். அதற்கு அவன் ''நடுக்கடலுக்கு அப்பால் உள்ள 50 ஏக்கர் நிலமும் என்னுடையதுதான்'' என்றானும். இப்படித்தான் இருக் கிறது வேம்பத்தூர் கிருஷ்ணன் கூறுவதும். தற்போது சங்க இலக்கியங்கள் என்று எல்லாத் தமிழ் ஆராய்ச்சியாளர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட எட்டுத்தொகை பத்துப்பாட்டு நூல்களி லிருந்து ஏராளமான சான்றுகளைக் காட்டி ஸுதர்சனர் ஸ்வாமி, வைணவமே சங்ககாலத் தமிழர் சமயம் என்று, தமது 'சங்ககாலத் தமிழர் சமயம்', 'சாதிமத ஆராய்ச்சி', 'வைணவமே வைதிக மதம்', 'வைஷ்ணவமத விஜயம்' முதலான நூல்களில் அசைக்க முடியாதபடி நிலைநாட்டியுள்ளார். இதற்கு மாறாக, 'சைவம்தான் தமிழர் சமயம்' என்பதற்கு இவரால் ஆதாரம் காட்ட இயலாது. அதனால் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஒரு தமிழ்ச்சங்கம் இருந்ததாகவும் அதை சிவனும் முருகனும் வளர்த்ததாகவும், அப் போது பழந்தமிழர் சமயமாக சைவ சமயம்தான் இருந்தது என் றும், அச்சங்கம் கடற்கோளால் அழிந்து விட்டதாகவும் கதைவிடு

கிறுர். இக்கதைக்கு ஆதாரத்தை இவரால் காட்ட முடியுமா? இந் நாட்டு மக்களைப் பிரித்தாளும் சூழ்ச்சிக்காக மேலை நாட்டவர் கற் பித்ததே ஆரிய—திராவிடப் பாகுபாடு. இந்த ஆரிய—திராவிடப் பாகுபாடு உள்நோக்கம் கொண்ட கற்பனைதான் என்று தற்போது வரலாற்று ஆராய்ச்சியாளர்களால் நிரூபிக்கப்பட்டுவிட்டது. ஒரு நாட்டவரின் சமூக சமயக் கொள்கைகளை அந்நாட்டில் உருவான தொன்மையான நூல்களைக் கொண்டுதான் சரியாக அறிய முடி யுமே தவிர, அகழ்வாராய்ச்சியில் கண்டெடுக்கப்பட்ட பொருட் களைக் கொண்டு அறியவே முடியாது. அகழ்வாராய்ச்சி முடிவு கள் எல்லாம் கருதப்பட்ட உண்மைகளே (Considered truths). நிரந்தர உண்மைகள் அல்ல. மொஹஞ்சதாரோ—அகழ்வாராய்ச் சிச் செய்திகள்கூட இன்னும் சர்ச்சையிலேயே உள்ளன. ஆகவே பழந்தமிழர் சமயம் குறித்து வேம்பத்தூர் கிருஷ்ணன் கூறும் கருத் துக்கள் ஆதாரமற்றவை. 'பழந்தமிழர் சமயம் வைணவமே' என் பதை ஸ்ரீ ஸுதர்சனர் அவர்கள் 'சாதிமத ஆராய்ச்சி', 'சங்ககாலத் தமிழர் சமயம்' முதலான நூல்களில் ஆதாரபூர்வமாக நிலைநாட்டி யுள்ளார்கள். இந்த நூல்கள் திருச்சி, புத்தூர் அக்ரஹாரம், ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் அலுவலகத்தில் கிடைக்கும். நேர்மை யிருந்தால் இவர் அவற்றை மறுக்க முற்படுவாராக.

மார்ச்-2001 'ஆன்மீகம்' இதழில் காழியூர் நாராயணன் என் பவர் 'மதமும் ஆன்மீகமும்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதி யுள்ளார். காழியூர் நாராயணன் ஒரு தென்கலை வைணவர். மிகத் தெளிவாக இவரது நெற்றியைத் தென்கலைத் திருமண் அலங்கரிக் கிறது. ஆனால் இவரது தோற்றத்துக்குத் தகுந்தவாறு இல்லை இவரது கருத்துக்கள். இவரது கட்டுரையில் இடம்பெற்ற சில கருத்துக்களின் சாரத்தைக் கீழே தந்து விமர்சிக்கிறேன்.

" 'எம்மதமும் சம்மதமே' என்பது முற்றிலும் உண்மை. ஆனால் எல்லாரும் தவருகப் புரிந்து கொண்டிருக்கிருர்கள். எம்மதமும் சம்மதமே என்பதால் நீ எந்த மதத்திலும் சேரவேண்டாம். எந்தமதக் கோட்பாட்டையும் பின்பற்ற, கடைபிடிக்கவேண்டாம், உன்னிஷ்டம் போல் யாரோடு வேண்டுமானாலும் சம்பந்தம் வைத்து ஆசார அனுஷ்டானத்தை இழந்துவிடலாம் என்றெல்லாம் தங்களுடைய சிற்றின்பங்களுக்கும் வசதிகளுக்கும் இதைப் பயன் படுத்திக் கொள்கிருர்கள். மதம் எல்லோருக்கும் மிகவும் முக்கி

யம். அது பலவகைப்பட்டதாயிலும் உசத்தி, மட்டம் என்று சண்டையிடலாகாது. உண்மையில் மதவாதி யாரும் அடுத்த மதத்தை வெறுக்கமாட்டார்கள். அதே சமயம் தங்களின் கோட்பாடுகளை விட்டுவிடவும் மாட்டார்கள். சைவ மதத்தில் பிறப்புள்ள காஞ்சி சங்கராசார்யார் திருப்பதியில் வைணவருடன் சேர்ந்து லட்சுமி யாகம் நடத்தினார்கள். இதைவிட மத ஒற்றுமைக்கு வேறு நிகழ்ச்சி இருக்கமுடியாது. திருப்பதிக்குச் சென்று ஏழுமலையானை தரிசித்துவிட்டு வரும் வழியில் திருத்தணி முருகனை தரிசித்தால் முருகன் கோவித்துக் கொள்ளமாட்டார். வணங்குபவருக்கு இரட்டிப்பான ஆசீர்வாதமே கிடைக்கும்.'' இதுவே அவரது கட்டுரைச் செய்தியின் சாரம்.

ஒருவனுக்கு ஒரு விஷயத்தில் தெளிவை ஏற்படுத்தவேண்டும் என்றால், எது சரி எது தவறு என்பதை ஆதாரபூர்வமாக அவனுக்குத் தெளிவுபடுத்தவேண்டும். சரியானதையும் தவறானதையும் இனங்காட்டும்போது இது உயர்ந்தது இது தாழ்ந்தது என்று சொல்லித்தான் ஆகவேண்டும். மத விஷயத்தில் ஆதிசங்கரர், ஸ்ரீமத் ராமாநுஜர் போன்ற ஆசார்யர்களெல்லாம் தங்கள் பாஷ்யங்களில் இதைத்தான் செய்தார்கள். உலகில் உள்ள பல்வேறு மதங்களைக் கண்டித்து வைணவமே சிறந்தது என்று உலகிற்கு உணர்த்தியவர்கள் இந்த மஹான்கள். ஆதிசங்கரர் அத்வைதியானாலும் வைணவர் என்பது அவரது பாஷ்யங்களில் தெளிவு. காழியூர் நாராயணனின் கூற்றின்படி பார்த்தால் இவர்கள் செய்ததெல்லாம் முட்டாள்தனமான செயல் என்றல்லவா சொல்ல வேண்டியுள்ளது. ''மதவாதிகள் யாரும் அடுத்த மதத்தை வெறுக்கமாட்டார்கள். அதே சமயம் தங்களின் கோட்பாடுகளை விட்டு விடவும் மாட்டார்கள்'' என்று கூறுகிறார் இவர். இவ்வாறு கூறும்போது இவர் முரணாகப் பேசுகிறார் என்றுதான் கூறமுடியும். தங்களுக்கென்று விதிக்கப்பட்ட மதக் கோட்பாடுகளை விட்டுவிடாமல் ஒருவன் கடைப்பிடித்தால் அடுத்த மதத்தை ஒதுக்கித்தான் ஆகவேண்டும். அடுத்த மதத்தை வெறுக்காமல் ஒருவன் இருக்கிறான் என்றால் அவன் தனக்கு விதிக்கப்பட்ட மதக்கோட்பாடுகளை விட்டுவிட்டான் என்றுதான் பொருள். உதாரணமாக ஒரு வைணவன் மறந்தும் புறந்தொழாதவனாக இருக்கவேண்டும். அதாவது ஒரு வைணவன் தன் மதக் கொள்கையை விட்டுவிடாமல் இருக்கிறான் என்றால், அவன் திருமாலைத் தவிர வேறு தெய்

வத்தைத் தொழக்கூடாது. இந்த உறுதியான கோட்பாட்டை உடைய ஒரு வைணவன் 'எல்லாத் தேவதைகளையும் வணங்கலாம்' என்ற வைணவக் கோட்பாட்டுக்கு முரணான கொள்கையை உடைய வேறு ஒரு மதத்தை எவ்வாறு வெறுக்காமல் இருக்கமுடியும்? அப்படி அந்த மதக்கோட்பாட்டையும் வைணவன் ஏற்றுக் கொண்டு வெறுக்காமல் இருந்தால் இவன் வைணவக் கோட்பாட்டை விட்டுவிடாமல் எப்படி அதில் உறுதியாக இருக்கமுடியும்? இவ்விஷயங்களையெல்லாம் காழியூர் நாராயணன் ஏன் சிந்திக்கவில்லை? 'எம்மதமும் சம்மதம்' என்பவர் இவர் சொல்வது போல் தமது மதநம்பிக்கையை விடாதவர்களாகார்கள். விட்டவரே யாவர். நல்லது கெட்டது தெரியாமல் ஆன்மிகக் குருடர்களாக மாறிவிடுவர். 'எம்மதமும் சம்மதம்' என்ற கோட்பாட்டை ஏற்று நல்லது எது கெட்டது எது என்று தெரியாமல் ஆன்மிக விஷயத்தில் தெளிவற்றிருக்கும் ஆன்மிக அந்தகர்களும், நாத்திகர்களும் கிட்டத்தட்ட ஒன்றுதான். அடுத்த மதத்தவரை மனிதநேயத்தோடு பார்க்கவேண்டும் என்ற கருத்து யாவருக்கும் உடன்பாடானதே. அதற்காக அடுத்த மதத்தவரின் கோட்பாட்டையும், பழக்க வழக்கத்தையும் ஏற்றுக்கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. மனிதநேயம் வேறு, மதக்கோட்பாடு வேறு. மனிதநேய அடிப்படையில் எல்லா மதத்தினரும் ஒற்றுமையாக இருக்க முடியும். ஆனால் மதக் கோட்பாடுகளின் அடிப்படையில் ஒன்றிணைய இயலாது. தன் மதக் கோட்பாட்டில் உறுதியாக நின்று அடுத்த மதக்கோட்பாட்டை சகித்துக் கொள்வதுதான் மதங்களிடையே சண்டை ஏற்படாமல் இருக்கவழி. பல மதங்களைக் கண்டித்த சங்கரர், ஸ்ரீமத் ராமாநுஜர் போன்றோர் மதச் சண்டையைத் தூண்டியவர்களுமல்ல, மனிதநேயத்தை மறந்தவர்களுமல்ல. மாறாக மக்கள் மனதில் அவரவர் முறையில் ஆன்மிகத் தெளிவு ஏற்பட வழிகாட்டியவர்கள் அவர்கள். திருப்பதியில் காஞ்சி சங்கராசார்யர் வைணவருடன் சேர்ந்து லட்சுமி யாகம் நடத்தியதை மத ஒற்றுமைக்கு உதாரணமாகக் காட்டுகிறார் இவர். திருப்பதியில் உள்ளவர்கள் தைரியமுள்ள வைணவர்களாக இருந்திருந்தால் காஞ்சி சங்கராசார்யர் இச்செயலை அங்கு செய்ய அனுமதித்திருக்கமாட்டார்கள். ஒரு கிறிஸ்துவ தேவாலயத்திலோ, இஸ்லாமிய மசூதியிலோ, காஞ்சி மடாதிபதி வழிபாடு நடத்த முடியுமா? இவர் சென்றாலும் அவர்கள் அனுமதிக்கமாட்டார்களே.

ஏனெனில் கிறிஸ்தவர்களும் முஸ்லீம்களும் மத விஷயத்தில் தன் மானமும் சூடு சொரணையும் உள்ளவர்கள். "ஏழுமலையானை தரிசித்துவிட்டு திருத்தணி முருகனை சேவித்தால் முருகனுக்கு கோபம் வந்து விடாது" என்று கூறுகிறார் காழியூர் நாராயணன். வைணவரான இவர் இப்படிக் கூறுவது வெட்கக்கேடு. நெற்றியில் திருமண்ணை மட்டும் சார்த்திக்கொண்டு வைணவ மதக்கொள்கைக்கு முரணாகப் பேசும் இவரை ஒரு வைணவத்ரோகி என்றுதான் சொல்லவேண்டும். வைணவர்களில் காழியூர் நாராயணனைப் போன்ற புல்லுருவிகள் இருப்பதால்தான் வைணவம் நலிந்து வருகிறது. இதை நினைத்துப் பார்க்கவே வேதனையாகவும் வருத்தமாகவும் உள்ளது.

மார்ச்-2001 குமுதம் பக்தி ஸ்பெஷலில் 'சீதை வடித்த சிவலிங்கம்' என்ற தலைப்பில் ஜபல்பூர் நாகராஜ சர்மா என்பவர் இராமன் தோஷ நிவ்ருத்திக்காக ராமேச்வரத்தில் சிவலிங்கபூஜை செய்ததாகக் கூறப்படும் கற்பனைக் கட்டுக்கதையை விரிவாகக் கூறி, இத்தல வரலாற்றுக்கு ருக்வேதம் யஜுர்வேதம் ஆகியவற்றிலும், விஷ்ணுபுராணம், வால்மீகி ராமாயணம், கம்பராமாயணம் ஆகியவற்றிலும் ஆதாரமிருப்பதாகக் கூறுகிறார். இந்நூல்களிலெல்லாம் ராமேச்வர வரலாறு கூறப்படுகிறது என்று கூறும் இவர், இந்நூல்களிலிருந்து ஆதாரங்களை எடுத்துக் காட்டவில்லை. இவர் கூறுகிறபடி வேதத்திலோ விஷ்ணு புராணத்திலோ ராமேஸ்வரம் பற்றிய செய்தியே இல்லை. கம்பராமாயணத்திலோ, வால்மீகி இராமாயணத்திலோ இக்கட்டுக் கதைத் தலத்தைப் பற்றிய பேச்சே இல்லை. அப்படியிருக்கும் போது இவர் எப்படி ஆதாரம் காட்ட முடியும்? "நாம் எதையாவது சொல்வோம்! யார் புராணங்களைப் புரட்டிப் பார்க்கப் போகிறார்கள்" என்ற எண்ணத்தில் இந்த பிரம்மாண்டப் புளுகைச் சொல்லி விட்டார் போலும்! குமுதம் பக்தி ஸ்பெஷலின் நிர்வாகிகளைப் போன்ற அரைகுறைகள் வேண்டுமானால் இவர் சொல்வதைக் கேட்பார்கள். எல்லோரும் கேட்க மாட்டார்கள். பத்திரிகை விற்பனைக்காக குமுதம் நிர்வாஹம் இப்படித் தரங்கெட்டுப்போனது மிகவும் வெட்கப்படவேண்டிய விஷயம்.

# ஸுதர்சனம் ஆசிரியரின் குறிப்பு

இதுவரையில் நமது நண்பர் S. பத்மநாபன் அவர்கள் எழுதி வரும் இராமபாணக் கட்டுரைகள் பற்றி வைணவர்கள் பலர் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கடிதம் எழுதி வருகிறார்கள். நேரிலும் கூறுகிறார்கள். இந்தக் கட்டுரைகளைப் பொது மக்களுக்குப் பரப்புவதில் வைணவ இளைஞர்கள் பலர் ஈடுபட வேண்டும். சில மாதங்களில் இராமபாணம் முதல் பாகம் தனிப் புத்தகமாகவும் வெளிவரும். அப்போது இதை நம் பத்திரிகை வாசகர்களல்லாத பலரிடம் நம் வாசகர்கள் பரப்ப முன் வரவேண்டும். லட்சக்கணக்கான பிரதிகள் விற்கும் பத்திரிகைகளில் பொய்ப்பிரசாரம் செய்யப்படுகிறது. ஆயிரக்கணக்கானவர்களையே எட்டக்கூடிய நம்முடைய ஸுதர்சனத்தால் இந்தப் பொய்ப்பிரசாரங்களை முழுவதும் முறியடிக்க முடியாது. ஆகையால், நம் வாசகர்களில் பலர், குறிப்பாக இளைஞர்கள், இந்த நாட்டில், வைணவத்திற்கு விரோதமாக அஸுர ராட்சஸ பலத்துடன் பொதுஜனப் பத்திரிகைகளால் செய்யப்படும் பொய்ப் பிரசாரங்கள் ஆதாரமற்றவை என்று மக்களிடம் எடுத்துக்காட்டி, உண்மை நிலையை விளக்குவதற்கு, இந்த இராமபாணக் கட்டுரைகளைப் பரப்புவது ஒன்றுதான் முக்கியமான வழி.

வேதம், இதிஹாஸ புராணங்கள், சங்க இலக்கியங்கள், பழைய வடமொழிக் காவியங்கள், ஆழ்வார்களின் அருளிச் செயல்கள், ஆசார்யர்களின் க்ரந்தங்கள் ஆகியவற்றிலிருந்து ஸ்ரீமந் நாராயணனே பரமாத்மா என்னும் விஷயம் அசைக்க முடியாதபடி விளங்குகிறது என்று ஸுதர்சனத்தால் கடந்த 53 வருஷங்களாக விஷ்ணுசித்த விஜயம், சங்ககாலத் தமிழர் சமயம் முதலான நூல்கள் வாயிலாக நிலைநாட்டப்பட்டுவிட்டது. அதற்கு நேர்மையாக பதில் சொல்ல இயலாமல் புல்லுருவிகள்போல் பல பத்திரிகைகள் தோன்றி, பொய்ப்பிரசாரங்களைப் பாமர மக்களிடம் பெரிய அளவில் செய்து வருகின்றன. இதை உண்மைப் பிரசாரத்தின் மூலம் நாம் முறியடிக்காவிட்டால், உண்மை பொய்யாகவும், பொய் உண்மையாகவும் மாறிவிடும என்பதை வைணவர்கள் உணர்ந்து செயல்படவேண்டும்.

ஏப்ரல் 2001 காமகோடி இதழில் காஞ்சி "சின்னப் பெரிய வாள்" சங்கர விஜயேந்திர சரஸ்வதி, "வியாஸர் தான் எழுதிய பதினெண் புராணங்களிலும் 'பிறருக்கு உதவி செய்வது புண் யம், பிறருக்கு தீங்கிழைப்பது பாபம்' என்ற இக்கருத்துக்களைத் தான் வலியுறுத்தியுள்ளார்" என்று கூறி,

அஷ்டாதச புராணேஷு வ்யாஸஸ்ய வசனத்வயம் |
பரோபகார: புண்யாய பாபாய பரபீடனம் ||

என்று ஒரு ஸ்லோகத்தை எடுத்துக் காட்டுகிறார். இந்த ஸ்லோ கம் "சின்னப் பெரியவாள்" அல்லது அவரைப் போன்ற ஒருவர் செய்தது என்பது ஸ்லோக அமைப்பிலேயே தெரிகிறது.

ஸ்லோகார்த்தே₄ந ப்ரவக்ஷ்யாமி யது₃க்தம் க்₃ரந்த₂ கோடிபி₄: |
பரோபகார: புண்யாய பாபாய பரபீட₃நம் ||

என்பது வியாஸர் செய்த ஸ்லோகம் என்று பிரசித்தமானது. இதை மேற்கண்டவாறு மாற்றி எழுதிவிட்டால் பதினெட்டுப் புராணங்களையும் செய்தவர் வியாஸர்தான் என்று உறுதிப்படுத்தி விடலாம் என்ற காரணத்தால்தான் ஸ்லோகத்தை மாற்றி எழுதி யுள்ளார்கள் இவர்கள். "ஸ்லோகார்த்தே₄ந" எனத் தொடங்கும் ஸ்லோகத்திற்கு, "கோடிக்கணக்கான க்ரந்தங்களின் மூலம் சொல்லப்பட்ட விஷயத்தை அரை ஸ்லோகத்தினால் சொல்கி றேன். அதுவே 'பரோபகாரத்தால் புண்யம்; பரபீடனத்தால் பாபம்' என்பது" என்று பொருள். ஆனால் ஸ்லோக வடிவை மாற்றி, பதினெண்புராணங்களையும் வியாஸர் செய்ததாகக் கூறுகிறார் சின்னப் பெரியவாள். அடிப்படையில் ஒன்றுக்கொன்று முரண் பட்ட பதினெட்டு புராணங்களை எப்படி ஒருவர் செய்திருக்க முடியும்? ஒரு புராணத்தில் 'சிவனே அனைத்திற்கும் காரணன்" என்று சொல்லிவிட்டு மற்றொரு புராணத்தில் ' விஷ்ணுவே அனைத் திற்கும் காரணன்" என்று சொன்னால் வியாஸரை ஒரு முட்டாள் என்றல்லவா சொல்லவேண்டி வரும்!

தினமலர் பக்திமலர் 27, ஏப்ரல் 2001 இதழில் இதே சின் னப் பெரியவாள் "ஆதிசங்கரர் எந்த சமயத்தையும் கண்டிக்க

வில்லை'' என்றும் ''எல்லா மதங்களையும் ஆறு பிரிவாகத் தொகுத்து ஷண்மதஸ்தாபனம் செய்து த்வேஷமற்ற ஆன்மீகக் கலா சாரத்தை உருவாக்கினுர்'' என்றும் கூறியிருக்கிருர்.

ஆதிசங்கரர் எந்த சமயத்தையும் கண்டிக்கவில்லை என்று இவர் கூறுவதன் மூலம் ஆதிசங்கரரின் ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தை இவர் பார்க்கவில்லை என்பது புலப்படுகிறது. அல்லது பார்த்திருந்தும் பொய் கூறுகிருரோ என்னவோ? ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபனம் செய்தார் என்று கூறுவதன் மூலம இவர் ஸ்ரீஸுதர்சனரின் ''ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரா'' என்ற நூலைப் படிக்கவில்லை என்பது தெரியவருகிறது. இப்போதும் ஸுதர்சனம் காரியாலயத்தில் கிடைக்கும். அதைப் பெற்றுப் படித்து விட்டுப் பிறகு பேசட்டும். ''சின்னப் பெரியவாள்'' பிறப்பதற்கு முன்பே ஸுதர்சனத்தில் இந்நூல் வெளிவந்தது. இதில் அத்வைதிகளைக் குறித்துப் பல கேள்விகளைக் கேட்டார் ஸுதர்சனர். இவற்றுக்கு பதில் உரைக்க முற்பட்டு, காமகோடி சிஷ்ய கோடிகளில் ஒருவரான வரஹூர் கல்யாண ஸுந்தர சாஸ்திரிகள் 'சங்கரரும் வைணவமும்'' எனும் நூலை ஸுதர்சனரிடமிருந்து பெற்று பதில் உரைக்க முடியாமல் படுதோல்வியடைந்தது ஆத்திக உலகம் அறிந்தது. இவரைக் குறித்து நான் ஒரே ஒரு கேள்விமட்டும் கேட்கிறேன். அதற்கு மட்டும் இவர் பதில்சொல்லிவிட்டால் இவரது புத்திசாலித்தனம் மெச்சப்படும். அதாவது –

''ஆதிசங்கரர் உலக மக்களின் நன்மைக்காக 6 மதங்களை உருவாக்கினுர் என்ருல், அவர் தன் வாழ்நாள் முழுவதும் எந்த மதத்தைச் சார்ந்தவராக இருந்தார்? இந்த ஆறுமே சிறந்தது தான் என்று கருதி இந்த ஆறு வழிகளையும் பின்பற்றியவர் அவர் என்று சொன்னுல் ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் அவர் சைவம் முதலிய மதங்களைக் கண்டித்திருப்பதற்கு முரணுகுமே! அல்லது இந்த ஆறுவழிகளில் ஏதாவது ஒன்றை அவர் பின்பற்றிபவர் என்ருல், தனக்கு மட்டும் நலம் தரும் ஒரு வழியைத் தான் தேர்ந்து எடுத்துக்கொண்டு உலகத்திற்கு ஆறுவழிகளைக் காட்டி உலக மக்களை ஏமாற்றிய ஒரு சுயநலவாதியாகவல்லவா ஆதி சங்கரர் இருந்திருக்கவேண்டும்? இந்த இரண்டுமே இல்லையெனில் ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபனம் செய்தார் என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? இதற்கு மட்டும் சின்னப் பெரியவாள் பதில் சொல்லட்டும்.

2001 மார்ச் 25, தினமலர் வாரமலர் இதழில் "சாம்பலும் சாபநிவர்த்தியும் பாபவிமோசனமும்" என்ற தலைப்பில் பேராசிரியர் எஸ். கண்ணன் என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில்,

இந்திரனுடன் சேர்ந்து தவறு செய்த அகலிகையை கௌதமர் "இந்த ஆச்ரமத்திலேயே யாவர்க்கும் புலப்படாமல் காற்றையே ஆதாரமாகக் கொண்டு, சாம்பலில் படுத்தவளாய் வெகுகாலம் தவம் செய். தசரதராமனின் தரிசனமே உனக்கு சாப விமோசனம்" என்று சபித்தார் என்று வால்மீகி ராமாயணத்தில் வருகிறது. 'சாம்பலில் படுத்தவளாய்' (பஸ்ம சாயிநீ) என்பதன் மூலம் பாபம் செய்தவர்கள் திருநீற்றின் சம்பந்தம் பெற்றால் பாபம் நீங்கப் பெறுவர். ஆகவே விபூதியின் பெருமை வால்மீகி ராமாயணத்திலேயே சொல்லப்படுகிறது. "கிருஷ்ணபகவானே சர்வாங்கங்களிலும் விபூதி பூசிக்கொண்டு ஒரு வருடகாலம் பரமேச்வரனை ஆராதித்தார் என்று கூர்மபுராணம் கூறுகிறது" என்று எழுதியுள்ளார்.

கவிதைக் கடலுக்குக் கரை கண்ட கவிக்குயில் வால்மீகியின் திருவுள்ளத்தைப் புரிந்து கொள்ளாமல் பேசுகிறார் பேராசிரியர் எஸ். கண்ணன். சாபம் வேறு, சாபவிமோசனம் வேறு. அதாவது கௌதமர் 'சாம்பலில் சயனித்தவளாய்' (பஸ்ம சாயிநீ) என்று சபிக்கிறார். ஸ்ரீராமனின் திவ்ய தரிசனமே அகலிகைக்கு அவர் தந்த சாப விமோசனம். இதன் மூலம் மிகப் பெரியதும் சிறந்ததுமான ஒரு விஷயத்தை சூசகமாகத் தெரிவிக்கிறார் முனி ஸிம்ஹமான வால்மீகி பகவான். அதாவது— 'புத்தி பூர்வகமாக வ்யபிசார தோஷத்தை அடைந்த அகலிகையை சாம்பலில் படுத்திருக்கும்படி சபிப்பதன் மூலம், பாபம் செய்தவர்களுக்கு மட்டுமே சாம்பலின் சம்பந்தம் அதாவது விபூதியின் சம்பந்தம் இருக்கும்' என்று தெளிவாகக் குறிப்பிடுகிறார். "நீ குற்றம் செய்தாய், அதனால் நீ சாம்பலில் படுத்திரு" என்று கௌதமர் சபிக்கிறார். ஆகவே விபூதி சம்பந்தம் இருப்பவர்கள் விபூதி தரிப்பவர்கள் எல்லோருமே பாபிகள் என்றுதான் அர்த்தம். பராசர விசிஷ்ட பரமதர்மசாஸ்த்ரம், வஸிஷ்டஸ்ம்ருதி, ஆதித்யபுராணம், வராஹபுராணம், யமஸ்ம்ருதி, கௌதம ஸூத்திரம், ஆபஸ்தம்ப ஸூத்திரம் இவற்றில் பஸ்ம தாரணம், டஸ்மஸ்பர்சம் ஆகியவை தோஷம் என்று விலக்கப்பட்டிருப்பதைக் காண

வும். (இந்த நூல்களிலிருந்து மேற்கோள்கள் ஸ்ரீஸுதர்சனர் அவர்களின் விஷ்ணுசித்த விஜயத்தில் வெகுவாகக் காணப்படுகின்றன.) ஸ்ரீராமதரிசனம் உனக்குக் கிடைத்தபின் நீ பழைய நிலை அடைவாய். (அதாவது சாம்பல் சம்பந்தத்திலிருந்து விடுபடுவாய்) என்று கௌதமர் சாபவிமோசனம் அளிக்கிறார். ஆகையால் சாம்பலில் படுத்திருந்ததால் அகலிகை புனிதமடையவில்லை. அவள் பாபம் செய்ததாலேயே அவளுக்கு சாம்பலின் சம்பந்தம் ஏற்பட்டது. ராமனின் தரிசனம் கிடைத்த பின்புதான் அவள் சாபம் நீங்கிப் புனிதம் அடைந்தாள் என்பது வால்மீகி ராமாயணத்தில் தெளிவாக உள்ளது. இந்த அகலிகை விருத்தாந்தம் மூலம் வால்மீகி ராமாயணத்தில் விபூதியின் சிறுமைதான் தெரிகிறதே தவிர, பெருமை பேசப்படவில்லை. பேராசிரியர் எஸ். கண்ணன் இதை உணர்வாராக. கூர்மபுராணம் போன்ற தாமஸ புராணங்களில் கிருஷ்ணன் விபூதி தரித்துக்கொண்டு சிவனைப் பூஜித்தார் என்று கூறியிருந்தாலும் தாமஸமாகையால் அது ப்ரமாணமாகாது. ஆகவே அகலிகை விருத்தாந்தம் மூலம் சாம்பல் தரிப்பவர்கள் அனைவரும் பாபிகள் என்ற கருத்தே நிரூபிக்கப்படுகின்றது.

உ—5—2001 தேதியிட்ட துக்ளக் இதழில் கேள்வி பதில் பகுதியில் வழக்கம்போல் சோ தன் அரசியல் கிண்டலுக்கு தென்கலைத் திருமண்ணைப் போட்டு கேலி செய்துள்ளார். பல முறை ஸுதர்சனர் அவர்களால் சோவின் இச்செயல் கண்டிக்கப் பட்டது. ஆனால் சோ தன்னை மாற்றிக்கொள்வதாக இல்லை. காரணம் அவர் உள்ளத்தில் ஊறியுள்ள வைஷ்ணவத்வேஷம் என்றுதான் சொல்லவேண்டும். சோ வழக்கறிஞர்; சிறந்த அரசியல் நோக்கர்; அகில இந்திய அளவில் பேசப்படுகின்ற சிறந்த அரசியல் விமர்சகர்; வெற்றிகரமான ஒரு பொதுஜனப் பத்திரிகையின் ஆசிரியர்; இப்படிப்பட்ட ஒருவருக்கு ஏன் இந்தச் சின்ன புத்தி. ஒரு இஸ்லாமிய மதச்சின்னத்தையோ ஒரு கிறிஸ்துவ மதச் சின்னத்தையோ தனது அரசியல் கிண்டலுக்கு கேலிச் சித்திரமாகப் பயன்படுத்துவாரா? இஸ்லாமிய சமயத்தைச் சேர்ந்த வங்கதேசப்பெண் எழுத்தாளர் ஒருவர் தன் மத நூலான குரானைப் பழித்து எழுதியதற்காக அப்பெண் நாடு கடத்தப்பட்ட செய்தி சமீபத்தில் எல்லோரும் அறிந்ததே. சோ வைணவர்களை சொரணையற்ற இளிச்சவாயர்கள் என்று கருதி விட்டார் போலும்! (வைணவர்களில் பெரும்பாலோர்

இன்று அப்படித்தான் இருக்கிறார்கள் என்பது வேறு விஷயம்.) சமீபகாலமாக பாரதம், ராமாயணம் இரண்டையும் தனது குதர்க்க மூளையை உபயோகித்து, தனது பத்திரிகையில் எழுதி வருகிறார் சோ. முறையான வடமொழி அறிவும், ஆன்மீகத் தெளிவும் இல்லாத சோ உண்மைக்குப் புறம்பான கருத்துக்களை யும் ஆன்மீக விஷயத்தில் எழுதி வருகிறார். அரசியல் விமர்சனத் தில் வேண்டுமானால் இவர் அறிவாளியாக இருக்கலாம். ஆனால் தனக்கு முழுமையான பரிசயமும் பூர்ண ஞானமும் இல்லாத ஆன்மீக விஷயத்தில் மூக்கை நுழைத்துக்கொண்டு மூக்கறுபடப் போகிறார் சோ. பல வருடங்களாகவே ஸ்ரீவைஷ்ணவர்களின் திருநாமத்தை கேலிச் சித்ரமாகத் தன் பத்திரிகையில் போட்டு வரும் இவர் ஸ்ரீவைஷ்ணவர்களின் கோபத்துக்குள்ளாகி இருக்கி றார். சாத்விகமான முறையில் இவருக்குப் பலமுறை கடிதம் எழுதியும் பயன் இல்லை. திரும்பத் திரும்பத் தான் செய்ததையே செய்துகொண்டு வருகிறார். அவ்வளவு திமிர் இவருக்கு! இந்தச் செயலுக்கு வருத்தம் தெரிவித்து இனியாவது சோ திருந்தவேண் டும். இல்லையேல் இராமபாணத்திலிருந்து புறப்படும் அக்னி ஜ்வாலைகளை இவர் தாங்கமாட்டார்.

8—5—2001 தினமலர் 'அறிவோமா ஆன்மீகம்' பகுதியில் குலதெய்வ வழிபாடு என்ற தலைப்பில் ஒரு சிறு குறிப்பு வெளி யிடப்பட்டுள்ளது. அதிலிருந்து ஒருசில வரிகளை எழுதி விமர் சிக்கிறேன்.

"குலதெய்வத்திற்கு வழிபாடு செய்யாமல் வேறு எந்த தெய் வத்தைப் பூஜித்தாலும் கஷ்டமே விளையும். நன்மை விளையாது. 'உனக்கு விதிக்கப்பட்ட கடமைகளின்படி நீ வழிபாடு செய்தால் அந்தந்தத் தெய்வங்கள் உனக்குரிய நன்மைகளை அருளும்" என்று கீதையில் சொல்லப்பட்டுள்ளது" என்பது அச்சிறு குறிப் பில் ஒரு பகுதி.

குலதெய்வம் என்ற ஒன்று ஒரு குடும்பத்தினருக்கு எப்படி வழிவழியாக வந்தது என்பது பற்றியும், வைணவர்களைப் பொறுத்த வரை மறந்தும் புறந்தொழாமைக் கொள்கைதான் உயிரைவிட முக்கியம் என்பது பற்றியும் நமது ராமபாணக்கட்டுரைகளில் முன்பே விரிவாக விளக்கியிருக்கிறேன்.

மேலே சொல்லப்பட்ட சிறுகுறிப்பில் கீதையில் சொல்லப்பட்டதாக ஒரு வரி வந்துள்ளதல்லவா? கீதையில் உள்ள 700 ஸ்லோகங்களில் மேலே சொல்லப்பட்ட கருத்தமைந்த ஸ்லோகம் ஒன்றுகூட இல்லை. ஆனால் கீதையில் இவ்வாறு கூறியுள்ளதாக எழுதியிருக்கிறார்கள். ஒரு பொய்யைச் சொல்லி அது கீதையில் இருப்பதாகக் கூறிவிட்டால் மக்கள் நம்பிவிடுவார்கள் என்ற நம்பிக்கையிலும், கீதையை யார் புரட்டிப் பார்க்கப் போகிறார்கள் என்ற அசட்டுத் தைரியத்திலும்தான் இப்படி எழுதியிருக்கிறார்கள். கீதையின் 9-ஆம் அத்யாயம் 23-ம் ஸ்லோகத்தில் "மற்ற தேவதைகளை வழிபடுபவர்கள் முறை தவறிய முறையில் என்னை வழிபடுகிறார்கள்" என்றும், அதே அத்யாயம் 30-ஆம் ஸ்லோகத்தில் "ஒருவன் துராசாரனாக இருந்தாலும் மற்ற தெய்வங்களைத் தொழாமல் என்னை மட்டும் தொழுபவனை நல்லவனென்று அறியவேண்டும். ஏனெனில் அவன் நல்ல உறுதி கொண்டிருக்கிறானல்லவா?" என்றும் ஸ்ரீகிருஷ்ணன் கூறுகிறார். இப்படிப் பல எடுத்துக்காட்டுக்களைக் கூறலாம் கீதையில். ஆகவே கீதையின்படி கண்ணன் தன்னைத்தவிர வேறு எந்த தெய்வத்தையும் வழிபடச் சொல்லவில்லை. வேறு தெய்வத்தை வழிபடுபவர்களை அறிவிலிகள் என்கிறான் கண்ணன். ஆதி சங்கரரும் தம் பாஷ்யத்தில் அப்படியே பொருள் எழுதியிருக்கிறார் என்பதை வடமொழியறிவுள்ள எவரும் காணலாம். ஆகவே 'அறிவோமா ஆன்மீகம்' எழுதும் அந்த அசட்டு அனுமிகர் இனி மேலாவது ஆதாரமில்லாமல் எழுதுவதைத் தவிர்ப்பாராக.

[ஸுதர்சனரின் குறிப்பு :— தினமலர் "அறிவோமா ஆன்மீகம்" முதலான பகுதிகளில் பல விஷயங்கள் பொய்யாக எழுதப்படுகின்றன. "பொய்களை இடைவிடாமல் சொன்னால் அது மெய்யாகி விடும்" என்று கருதுகிறார்கள் போலும்!]

திருமலையில் காமகோடி ஜெயேந்திரரின் அத்துமீறல் செய்தி பல பத்திரிகைகளில் வெளிவந்திருக்கிறது. ஸ்ரீஸுதர்சனர் உள்ளிட்ட பல வைணவப் பெரியோர்களும் திருமலையில் ஜெயேந்திரரின் செயல் குறித்து எதிர்ப்புக்குரல் கொடுத்துள்ளனர். திருமலையில் தான் செய்த செயலை நியாயப்படுத்தி காமகோடி ஜெயேந்திரர் பேசியவற்றையும் காமகோடி பத்திரிகையே வெளியிட்டிருந்தது. இந்நிலையில் சமீபத்தில் அடியேன் திருமலை சென்றிருந்த போது அங்கு பெரிய ஜீயர் மடத்தில் உள்ள ஸ்ரீவைஷ்ணவர்களை இது குறித்து விசாரித்தேன். அதற்கு அவர்களில் சிலர் "அப்படியெல்லாம் ஒன்றும் நடக்கவில்லையே, காமகோடியாவது இங்கு வரவாவது, அதெல்லாம் வெறும் புரளி" என்று முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைத்தாற்போலவும், "அதுபற்றி உங்களுக்கென்ன? யார் வந்தாலென்ன, யார் போனாலென்ன" என்று அலட்சியமாகவும் பதில் கூறினர். அவர்கள் கூறியதை வைத்துப் பார்க்கும்போது திருமலையில் சில வைணவர்களுக்கும் காமகோடி மடத்திற்கும் இடையே ரகசிய உடன்பாடு எதுவும் இருக்குமோ என்ற ஐயம் எழுகிறது. அப்படி இருந்தால் அது நல்லதல்ல. அது நமக்கு நாமே குழி தோண்டிக்கொண்டு அக்குழியில் நாமும் புதைந்து ஸ்ரீவைஷ்ணவத்தையும் சேர்த்துப் புதைப்பதும் ஆகும். திருப்பதி திருமலையில் உள்ள வைணவர்கள் உணர வேண்டிய விஷயம் இது. திருப்பதியில் உள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தன்மான உணர்வையும் ஸ்வமதப் பற்றையும் அருளுமாறு திருமலை நாதனை ஸ்ரீநிவாஸனைப் பிரார்த்திப்போமாக.

4—7—2001 தேதியிட்ட துக்ளக் இதழில், 'சோ' எழுதி வரும் வால்மீகி ராமாயணப் பகுதியில் சிவலிங்கப் பிரதிஷ்டை விஷயமாகவும், 'அத்ர பூர்வம்' என்ற ஶ்லோக விஷயமாகவும், சோ தனது சொந்தக் கருத்தாகச் சிலவற்றைக் கூறியுள்ளார். அவற்றைக் கீழே தந்து விமர்சிக்கிறேன்.

"மஹாதேவன் என்பதே பரமசிவனைக் குறிக்கவில்லை என்று கூறுகிறவர்களும் உண்டு. ஆனால் பரமசிவன்தான் தசரதரை ராமன்முன் காட்சியளிக்கச் செய்தார் என்பது தெளிவாகவே ராமாயணத்தில் கூறப்பட்டிருக்கிறது. அந்த இடத்தில் பரமசிவனை

வால்மீகி முனிவர் மஹாதேவன் என்றே தனது காவியத்தில் குறிப்பிடுகிறுர். ஆகையால் இந்த இடத்திலும் கூட மஹாதேவன் என்று ராமர் குறிப்பிட்டது பரமசிவனைத்தான் என்று அர்த்தம் செய்து கொள்வதில் தவறில்லை'' 'அத்ர பூர்வம்' என்ற ஶ்லோகத்தில் வரும் மஹாதேவ ஶப்தத்திற்கு சோ தரும் விளக்கம் இது.

மேலும், ''லிங்கப்ரதிஷ்டை விஷயம் துளசி ராமாயணத்திலும், ஸ்காந்த புராணத்திலும் வருவதாலும், ராமன் சீதையிடம் முன்பு இந்த இடத்தில்தான் மஹாதேவன் அருள் செய்தார்' 'என்று ஒரு இடத்தைச் சுட்டிக் காட்டுவதாலும் லிங்கப்ரதிஷ்டைக்கு வால்மீகி ராமாயணத்திலும் ஓரளவு ஆதாரம் கிடைப்பதாக எடுத்துக் கொள்ளலாம்'' என்றும் கூறுகிறுர் சோ. இதை விமர்சிப்போம் இனி.

ஸ்காந்தபுராணம் ஒரு தாமஸபுராணம். ''எந்தப் புளுகும் கந்தபுராணத்தில்'' என்று பொதுமக்களிடையே ப்ரசித்திபெற்ற புராணம் இது. பழமையான கம்பராமாயணம், ரகுவம்சம் முதலான தமிழ் வடமொழி ராமகாவியங்கள் எதிலும் லிங்கப்ரதிஷ்டைக் கதை காணப்படவில்லை. வால்மீகி ராமாயணத்திற்கு உரை எழுதிய கோவிந்தராஜர் முதலான எந்த உரைகாரரும் இந்தக் கதையை ஏற்றுக்கொள்ளவில்லை. துளசிதாஸர் மிகப் பிற்பட்டவர். சைவர்களால் இக்கதை பிரசாரம் அடைந்த பின்பு தோன்றியவர். ஆகையால், துளசிராமாயணம் ப்ரமாணமாகாது.

ஸுதர்சனர் இதுபற்றி விரிவாக ஆராயும் ''இராமலிங்கப்ரதிஷ்டை'' என்னும் நூலை வெளியிட்டிருக்கிறுர். அதை எழுதியவர் இராமநாதபுரம் வழக்கறிஞர் திரு எஸ். டி. சடகோபன் அவர்கள். அவர் இராமேச்வரம் தேவஸ்தானத்திற்கே வழக்கறிஞராக இருந்தவர். அவர் தம் நூலில் தேவஸ்தான ரெக்காடுகளையும், வால்மீகி ராமாயணம், கம்பராமாயணம் முதலான நூல்களையும் ஆதாரமாகக் காட்டி லிங்கப்ரதிஷ்டைக் கதையின் பொய்ம்மையை நிலை நாட்டியுள்ளார். அந்நூலில் ஒரு பிரதியை சோவுக்கு அனுப்பி அவருடைய மருள் நீங்குவதற்கு உதவிபுரியும்படி ஸுதர்சனரைக் கேட்டுக்கொள்கிறேன்.

[இராமலிங்கப்ரதிஷ்டையின் ஒரு பிரதி ஸுதர்சனம் இதனுடன் சோவுக்கு அனுப்பப்படுகிறது — ஸுதர்சனர்]

"தெய்வம் பேசுகிறது" ஏப்ரல் 2001 இதழில், "புண்ணியம் தரும் பூந்தோட்ட பிரபு" என்ற கட்டுரையை கு. சண்முகசுந்தரம் என்பவர் எழுதியுள்ளார். அதில் திருவாரூர் மாவட்டத்தில் உள்ள பூந்தோட்டம் என்னும் ஊரில் அமைந்துள்ள சிவன் கோயில் பிதுர்க்கடன் செய்வதற்கு விசேஷமான கோயில் என்றும், அங்கு தான் ராமன் தசரதருக்கும் ஜடாயுவுக்கும் நீத்தார் கடன் செய்து சிவனை வழிபட்டார் என்றும் இக்கருத்துக்கு ஆதாரம் 1941-ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் சி. நாகலிங்கம்பிள்ளை என்பவரால் எழுதப் பட்ட திருதிலதைப்பதி புராணம் என்றும் எழுதியுள்ளார்.

இந்தச் சைவர்கள் ராமனை சிவபக்தனுக்கி விட வேண்டும் என்பதற்காக் இதிஹாஸத்தில் ஆதாரத்தைத் தேடிக்கிடைக்காமல் தோற்றுப்போய் சில தாமஸ புராணச் செய்திகளைக் கொஞ்சநாள் தலையில் தூக்கிவைத்துக் கொண்டு ஆடினுர்கள். அவையும் அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்படாததால் இப்பொழுது தலபுராணக் கதைகளைக் கட்டிக்கொண்டு அழ ஆரம்பித்துவிட்டனர். அதிலும் 1941-ல் ஒருவர் எழுதிய புராணத்தை ஆதாரம் காட்டுகிருர் இந்தக் கட்டுரை ஆசிரியர். இப்படித்தான் எத்தனையோ அபத்தப் புராணங்களை ஆதாரங்காட்டி ராமனை சிவபக்தனுக்க முயல்கின்ற னர் இந்தச் சைவர்கள். இது வெறும் விஷ்ணு வைஷ்ணவ த்வேஷச் செயலேயன்றி வேறில்லை. அறிவாளிகள் இவற்றைக் கண்டு விலவறச் சிரிப்பார்களேயொழிய, இவர்களது கூற்றை ஏற்கமாட்டார்கள். கட்டுரை ஆசிரியர் கூறுவதுபோல் பிதுர்க்கடன் செய்ய யாராவது பூந்தோட்டம் சென்றுல் நிச்சய மாக அவர்களது பிதுர்க்கள் நரகத்தையே அடைவார்கள். ஏனெனில் அங்கே பரம்பொருளான ஸ்ரீமந் நாராயணனை இந்தச் சைவச் சாத்தான்கள் சிறுமைப்படுத்தியுள்ளனர். மக்கள் இதனை உணர்ந்து கொள்வார்களாக.

தினமலர் நாளிதழ் தற்போது வெள்ளிக்கிழமை தோறும் பக்திமலர் என்று ஒரு பகுதியை வெளியிடுகிறது. அதில் விஷ்ணு வைஷ்ணவத்வேஷக் கருத்துக்கள் மலிந்து காணப்படுகின்றன. கருத்துக்கள் சொல்பவர்களின் பெயர் ஊர் எதுவும் இன்றி

மொட்டையாக வெளியிடுகிறார்கள். 22—6—2001 பக்தி மலரில் 'வெற்றியைக் குவிக்கும் சட்டநாதர்' என்ற தலைப்பில் சீர்காழியில் உள்ள சட்டநாதர் கோயில் பற்றி எழுதியுள்ளனர். த்ரிவிக்ரமாவதாரம் எடுத்த விஷ்ணுவுக்கு கர்வம் ஏற்பட்டதாகவும், அந்தக் கர்வத்தை அடக்க தேவர்கள் சிவனிடம் முறையிட்டதாகவும் தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்க, சிவன் விஷ்ணுவை அடக்கியதாகவும், விஷ்ணு சிவனை வணங்கி, "இறைவா! என் தோலையும் எலும்பையும் தாங்கள் போர்த்திக் கொள்ளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டதாகவும் உடனே சிவன் விஷ்ணுவின் தோலை உரித்துப் போர்த்திக்கொண்டு விஷ்ணுவின் எலும்பைக் கதையாக வைத்துக்கொண்டதாகவும், அதுமுதல் சிவன் சட்(டை)டநாதன் என்ற பெயருடன் மக்களுக்கு அருள் பாலிப்பதாகவும், சட்(டை)ட நாதரை வழிபட்டால் வாழ்வில் வெற்றிகள் குவியும் எனவும் பரம அபத்தமாக எழுதியுள்ளனர்.

பல இடங்களில் திரிவிக்ரமாவதாரத்தைக் கூறும் வேதங்கள், இதிஹாஸங்கள், ஸாத்விக புராணங்கள், பழைய தமிழ்வடமொழி இலக்கியங்கள் இவைஎதிலுமே காணப்படாத இந்த அபத்தக் கதை வெறும் விஷ்ணு வைஷ்ணவத்வேஷ உணர்வால் புனையப்பட்ட அபத்தக் கற்பனையேயன்றி வேறில்லை. இதற்கு ஒரு கோயிலை ஆதாரங்காட்டி மக்களை முழு முட்டாளாக்குகின்றனர். இதுபோலவே நரசிங்கனை சரபமாக வந்து சிவன் கொன்றுவிட்டார் என ஒரு கதையைக் கட்டி அதற்கும் ஒரு கோயிலைக் கட்டியுள்ளனர். முட்டாள் தனமான இக்கதைகளை முட்டாள்களே சொல்வர். முட்டாள்கள் சொல்வதை முட்டாள்களே கேட்பர். வைணவர்களின் மனதைப் பெரிதும் புண்படுத்தும் இக்கற்பனை அபத்தக் கதையை வெளியிட்ட தினமலர் நிர்வாகிகள் வன்மையாகக் கண்டிக்கத் தக்கவர்கள். தினமலர் நிர்வாகிகள் நேர்மையும் அறிவும் உள்ளவர்களாயின் இனிமேல் பக்திமலரில் இப்படிப்பட்ட விஷ்ணு வைஷ்ணவத்வேஷக் கருத்துக்களை எழுதமாட்டார்கள். மீறிஎழுதி வந்தால் அவர்கள் நேர்மையற்ற, அறிவற்ற முட்டாள்களாகவே கருதப்படுவர். மேலும் வைணவப் பெருமக்களின் கடுங்கோபத்திற்கும் ஆளாவார்கள்.

ஜூலை-2011 'ஓம் சக்தி' இதழில் திருவனந்தபுரம் ஸ்ரீஅநந்த பத்மநாபஸ்வாமி கோயில் பற்றி பேரா. ம. வயித்தியலிங்கன் என்பவர் சில கருத்துக்களைக் கூறியுள்ளார். அவர் கூறியுள்ளவற்றில் சிலவற்றைக் கீழே தந்து விமர்சிக்கிறேன்.

''பத்மநாபரின் வலக்கை கீழே தொங்குகிறது. அது ஒரு சிவலிங்கத்தைத் தொட்டவாறு அமைந்திருக்கிறது. இடக்கையில் ஒரு மலர், அது சிவனுக்காகவே என்பது புரிகிறது. ஒன்று பரம்பொருள். அதுவே இருவேறு வேஷங்களைப் போட்டுக்கொண்டு உலாவுகிறது. சிவனைப் பெருமாள் பூசிப்பதுபோல் ஒரு கோலம். சிவன் பெருமாளைப் பூசிப்பதுபோல் ஒரு கோலம். இது பெரிது, அது பெரிது என்று பேதம் காண்கிற பேதையர்களுக்கு வைகுண்டமும் கிடைக்காது, கைலாசமும் கிடைக்காது''.

''ஒன்று காணமுடிகிறது. நம்முடைய ஆழ்வார்களோ, ஆசார்யர்களோ கேரளத்தவர்களுக்குத் தெரியாமலே இருந்திருக்கிறது. உடையவர் ஸ்ரீராமாநுஜருக்குக் கூட ஒரு ஸந்நிதி அக்கோயிலில் இல்லை. திவ்யப்பிரபந்தம் இந்தத் திக்கைக்கூட எட்டிப்பார்க்கவில்லை''. பேரா. மா. வயித்தியலிங்கனின் கட்டுரையில் சில வரிகள் இவை. இவ்வரிகளைப் படிக்கும்போது பேராசிரியரான ம. வயித்தியலிங்கனுக்கு ஆழ்வார் ஆசார்யர்களைப் பற்றியோ திவ்யப்ரபந்தத்தைப் பற்றியோ ஒன்றுமே தெரியாது என்பது புலப்படுகிறது.

திவ்யப்ரபந்தத்தில் நம்மாழ்வார் 11 பாசுரங்களில் திருவனந்தபுர க்ஷேத்ரத்தை மங்களாசாஸனம் செய்துள்ளார். மற்றும் பல கேரளத் திருப்பதிகளை ஆழ்வார்கள் பாடியுள்ளனர். ஆனால் 'பேராசிரியர்' ''திவ்யப்ரபந்தம் இந்தத் திக்கைக் கூட எட்டிப் பார்க்கவில்லை'' என்று கூறுகிறார். உடையவர் ஸ்ரீராமாநுஜர் தமது பரிவாரங்களோடு கேரள தேசம் சென்று அங்கு திருவாட்டாறு, திருவண்பரிசாரம் முதலிய திவ்ய தேசங்களைத் தரிசித்தபின் திருவனந்தபுரம் சென்று அங்கு அநந்த பத்மநாபனை ஸேவித்து, அங்குள்ள வித்வான்களை ஜயித்து, அங்கு ''ராமாநுஜம்'' என்ற பெயருடைய மடம் ஒன்றையும் நிறுவி, அதன்பின் கேரள தேசத்தின் உட்பகுதியை அடைந்து திருவல்லவாழ், திருநாவாய் முதலிய திவ்ய தேசங்களையும் மங்களாசாஸனம் செய்து ஆங்காங்கிருக்கும் பௌத்தர்கள், அத்வைதிகள், சைவர் ஆகியோரை வாதில் வென்று மேற்குக் கடற்கரையோரமாகவே வடதிசை நோக்கிப் புறப்பட்டதாக அவரது வாழ்க்கை வரலாற்றைக் கூறும் ப்ரபந்நாம்ருதம்

என்ற நூல் தெரிவிக்கிறது. ஆனுல் 'பேராசிரியர்' "நம்முடைய ஆழ்வார்களோ ஆசார்யர்களோ கேரளத்தவர்களுக்குத் தெரியாமலே இருந்திருக்கிறது"—என்று எழுதுகிருர். கேரளாவில் தள்ளு வண்டியில் சுண்டல் விற்பவனிடம் போய், "ராமாநுஜரைப் பற்றி உனக்குத் தெரியுமா?" என்று 'பேராசிரியர்' கேட்டிருப்பார் போலும்!

மேலும் ஸ்ரீபத்மநாபஸ்வாமியின் அர்ச்சை வடிவைப் பார்த்து சில அபத்தக் கருத்துக்களைக் கூறுகிருர் இவர். ஒருவரின் தலைமேல் வலக்கையை வைத்தால் அது ஆசீர்வதிப்பதுதானே தவிர வழிபடுதல் ஆகாது. அத்துடன் படுத்துக்கொண்டு, அதிலும் இடதுகையில் மலரை வைத்துக்கொண்டு வழிபடமாட்டார்கள் என்பதைக் கூட இவர் புரிந்துகொள்ளவில்லை. பகவான் அன்பு, கருணை இவற்றின் உருவமாகையால் அவன் தன்கையில் மலரை ஏந்தியிருக்கிருன். சிவனுக்கு அநுக்ரஹம் செய்வதற்காகத் தன் வலக்கையிலிருந்த மலரை இடக்கையில் மாற்றிக்கொண்டு வலக்கையால் சிவனை ஆசீர்வதிக்கிருன். இதுவே ஸ்ரீஅநந்தபத்மநாபஸ்வாமியின் அர்ச்சை வடிவின் ரகசியம். பகவானின் இந்தத் தோற்றத்தைக்கண்டுதான் நம்மாழ்வார் தமது பாசுரத்தில் "குமரனுர் தாதை துன்பம் துடைத்த கோவிந்தனுரே" என்று பாடுகிருர். 'பேராசிரியர்' ம. வயித்தியலிங்கன் போன்றவர்கள் பின்னுளில் இப்படி ஏதாவது உளறி வைப்பார்கள் என்று நினைத்துத்தான் நம்மாழ்வார் அன்றே இப்படிப் பாடி வைத்துவிட்டார் போலும்! ஆகவே திருவனந்தபுரம் பற்றி, பேராசிரியர் ம. வயித்தியலிங்கன் கூறிய கருத்துக்கள் அவரது அரைகுறை அறிவால் எழுந்தவையே.

ஜூலை 2001 காமகோடி இதழில் காஞ்சி காமகோடி ஜெயேந்திரர் தனது அருளுரையில் ஆதி சங்கரர் ஷண்மத வழிபாட்டை நிலை நாட்டினுர் என்று ஆதாரமின்றி மறுபடியும் கூறியிருக்கிருர். இதற்குமுன் நமது ராமபாணக் கட்டுரையிலேயே ஷண்மதஸ்தாபன விஷயமாகப் பல தடவை மறுப்புத் தெரிவித்து ஜெயேந்திரரைக் குறித்துச் சில கேள்விகளையும் எழுப்பியிருந்தேன். அதற்கு முறையாகப் பதில் சொல்ல இயலாமல் ஜூன் 2001 காமகோடி இதழில் ஸ்ரீஸுதர்சனரை வெகுவாகத் தாக்கி எழுதியிருந்தார்கள். ஒரு கருத்துக்கு மறுப்புத் தெரிவிக்கும்போது அதற்கு முறையான ரீதியில் பதில் சொல்ல வேண்டுமே தவிர, வீணை கண்டனக் கணைகளைத் தொடுப்பது முட்டாள்களான கோழைகளுக்கே உரிய செயலாகும். "என்னவேண்டுமானுலும் சொல்லுங்கள், நாங்கள்

செய்வதைச் செய்துகொண்டுதான் இருப்போம்'' என்ற முறையில் செயல்படுவது இவர்களது வைஷ்ணவத்வேஷ உணர்வையும் அறி வின்மையையும் தான் காட்டுகிறது. காமகோடிப் பத்திரிகை நிர் வாகிகள் உண்மையிலேயே உண்மைக்கு மதிப்புக் கொடுப்பவர் களாக இருந்தால் இவ்விஷயத்தில் ஆத்திரப்படாமல் அறிவை உபயோகப்படுத்திச் சிந்தித்துப் பார்ப்பார்களாக!

ஜூலை 2001 'தெய்வம் பேசுகிறது' இதழில் ஆர் எம் ஜானகி என்பவர், ''சிலர் கோயிலுக்குச் சென்று அர்ச்சனை டிக்கெட் வாங்கிக்கொண்டு ஸ்வாமி ஸந்நிதிக்குப் போனதும், அர்ச்சகர் ''யார் பெயருக்கு அர்ச்சனை செய்வது?'' என்பார். இவர்கள் 'ஸ்வாமி பெயருக்கே செய்யுங்கள்' என்பார்கள். இது தவருன முறை. நமக்குள்ள பல சிக்கல்களிலிருந்து நிவர்த்தி பெறத்தான் அர்ச்சனை செய்கிறோம். அதை நம் பெயரில் தான் செய்யவேண் டும். இதை விடுத்து சுவாமி பெயரில் அர்ச்சனை செய்வது தவ ருன முறையாகும்'' என்று எழுதியுள்ளார்.

பொதுவாகக் கூறியுள்ள இவரது கருத்து வைணவ ஸித்தாந் தத்திற்கு முரணானதாகும். வைணவ மரபுப்படி வைணவர்கள் மங்களாசாஸனபரர்களாகையால் பகவானிடம் எதையாவது பெறு வதற்காகப் பிரார்த்தனை செய்வதில்லை. அதே சமயம் எந்த கிரக தோஷத்திற்காகவும் வைணவ மரபுப்படி பரிகாரம் செய்வதும் கூடாது. எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாத பக்தியை பகவான் மீது செலுத்துவதுதான் வைணவ ஸித்தாந்த சாரம். ஆகவே ஆர் எம் ஜானகி கூறிய கருத்து மற்றவர்களுக்குப் பொருந்த லாமே தவிர வைணவர்களுக்குப் பொருந்தாது. வைணவர்கள் ஸ்வாமிக்கு அர்ச்சனை செய்யும்போது ஏதாவது ஸங்கல்பம் செய்து கொண்டு தங்கள் பெயரில் அர்ச்சனை செய்வது முறையன்று. அது வைணவ மரபுக்கு முரணாகும். எம்பெருமானுக்கு மங்களா சாஸனம் செய்யும் (பல்லாண்டு பாடும்) மரபில் வந்த வைணவர் கள், ஸ்வாமி பெயருக்கே அர்ச்சனை செய்யச் சொல்வதுதான் முறையும் சிறப்பும் ஆகும். வைணவர்கள் நினைவில்கொள்ள வேண்டிய விஷயம் இது.

செப்டம்பர் 2001 'காமகோடி' இதழில் 'பிரகலாதனின் பேதைமை நீக்கிய ஸ்ரீ சனீஸ்வரன்'' என்ற தலைப்பில் ஜி. கே. மூர்த்தி என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் ''சிறந்த விஷ்ணு பக்தனை பிரகலாதன் தன் தந்தையின் மறைவுக்குப்பின் அசுரத் தன்மை கொண்டவனுய் விஷ்ணுத்வேஷியாக மாறி,

தேவர்களை எதிர்த்து வெற்றி கொண்டான் என்றும், விஷ்ணுபக்த ஞன தனக்கு இப்படி அசுரத்தன்மை வந்ததற்கான காரணத்தை பரம் பொருளான பராசக்தியிடம் கேட்டதாகவும், அதற்கு தேவி பிரகலாதனிடம், ''இது உன் கர்ம வினையால் வந்தது. நீ சனீஸ்வரனை வழிபட்டால் நலமடைவாய்'' என்று கூறியதாகவும் அதன்படி பிரகலாதன் சனீஸ்வரனை வழிபட்டுப் புகழடைந்தான் என்றும் எழுதியுள்ளார்.

இவர் எழுதியுள்ள விஷயத்திற்கு எந்த நூலையும் இவர் ஆதாரம் காட்டவில்லை. எவன் ஒருவன் ஜனிக்கும்போது நாராயணனின் கடாக்ஷத்தைப் பெறுகிருனே அவன் ஸாத்விகனுகத் திகழ்வான் என்கிறது மஹாபாரதம். பிரகலாதனே கருவிலேயே திருவுடையவன். அவன் தாயின் கர்ப்பத்தில் இருக்கும்போதே நாரதரின் உபதேசத்தால் பகவானின் கடாக்ஷத்தைப் பூர்ணமாகப் பெற்றவன். பகவானின் பரத்வத்தை (மேன்மையை) ஞானத்தால் உணர்ந்து பிரஹ்மஞானத்தை முழுதும் அடைந்து பகவானின் கடாக்ஷத்தை நேரில் கண்டனுபவிக்கும் பாக்யத்தையும் பெற்றவன். பரமபாகவதோத்தமனுன பிரகலாதன் வாழ்வில் ஜி. கே. மூர்த்தி சொன்னதுபோல் எந்த சம்பவமும் நடைபெறவில்லை. என்பது அவனது வரலாறு கூறும் நூல்களின் மூலம் தெளிவு. விஷ்ணுவினுல் கடாக்ஷிக்கப் பெற்ற ஒருவன் பிறகு எப்போதுமே அசுரத் தன்மை அடையமாட்டான். ஸ்ரீமந் நாராயணன் கடாக்ஷம் கிடைத்து விட்டால் ஒருவனுக்கு கர்மவினை ஏது? ''ஒருவன் ஏழு ஜன்மம் ஸௌர்ய பக்தனுக இருந்து, ஏழாவது ஜன்ம முடிவில் ருத்ர பக்தனுகிருன். மறு ஏழு ஜன்மம் ருத்ரபக்தனுக இருந்து முடிவில் விஷ்ணுவைத் தஞ்சமடைந்தவன் அதே ஜன்ம முடிவிலேயே மோக்ஷத்தை அடைந்து விடுகிருன்'' என்று ஜீவனின் படிப்படியான நிலையை சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. பாலகனுக இருக்கும்போதே ப்ரஹ்ம ஞானத்தை அடைந்து ஸ்ரீமந்நாராயணனே பரம் பொருள் என்ற தெளிவை அடைந்த பிரகலாதன் பின்னுளில் விஷ்ணுத்வேஷியானுன் என்றும் சனீச்வரனை வழிபட்டு மேன்மை அடைந்தான் என்றும் எழுதுவது முழு முட்டாள் தனம் ஆகும். பரம பாகவதனை பிரகலாதனின் அநந்யார்ஹ சேஷத்வத்தை இழிவுபடுத்தி எழுதிய ஜி கே மூர்த்தி பெரும் பாகவத அபசாரம் செய்துள்ளார். யாராவது எதையாவது எழுதிக்கொடுத்தால் அது சரிதானு என்று கூடப் பார்க்காமல் ஆதாரமற்ற செய்திகளை வெளியிடுவதுதான் காமகோடி நிர்வாகிகளின் வேலை என்ருல். இவர்கள் சத்தியம், தர்மம், உண்மை, நியாயம் இவற்றுக்கெல்லாம் துரோகம் இழைக்கிருர்கள் என்றே தேறும்.

'ஆன்மீக ஆலயம்' செப்டம்பர் 2001 இதழில் 'உண்மை சொல்' என்ற தலைப்பில் காஞ்சி காமகோடி பெரிய பீடாதிபதி கூறியதாக சில கருத்துக்கள் வெளியிடப்பட்டுள்ளன. அதில் ''மஹாபுராணங்களைவிட ஸ்தல புராணங்களில் அதிக உண்மை இருக்கிறது என்பது என் அபிப்ராயம்'' என்று பெரிய பீடாதிபதி கூறியுள்ளார்.

புராணங்கள் பதினெட்டு ஆகும். அவை விஷ்ணு புராணம், நாரதபுராணம், பாகவத புராணம், கருட புராணம், பத்மபுராணம், வராஹ புராணம், ப்ரஹ்மாண்ட புராணம், ப்ரஹ்மவைவர்த்த புராணம், மார்க்கண்டேய புராணம், பவிஷ்ய புராணம், வாமன புராணம், ப்ரஹ்ம புராணம், மத்ஸ்ய புராணம், கூர்ம புராணம், லிங்க புராணம், சிவ புராணம், ஸ்கந்த புராணம், அக்னிபுராணம் என்பனவாகும். இவற்றில் முதல் ஆறு புராணங்கள் ஸாத்விக புராணங்கள். இரண்டாவது ஆறு புராணங்கள் ராஜஸ புராணங்கள். மூன்றுவது ஆறு புராணங்கள் தாமஸ புராணங்கள். சங்கரர், ராமாநுஜர் போன்ற வேதாந்த வித்தகர்கள் வேதாந்தக் கருத்துக்களை விளக்க ஸாத்விக புராணங்களில் தலைமைபெற்ற விஷ்ணுபுராணத்தையே மிகுதியாக ஆதாரமாக எடுத்துள்ளனர். ஏனெனில் ஸாத்விக புராணங்களே வேதக் கருத்தோடு ஒத்துச் செல்பவை. ராஜஸ புராணங்களும், தாமஸ புராணங்களும் வேதக் கருத்துக்கு முரணானவை. ஆகவே ராஜஸ, தாமஸ புராணங்களை அவர்கள் தொடவே இல்லை. பெரும்பாலான ஸ்தல புராணங்கள் அவரவர் ஊரில் தாம் வணங்கும் இஷ்ட தெய்வத்திற்குப் பெருமை சேர்க்கவேண்டும் என்ற நோக்கில் சிலரால் கல்பிதம் செய்யப்பட்டவை. எனவே இந்த ஸ்தல புராணங்கள் ஆன்மீக விஷய விசாரத்தில் எடுத்துக் கழிக்கக்கூடத் தகுதியற்றவை. இந்த அபத்த புராணங்களில் அதிக உண்மை இருப்பதாகப் பெரிய பீடாதிபதி கூறியிருப்பது நகைக்கத் தக்கது. ஒருவேளை தனது குரங்கு மத்யஸ்த சுபாவத்துக்கு அந்தப் புராணங்களில் இடம் இருப்பதால் அப்படிக் கூறியிருப்பார் போலும்! ஏனெனில் பல ஸ்தல புராணங்களில் விஷ்ணு வைஷ்ணவ த்வேஷக் கருத்துகள் மலிந்து கிடக்கின்றன. ஸ்தல புராணம் எதையும் தொடாத ஆதி சங்கரரின் ''வழித்தோன்றல்'' இப்படிப் பேசுவது முற்றிலும் தகாது.

செப்டம்பர் 2001 'ஆன்மீகம்' இதழில் 'மகா பெரியவாள் விருந்து' என்ற தலைப்பில் காமகோடி ஜெயேந்திர சரஸ்வதி இறைவனை அகண்ட சச்சிதானந்தப் பொருளாகப் பார்க்கும் ஆதி சங்கரரே ஷண்மதஸ்தாபனம் செய்துள்ளார். அவர் ஷண்மதஸ் தாபனம் செய்து வழிவகுத்திருக்காவிட்டால் இன்று நாம் காணும் கோயில் வழிபாடு கும்பாபிஷேகம் போன்றவை தோன்றியிரா'' என்று கூறியுள்ளார்.

ஷண்மதஸ்தாபன விஷயமாக காமகோடிகள் கூறிவரும் கருத் துக்களை ஸுதர்சனர் தம் 'சங்கரரும் வைணவமும்' எனும் நூலில் தலையெடுக்க முடியாதபடி கண்டித்திருக்கிறார். அது சமீபத்தில் மறுபதிப்பு செய்யப்பட்டுள்ளது. ரூ. 40 விலையில் ஸுதர்சனரி டம் கிடைக்கும். நாமும் இக்கருத்துக்களைப் பலமுறை கண்டித்து, இவரைக் குறித்துச் சில கேள்விகளையும் கடந்த ராமபாணக் கட்டு ரைகளில் கேட்டிருந்தோம். அக்கேள்விகளில் ஒன்றுக்குக்கூட பதி லிறுக்க முடியாமல் மீண்டும் மீண்டும் பொய்யையே கூறி வரு கிறார் இவர். இவர் சொல்லுகிறபடி பார்த்தால் சங்கரர் காலத் திற்கு முன்பு இந்த நாட்டில் கோவில் வழிபாடே இல்லை என் றல்லவா ஆகிறது. எந்த ஆதாரத்தை வைத்து இப்படிப் பேசு கிறார் இவர்? 'அறியாதவனோடு பேசினாலும் புரியாதவனோடு பேசாதே' என்று ஒரு நடைமுறை வசனம் உண்டு. அதற்கேற்ப இந்தக் காமகோடிகளுக்கு எவ்வளவு எடுத்துச் சொன்னாலும் புரி யாது. தம் ஆசாரியர் என்று கூறிக்கொள்ளும் ஆதிசங்கரரின் கொள்கையையே புரிந்து கொள்ளாமல் அவரது ஆன்மீகக் கொள்கைக்கே முரணாகப் பேசிவரும் இவரை மக்கள் புரிந்து கொள்வது நல்லது.

'அருள்பூமி' அக்டோபர் 2001 இதழில் ''கருணைக் கடலின் கருணை அலைகள்'' என்ற தலைப்பில் 'அங்கயற்கண்ணி அடிமை' என் பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில், ''தேவி பராசக்தியே முத்தொழிலுக்கும் காரணமான பரம்பொருள் என்றும் பராசக்தி யின் திருவடித்தூளை எடுத்துத்தான் பிரமன் உலகைப் படைத் தான் என்றும், திருமால் அந்த தூளை எடுத்துத்தான் உலகைக் காக்கிறார் என்றும், சிவபெருமான் அதே தூள் கொண்டுதான் அழிக்கும் ஆற்றல் கொண்டான் என்றும் சௌந்தர்ய லஹரியில் சொல்லப்படுவதாக எழுதியுள்ளார். மேலும் ''திருமாலாகிய ராமன் தேவியின் அம்ஸமாகையால் அவனது பாத தூளி பட்டு, பாபம் செய்த அகலிகை பாபம் நீங்கப்பெற்றாள்'' என்றும் எழுதி யுள்ளார்.

இவர் சொல்கின்ற கருத்துக்கு வேதம், இதிஹாசம், ஸாத்விக புராணங்கள் மற்றும் சங்க இலக்கியங்கள் முதலான எதிலுமே ஆதாரமில்லை. வேதம், இதிஹாஸம், ஸாத்விக புராணங்கள் இவற்றிலெல்லாம் திருமாலே முத்தொழிலுக்கும் அதிபதியான பரம்பொருளாகப் பேசப்படுகிறான். நமது சங்கத் தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் திருமாலே முழுமுதல்வனாகவும் பரம் பொருளாகவும் போற்றப்படுகிறான். காளி சுடுகாட்டைக் காக்கும் தெய்வமாகவே சங்க நூல்களில் காணப்படுகிறாள்.

''முதல்முறை, இடைமுறை, கடைமுறை தொழிலின் பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோர் இலையே''—என்று திருமாலைப் போற்றுகிறது சங்க இலக்கியமான பரிபாடல். கட்டுரை ஆசிரியர் தம் கருத்துக்களுக்கு ஸௌந்தர்ய லஹரியை ஆதாரம் காட்டுகிறார். சக்தி உபாஸகர்களான சாக்தர்களில் யாரோ ஒருவர் செய்தது இந்தநூல். இந்நூல் சுமார் 500 வருடங்களுக்கு உட்பட்டதே. கட்டுரை ஆசிரியரே தனது கட்டுரையில் ஓரிடத்தில் ''இவ்வழகிய நூல் ஸ்ரீ சங்கராசார்யார் இயற்றியது என்றும், சிவபெருமான் செய்தது என்றும், அம்மை லலிதாம்பிகையே செய்தது என்றும் பலவிதமாகக் கூறுவர். இது தெய்வீகமான ஒரு மகாத்மாவால் செய்யப்பட்டது என்பதுதான் முடிவு'' என்று கூறுகிறார். ஆகவே இந்நூலை இயற்றியது யார் என்று கட்டுரை ஆசிரியராலேயே முடிவு செய்ய இயலவில்லை என்பது புரிகிறது. இயற்றியவர் யார் என்றே தெரியாத ஒரு நூலை ஆதாரங்காட்டி, வேதக் கருத்துக்களுக்கு முரணாகப் பேசுவது இவரது அறிவின்மையையே பறை சாற்றுகின்றது. மேலும் ஸ்ரீராமனை 'தேவியின் அம்சம்' என்கிறார் இவர். ஸ்ரீராமன் தேவியின் அம்சம் என்று எந்த ராமாயணத்தில் உள்ளது? திருமாலின் அவதாரங்களில் மோஹினி அவதாரமும் ஒன்று என்பதால் திருமாலை சிவசக்திகளில் ஒன்றாக சைவர்கள் கூறுவர். ஆண்தான் பெண் வேடத்தில் உள்ளார் என்பதைக்கூடப் புரிந்துகொள்ள இயலாமல் சிவன் காமவசப்பட்டான் என்றால், அது சிவனுக்குத் தாழ்வே தவிர உயர்வு அல்ல. இதைப் புரிந்துகொள்ள வேண்டியவர்கள் சைவர்கள். ஆகவே திருமால் தேவியின் அம்சம் என்பதற்கு வேதங்களிலோ, இதிஹாஸங்களிலோ, ஸாத்விக புராணங்களிலோ, சங்க இலக்கியங்களிலோ ஆதாரமில்லை. ஸ்ரீமத் பாகவதத்தில், இவர்கள் சொல்லும் 'ஆதிபராசக்தி' கண்ணனின் சகோதரியாகச் சொல்லப்படுகிறாள். பகவானின் யோகமாயையே இந்தப் 'பராசக்தி'. இவள் பகவானைப் பணிந்து ''எனக்கு என்ன பணி'' என்று

கேட்டபோது, ''நீ என் சகோதரியாகப் பிறப்பதால் ஆடு, மாடு, எருமை போன்றவற்றை பலியிட்டு உலக ஜனங்கள் அர்ச்சிப்பார்கள். நீ அவர்களது புலன் திருப்திக்காக ஆசைகளை விரைவில் திருப்தி செய்வாய். துர்க்கை, பத்ரகாளி, விஜயா, வைஷ்ணவி, குமுதா, சண்டிகா, கிருஷ்ணு, மாதவி, கன்யகா, மாயா, நாராயணி, ஈசானி, சாரதா, அம்பிகா முதலான வெவ் வேறு விதமான பெயர்களுடன் இவ்வுலக இச்சைகளின் நிறைவை நாடுபவர்கள் உன்னை வழிபடுவார்கள்'' என்று அருளிச்செய்தார். உண்மை இவ்வாறு இருக்கும்போது தேவியை பரம்பொருள் என்றும், திருமால் அவளது அம்சம் என்றும் கூறுவது ஆதார மற்ற அடிமுட்டாள் தனமான பேச்சாகும்.

இதே பத்திரிகையில் மற்றோர் இடத்தில், ''அனைத்தும் அருள் பவள் அம்பாளே'' என்ற தலைப்பில் 'ஸ்வப்ரகாச' என்பவர் ஓர் கட்டுரை எழுதியுள்ளார். கட்டுரை ஆசிரியரின் பெயரைப் பார்த் தாலே விசித்ரமாக உள்ளது. இக்கட்டுரையில் ''அம்பிகையே மோக்ஷத்தைக் கொடுப்பவள். ப்ரஹ்மா, விஷ்ணு முதலான தேவர்கள் அவளது காலடியில் விழுந்து கிடக்கின்றனர்'' என்று எழுதியுள்ளார். இவ்வுலக நலன்களை விரும்புபவர்களே சக்தியை வழிபடுவார்கள் என்பது ஸ்ரீமத் பாகவதத்தின் மூலம் தெளிவு. வேத, இதிஹாஸ, ஸாத்விக புராணங்களில் எல்லாம் ஸ்ரீமந்நாரா யணனே மோக்ஷமளிக்கவல்லவன் என்று முழங்கப்படுகிறான்.

''நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்' என்று சங்க இலக்கியமான பரி பாடல் ''திருமாலைத் தவிர வேறு யாரும் மோக்ஷத்தைக் கொடுக்க முடியாது'' என்று ஐயம் திரிபறக் கூறுகிறது. உண்மை இவ்வாறு இருக்க, எந்த ஆதாரத்தையும் காட்டாமல் 'அம்பி கையே மோக்ஷத்தைக் கொடுப்பவள்' என்று எழுதுவது தன் இஷ்ட தெய்வத்திற்கு ஏற்றம் கொடுப்பதற்காகவேயன்றி உண்மையல்ல, இஷ்ட தெய்வத்திற்கு ஏற்றம் சொல்ல எதையும் எழுதலாம் என்று நினைப்பது மஹா மடத்தனம். கட்டுரை ஆசிரி யர் இதை உணர்வாராக.

இதே கட்டுரையில் ஓரிடத்தில் ''ஸதீனும் அசரமே'' அதா வது ''அம்பிகை பதிவ்ரதைகளில் முதலானவளாகப் போற்றப்படு கிறாள்'' என்று எழுதியுள்ளார். இதே கட்டுரைப் பக்கங்களில் சிவனை ஆசனமாகப் போட்டுக்கொண்டு அம்பிகை சிவன்மேல்

உட்கார்ந்து இருப்பதுபோல் படம் வரைந்துள்ளனர். சிவனை அம்பிகையின் கணவனுகச் சொல்கிருர்கள் இவர்கள். இன்னேர் இடத்தில் உடலெல்லாம் கபாலமாலை அணிந்து, பல்வேறு ஆயுதங்களுடனும், தொங்கிய நாக்குடனும் நிர்வாணமாக சிவனைக் கீழே போட்டு மிதித்த வண்ணம் அம்பிகை கூத்தாடும் படம் வரையப்பட்டுள்ளது. அம்பிகையை 'பதிவ்ரதைகளில் முதலானவள்' என்று புகழ்ந்துவிட்டு இப்படிப்பட்ட படங்களைப் போட்டால் இப்படங்களைப் பார்த்துவிட்டு 'பதிவ்ரதையின் லட்சணம் இதுதான் போலிருக்கிறது' என்று நினைத்து நம் நாட்டுப் பெண்கள் தங்கள் கணவன்மார்களை தூக்கிப்போட்டு மிதிக்க ஆரம்பித்து விடுவார்கள். இப்படிப்பட்ட அபத்தத் தத்துவங்களும் அசிங்கமான வழிபாட்டு முறைகளும் இருப்பதால்தான் சாக்த மதத்தை வேதமார்க்கத்துக்குப் புறம்பானது என்று ஆதிசங்கரர், ஸ்ரீமத் ராமாநுஜர் போன்ற மஹான்கள் எடுத்துக்கூடக் கழிக்காமல், ஒதுக்கித் தள்ளி விட்டனர். செப்டம்பர், அக்டோபர் மாதங்கள் நவராத்ரி சீஸன் என்பதால் இம்மாதங்களில் வெளிவரும் எல்லா 'ஆன்மீகப்' பத்திரிகைகளும் தேவி பாகவதம், தேவி மாஹாத்மியம், ஸௌந்தர்ய லஹரி போன்ற அபத்தக் கற்பனை நூல்களை ஆதாரங் காட்டி சக்தி உபாஸனை மார்க்கங்களையும் விஷ்ணுத்வேஷக் கருத்துக்களையும் பரப்பி வருகின்றன. பெண்களின் ஆதரவைப் பெறுவதற்காகவும், பெண்களைக் குஷிப்படுத்துவதற்காகவும் "பெண்ணைப் பெருமைப்படுத்த ஏற்பட்டதே நவராத்ரி விழா" என்றும், "பெண்ணை தெய்வ நிலைக்கு உயர்த்துவதே சக்தி உபாஸனு மார்க்கம்" என்றும் பக்கம் பக்கமாக எழுதுகிருர்கள். சக்தி உபாஸனு மார்க்கத்தை ஆழமாக சிந்தித்து உள்நுழைந்து பார்த்தால், இந்த உபாஸனை முறை உண்மையிலேயே பெண்ணைப் பெருமைப்படுத்துகிறதா அல்லது சிறுமைப்படுத்துகிறதா என்பது தெரியும். பல நூற்றுண்டுகளுக்கு முன்பே நிர்வாண ஸ்த்ரீபூஜை முதலானவை அடங்கிய அநாசாரமதம் என்றும், வேதமார்க்கத்துக்குப் புறம்பானது என்றும் நல்லோர்களால் ஒதுக்கப்பட்ட சாக்தமத விஷயங்களை 'பெண்களுக்குப் பெருமை சேர்க்கிறேம்' என்ற பெயரில் பக்கம்பக்கமாக எழுதியும், அம்மஹான்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட விஷ்ணுபரத்வத்திற்கு முரணுக எழுதியும் மக்களை ஏமாற்றி வருகின்றன இப் பத்திரிகைகள். இது வன்மையாகக் கண்டிக்கத்தக்கது. மக்கள் விழிப்புடன் இருப்பார்களாக!

# நம்நாட்டில் சாக்த மதத்தின் வளர்ச்சி

[ஸு தர்சனர்]

வேதங்களிலும் உபனிஷத்துக்களிலும் 'துர்க்கை' என்னும் தெய்வம் காணப்படுகிறது. ஆனால் அதற்குப் பரம் பொருளுக்குரிய எப்பெருமையும் சொல்லப்படவில்லை. ஸ்ரீராமாயணம் மஹாபாரதம் என்னும் பழம்பெரும் இதிஹாஸங்களிலும் இந்நிலையே காணப்படுகிறது. ஸாத்விக புராணங்களான ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்ரீமத் பாகவதம் போன்றவற்றில் பகவான் விஷ்ணு தன் யோகமாயையை யசோதைக்குப் பெண்ணாகப் பிறக்கும்படி நியமித்ததாகவும், மக்கள் அவளுக்கு பலி கொடுத்து வழிபடுவார்கள் என்று வரம் கொடுத்ததாகவும் உள்ளது. பழமைபெற்ற பதினெட்டு மஹாபுராணங்களிலும், ராஜஸதாமஸ புராணங்களில் முறையே பிரமனுக்கும் சிவனுக்கும் பெருமை சொல்லப்பட்டதேயொழிய சிவ பத்னியான காளிக்குப் பெருமை சொல்லும் புராணம் எதுவுமில்லை. காளிதாஸன் முதலான பழைய வடமொழிக் கவிஞர்களின் காவியங்களிலும் இந்நிலையே உள்ளது. தமிழ் நூல்களில் மிகப் பழைய சங்க இலக்கியங்களில் திருமால் ஒருவனுக்கே பரம்பொருள் எனும் பெருமை சொல்லப்பட்டது. துர்க்கை 'காடுகாள்' எனும் பெயரில் சுடுகாட்டைக் காக்கும் தெய்வமாகவே சங்க நூல்களில் குறிப்பிடப்படுகிறாள். மூன்று மதாசார்யர்களின் நூல்களிலும், பழந்தமிழ்க் காவியங்களிலும் துர்க்கைக்கு எங்கும் பரத்வம் சொல்லப்படவில்லை. நாயன்மார்களும், ராமாநுஜ மத்வர்களுக்குப் பிறகு தோன்றிய சைவ சித்தாந்திகளும் சிவனுக்குப் பரத்வம் கூறினார்களேயொழிய, சிவ பத்னிக்குப் பரத்வம் கூறவில்லை. அறுநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட மாமுனிகள், வேதபாஷ்யம் செய்த ஸாயணர் பட்ட பாஸ்கரர் காலம் வரையில் இந்நிலையே நீடித்தது.

சுமார் ஐந்நூறு வருடங்களுக்குள்ளாகவே தேவிபாகவதம், ஸௌந்தர்ய லஹரி முதலான நூல்கள் கற்பிக்கப்பட்டன. அப்பய தீக்ஷிதர் காலம் வரையில் அத்வைதிகள் சிலர் சிவபரத்வம் கூறினார்களேயொழிய இந்த சாக்த நூல்களைக் கொண்டு சக்தி பரத்வம் கூறவில்லை. அவருக்குப் பிற்பட்ட காலத்திலேயே அத்வைதிகளில் பலர் சாக்தர்களாக மாறினார்கள் என்பது வரலாறு காட்டும் மறுக்கமுடியாத உண்மை.

# விகடனில் வாலி

['ஆழ்வார் திருவடிப்பொடி'
சே. பத்மநாபன், B.A., Eng.
ஹோரா சாஸ்திரக் கலைஞர்.
இரும்பாநாடு, ஏம்பல் (வழி),
புதுக்கோட்டை மாவட்டம்-622 204.]

ஆனந்த விகடனில் 2001 தீபாவளி இதழ் முதல் 'ராமாநுஜ காவியம்' என்ற தலைப்பில் ஸ்ரீமத்ராமாநுஜரைப்பற்றி கவிஞர் வாலி எழுதி வருகிறார். ஸ்ரீமத்ராமாநுஜரைப் பூணூல் போட்ட பெரியார் என்றும், பனிரண்டு திருமண் இட்ட அம்பேத்கார் என்றும் வர்ணித்துள்ளார். உலகம் முழுதும் பரவியுள்ள லக்ஷோபலக்ஷம் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருக்கும் ஒரே தலைவர் ஒரே ஆசாரியர் ஸ்ரீமத்ராமாநுஜரே ஆவார். அந்த மாபெரும் ஆசாரிய சிரேஷ்டரின் உண்மைக் கொள்கையைப் புரிந்துகொள்ளாமல் (அல்லது புரிந்துகொண்டும் வேண்டுமென்றே) அவரது ஆன்மீகக் கொள்கைகளைக் களங்கப்படுத்தும் வகையில் அவரை நாத்திகர்களோடு ஒப்பிட்டு சமூக சீர்திருத்தவாதியாகச் சித்திரிப்பதென்பது அவரை இழிவுபடுத்துவதோடல்லாமல் அவரைத் தலைவராகக் கொண்ட, உலகில் உள்ள எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களையும் இழிவுபடுத்துவதுமாகும். வாலிக்குத்தான் எத்தனை துணிச்சல்! நபிகள் நாயகத்தின் கொள்கைக்கோ இயேசுகிறிஸ்துவின் கொள்கைக்கோ முரணாகப்பேசி அவர்களை இவர் மனம் போனபடி சித்திரித்திருந்தால் இவர் பிழைத்திருப்பாரா? வாலி வைணவர்களை மலிவாக எடை போட்டுவிட்டார் போலும்! வாலி இன்று வைணவர்களின் கடுங்கோபத்திற்கு ஆளாகியுள்ளார். வாலி எழுதியதை வன்மையாகக் கண்டித்தும், ஸ்ரீமத்ராமாநுஜரின் உண்மைக்கொள்கையைத் தெளிவுபடுத்தியும் ''வாலிக்கு எச்சரிக்கை'' என்ற தலைப்பில் பின்வரும் கவிதைகளைப் படைத்துள்ளேன். இதைப் படித்த பின்பாவது வாலி அடங்குவாரா என்று பார்ப்போம். அடங்கவேண்டும். அடங்காவிடில் அடக்குவோம். இதில் ஒரு வேடிக்கையான கொடுமை என்னவென்றால் வாலி பிறப்பால் ஒரு வடகலை வைணவர் என்பது!

## வாலிக்கு எச்சரிக்கை

சாதிகள் இல்லை என்றும்
சமயமும் இல்லை என்றும்
மேதினி இன்ப மெல்லாம்
சதைக்குழி தானே என்றும்
ஓதிய கயவ ரெல்லாம்
ஒழிந்திட வந்துதித்த
மாதவத்தோ னிராமா
நுசனென்றும் எங்கள் கோவே. 1

ஆலிலை மேவும் அண்ணல்
அருங்குணம் பேசுகின்ற
பாலினும் தூய்மை கொண்ட
உடையவர் பெருமை தன்னை
பாவியல் பாக்கள் செய்து
புலையறம் பரவச் செய்யும்
காலிகள் அறிவதில்லை
இதிலொரு சங்கை இல்லை. 2

கற்பூர நறுமணத்தை
கர்த்தபம் அறியாதென்பர்
கற்பெனும் மாண்பு தன்னை
வேசிகள் உணரமாட்டார்
அற்பராம் வாலிபோன்ற
புன்கவியாள ரெல்லாம்
சற்குணக் கடலிராமா
நுசர்குணம் அறிவர்தாமோ? 3

கருக்குழி வாசம் நீக்கும்
நான்மறைப் பொருளுரைத்துத்
திருத்தினன் எங்கள் ராமா
நுசனிந்த ஞாலம் தன்னை
திரைப்படம் தன்னில் தோன்றும்
தசைத்தொழில் காட்சிகட்கு
உருப்படாக் கவிதை செய்யும்
வாலி ஈதறிவானோதான்? 4

நான்மறை சொல்லும் அந்த
நலம்மிகு நெறிகள் எல்லாம்
தேனென இனிக்கும் சொல்லால்
ஞாலத்தோர்க் கருளிச்செய்த
வான்மழை போன்ற எங்கள்
உடையவர் பெருமை எல்லாம்
ஊனின்பம் பெரிதென்றெண்ணும்
உன்மத்தர் அறியமாட்டார். 5

உள்ளொன்றும் புறத்திலொன்றும்
பேசியே உலகோர் தம்மைக்
கள்ளத்தால் கெடுத்த அந்தக்
கயவரின் கூட்டத்தோடு
வள்ளலெம் பெருமானாரைச்
சேர்த்திட முயலும் வாலி
கள்ளுக்கும் பசும்பாலுக்கும்
வேற்றுமை அறியாதோனே. 6

இறைவனே இல்லை என்று
இயம்பிய ஈவேராவும்
மறைகளுக் கெதிரியான
பௌத்தத்தில் மாறியோனும்
மறைகளைச் சாட்சியாக்கி
இறையவன் அரிதான் என்று
நிறைவுடன் சொன்ன எங்கள்
பெருமானார்க் குவமையாமோ? 7

புன்னெறி புகட்டும் பௌத்தம்
புலையறம் ஓதும் சமணம்
நன்னெறி விலக்கும் சாக்தம்
இழிந்த சார்வாகம் எல்லாம்
அன்றே என்றலறி ஓடி
ஒழிந்த இம்மண்ணைவிட்டு
கன்னலாய் இனிக்கும் ராமா
நுசமுனி வாக்கு கேட்டே. 8

விதியினை வகுத்த மாயன்
கட்டளை மீருமல் நற்
கதியினுக் கழைத்துச் செல்லும்
வழியுல கோர்க்குக் காட்ட
நிதியென உலகில் வந்து
தோன்றிய எங்கள் வள்ளல்
எதிராசர் பெருமை எல்லாம்
வாலிகள் அறியமாட்டார். 9

நெற்றியில் திருமண் இட்டும்
நின்மல உள்ளத் தோடும்
பற்றெலாம் உதறித்தள்ளி
ஒவ்வொரு கணமும் அந்தக்
குற்றமில் திருமால் நாமம்
ஓதும் வைணவர்கட் கன்றி
மற்றவர்க் கென்றும் உண்டு
குலமுறை ஏற்றத்தாழ்வே. 10

இதுவன்றோ எங்கள் கோமான்
பெருமானுர் இனிய வாக்கு
'விதியென்றென்றுள்ள தென்றல்
அதற்கும் ஓர் விலக்கும் உண்டு;
மதிமிகு அடியார்க் கென்றும்
குலமிலை என்று சொல்லல்
விதிவிலக்காகும்' என்ப
தறிவிலார் அறியமாட்டார். 11

பெண்ணுடல் புகழ்வதற்கும்
புலனின்பம் சொல்வதற்கும்
எண்ணிலாக் கவிதை செய்து
'புகழ்' பெறும் வாலி இன்று
எண்ணரும் ஏற்றம் கொண்ட
எதிராசர் பற்றிக்கூறல்
கண்ணிலான் ஓவியத்தைப்
புகழ்வது போலு மன்றே. 12

'தெள்ளியர் என்று தம்மைத்
துணிவுடன் நினைத்துக்கொண்டு
கள்ளத்தால் உலகோர் தம்மை
கவிதையால் மயங்கச் செய்து
உள்ளதைக் கூறிடாமல்
உண்மையை மறைத்து வைக்கும்
கள்வராம் வாலி போன்றோர்
உருப்பட மாட்டார் தாமே. 13

பாக்களுக்குரிய நல்ல
இலக்கணம் தவறிடாமல்
ஆக்கிய பாவென்றாலும்
திருமாலைத் தூற்றுமாயின்
தீக்கிரை ஆக்கவேண்டும்
அத்தகு கவிதை எல்லாம்
தீக்குணா அழகி தன்னை
நல்லவர் நேசிப்பாரோ? 14

சந்தங்கள் விலகினாலும்
இலக்கணம் தவறினாலும்
அந்தமிழ் பேரின்பத்தை
அளிப்போனைப் புகழுமென்றால்
அந்தநற் கவிதை எல்லாம்
அற்புதப் படைப்பே ஆகும்
சுந்தரம் குறை வென்றாலும்
குணவதி மேலாம் அன்றோ. 15

புல்லறம் வளர்க்க வேண்டிப்
புதுமைகள் என்று சொல்லி
நல்லற வழிகள் எல்லாம்
நாசமாய்ப் போகச் செய்த
புல்லர்கள் பேச்சை என்றும்
புனிதர்கள் கேட்க மாட்டார்
நல்லிசை ஞானத்தோர் நாய்
குரைப்பதைக் கேளாரன்றோ. 16

அருமறை நான்கும் சொல்லும்
பரம்பொருள் இவன்தானென்று
திருமகள் நாதன் தன்னை
நமக்கெல்லாம் காட்டித்தந்த
பெருமானார் பெருமை தன்னைக்
குறைத்திட முயலும் வாலி
அரைகுறை ஞானம் பெற்ற
அற்பனே ஆவானன்றே. 17

புன்கவி செய்யும் புல்லன்
பூரியன் வாலி என்னும்
துன்மதி படைத்தோன் எங்கள்
பெருமானார் சீலம் தன்னை
வன்சொலால் இகழ்ந்து பேசி
மாற்(லுக்)கப்சாரம் செய்தான்
நன்மதி இல்லா இந்த
மூடன் வெந்நரகில் வீழ்வான். 18

சீர்பெரும் வைணவத்தைச்
சிதைத்திட எண்ணம் கொண்டு
சோரர்கள் பேசுகின்ற
பேச்செல்லாம் அழிவதற்கு
கார்வண்ண னடியரெல்லாம்
கண்டனக் கணை தொடுக்க
வாரியாய்க் கிளம்பி விட்டார்
வாலிக்கு எச்சரிக்கை! 19

இன்னும் நான் எடுத்துச்சொல்வேன்
வாலி! நீ தாங்கமாட்டாய்
என்னும் நல்லெண்ணத்தாலே
இத்துடன் விட்டுவிட்டேன்
மன்பெருமானார் கொள்கை
அழித்திட முயலுகின்ற
உன்னைப்போன்றோரின் எண்ணம்
என்றுமே நிறைவேறாதே. 20

சமீபத்தில் கலைஞர் மு. கருணாநிதி விபூதியை இகழ்ந்து பேசி விட்டார் என்பதற்காக 9—1—2002 துக்ளக் இதழில் சோ, கருணாநிதியை விமர்சனம் செய்து சாடியிருக்கிறார். மேலும் அதே இதழில் பி. எஸ். பரசுராமன் என்பவர் ''விபூதி—சில விவரங்கள்'' என்ற தலைப்பில் விபூதியின் 'மகிமை' பற்றி அளவில்லாமல் அள்ளிவிட்டிருக்கிறார்.

சில நாட்களுக்குமுன் சில அரசியல் கட்சிப் பிரமுகர்களும், போக்குவரத்துத் தொழிலாளர் போராட்டம் நடந்தபோது போக்குவரத்துத் தொழிற்சங்கப் பிரமுகர்களும் வைணவர்கள் நெற்றியில் அணியும் திருமண்ணை தங்கள் உடலிலும் நெற்றியிலும் அணிந்துகொண்டு திருமண்ணை ஒரு ஏமாற்றத்தின் சின்னமாகக் காட்டி அரசை எதிர்த்துப் போராட்டம் செய்தனர். அப்பொழுதெல்லாம் சோ. அவர்கள் அதைக் கண்டுகொள்ளவும் இல்லை; கண்டிக்கவும் இல்லை. ஏனெனில் பல வருடங்களாக சோவும் தனது பத்திரிகையான துக்ளக்கில் தனது அரசியல் விமர்சனத்திற்கு நாமத்தைக் கேலிச்சித்திரமாக கார்டூன் போட்டு வருகிறார். இதை எதிர்த்து பலர் அவருக்குக் கடிதம் எழுதியும் அவர் தன் போக்கை மாற்றிக்கொள்ளவில்லை. ஸுதர்சனரும் அவரைக் கண்டித்திருக்கிறார். ராமபாணத்தில் அடியேனும் கண்டித்திருந்தேன். எதுவும் அவரை மாற்றவில்லை. மாறாக, தன் செயலுக்கு நியாயம் கற்பித்தார் சோ. ஆனால் இன்று கருணாநிதி விபூதியை இகழ்ந்து பேசியதும் ரோஷம் பொத்துக் கொண்டு வருகிறது சோவுக்கு. இந்த ரோஷம் நாமம் கேலி செய்யப்படும்போது எங்கேபோயிற்று? தானும் சேர்ந்து கொண்டல்லவா கேலி செய்தார். அரசியல்வாதிகளின் இரட்டை வேடங்களை அம்பலப்படுத்தும் சோவுக்குத் தான் போடுவது இரட்டை வேடம் என்பது புரியவில்லையா? தனது பத்திரிகையில் ஒரு பக்கத்தில் ராமாயணம், மஹாபாரதம் போன்றவற்றை எழுதிவிட்டு மறுபக்கத்தில் நாமத்தைக் கேலி செய்வது சோவின் 'தர்மம்' போலும்! கருணாநிதி மதச் சின்னங்களை இழிவாகப் பேசுவது ஒரு பெரிய விஷயமல்ல. ஏனெனில் அவர் நாத்திகரான ஈ. வே. ராவின் வழிவந்தவர். ஆனால் தன்னை ஆன்மீகவாதியாகச் சொல்லிக் கொள்ளும் சோ. வைணவ மதச் சின்னமான நாமத்தைக் கேலி செய்வதுதான் வன்மையாகக் கண்டிக்கத் தக்கது. சோ தன்

செயலால் நாத்திகர்களைவிட இழிந்த மனிதராகிவிட்டார் என்றே சொல்லவேண்டும். சோவின் நிலைபாடு இதுவென்றால், துக்ளக்கின் சமீபகால ''ஆஸ்தான ஆன்மீக'' எழுத்தாளரான பி. என். பரசுராமன் என்பவர் சோவின் கருத்துக்களுக்கு பக்கவாத்யம் வாசிக்கும் சைவர். இவர் விபூதியின் 'மகிமை' பற்றி எழுதியுள்ளார். சைவரான இவர் தனது மதச் சின்னமான விபூதியின் பெருமையைக் கூறுவதை நாம் குறை கூறவில்லை. ஆனால் ஆதாரமற்ற பொய்களைக் கூறி விபூதிக்கு இல்லாத பெருமைகளைக் கூறுவது த்வேஷ உணர்வால் அல்லவா? அதனால்தான் அவரது த்வேஷ உணர்வைக் கண்டித்து, ஆதாரமில்லாமல் அவர் கூறும் செய்திகளை மறுத்து ஆதாரத்துடன் விபூதி பற்றிச் சில விஷயங்களை இங்கே கூற முற்படுகிறேன்.

பி. என். பரசுராமன் தனது கட்டுரையில் எழுதியுள்ள மிகச் சிறந்த அபத்தம் என்னவெனில் ''...விபூதியை மூன்று கோடுகளாக அணிவதால் சன்யாசிகள் ஞானத்தையும், வானப்ரஸ்தர்கள் வைராக்யத்தையும், இல்லறத்தார்கள் தரும சிந்தனையில் உயர்வையும், பிரம்மச்சாரிகள் கல்வி கேள்விகளில் மேன்மையையும் அடைகிறார்கள்'' என நாராயணர் சத்தியமே செய்கிறார். ...விபூதியுடன் ருத்ராக்ஷத்தையும் சேர்ந்து அணிந்தவர்கள்—விநாயகர், அம்பிகை, லக்ஷ்மி, அகிலாண்டேஸ்வரி, பைரவர், திருமால், பார்த்தசாரதிப் பெருமாள், ராமர், பிரம்மா, இந்திரன், வாயுபகவான், யமன், சூரியன், சந்திரன், செவ்வாய், அகஸ்தியர், வால்மீகி, ப்ருங்கி, மாந்தாதா, முசுகுந்தன், ஜனகர், புரூரவன், அர்ஜுனன்...''—என்பது.

விபூதியின் பெருமை பற்றி நாராயணரே சத்தியம் செய்கிறார் என்று கூறும் இவர் அது எந்த நூலில் உள்ளது என்று ஆதாரம் காட்டவில்லை. மேலும் விபூதியுடன் ருத்ராக்ஷத்தையும் சேர்த்து அணிந்தவர்கள் என்று இவர் தரும் பட்டியலில் லக்ஷ்மி, திருமால், பார்த்தசாரதிப்பெருமாள், ராமர், வால்மீகி போன்றோரையும் சேர்த்துள்ளார். இந்த ஐவரும் விபூதி அணிந்திருந்தவர்கள் என்பதற்கு என்ன ஆதாரம்? ''கேப்பையில் நெய் வடிகிறது என்றால் கேட்பவனுக்கு புத்தி எங்கு போயிற்று?—என்றொரு பழமொழி உண்டு. அதைப்போலே விபூதிக்குப் பெருமை சேர்க்கவேண்டுமென்பதற்காக எதைச் சொன்னாலும் அறிவாளிகள் கேட்பார்களா?

எதைச் சொன்னாலும் ஆதாரத்துடன் சொல்லவேண்டும். ஆதாரம் இல்லாமல் சொல்வது அறிவீனமாகும். மேலும் இவர் 'விபூதியின் பெருமை வேதங்களில் பரக்கப் பேசப்படுகிறது'' என்கிறார். வேதத்திலிருந்து தன் கருத்துக்கு எந்த ஆதாரத்தையும் காட்டவில்லை இவர். எப்படி இவரால் காட்டமுடியும்? இவர் சொல்வது தான் பொய்யாயிற்றே! லக்ஷ்மி, திருமால், ராமர், வால்மீகி ஆகியோர் விபூதியுடன் ருத்ராக்ஷத்தை அணிந்திருந்தார்கள் என்று இவர் எழுதுவது வெறும் த்வேஷ உணர்வாலன்றி உண்மை அல்ல. ஆதாரம் எதுவும் காட்டாமல் விபூதிக்கு இல்லாத பெருமைகளைக் கூறும் இவர் புரிந்துகொள்வதற்காக, தக்க ஆதாரத்துடன் விபூதியைப்பற்றி சில விஷயங்களை நாமும் இங்கே கூறுவோம். விபூதி அணிவதன் ''விசேஷத்தை'' கீழ்க்கண்ட ஸ்லோகங்கள் விவரிக்கின்றன.

கபால தே$_3$ஹப$_4$ஸ்மாஸ்தி$_2$ ஶங்கி பாஷாணத$_4$ாரிணம் ।
த்ரிபுண்ட்$_3$ர த$_4$ாரிணம் விப்ரம் சண்ட$_3$ாளமிவ ஸந்த்யஜேத் ॥
[பராசர விசிஷ்ட பரம தர்ம சாஸ்த்ரம்]

[மண்டையோடு, பிணச்சாம்பல், எலும்பு, சங்கு, சிவலிங்கக்கல் இவற்றையும், மூன்று கோடுள்ள விபூதி பட்டையையும் (த்ரிபுண்ட்ரம்) தரிப்பவனைச் சண்டாளனைப்போல் விலக்கவேண்டும்.]

அக்$_1$நித$_3$ம் க$_3$ரத$_3$ம் சைவ லிங்க$_3$ பாஷாண த$_4$ாரிணம் ।
திரியக் புண்ட்$_3$ர த$_4$ரம் விப்ரம் ராஜா ராஷ்ட்ராத் ப்ரவாஸயேத் ॥
[பராசர விசிஷ்ட பரம தர்ம சாஸ்த்ரம்]

[வீட்டில் தீ வைப்பவன், உணவு, நீர் இவற்றில் விஷம் கலப்பவன், சிவலிங்கம் தரிப்பவன், விபூதிப்பட்டை தரிப்பவன் இப்படிப்பட்ட அந்தணர்களை அரசன் தன் நாட்டிலிருந்து வெளியேற்ற வேண்டும்.]

ப்$_3$ராஹ்மண: குலஜோ வித்$_3$வான் திர்யக் புண்ட்$_3$ரத$_4$ரோ யதி$_3$ ।
தம் க$_3$ர்த்த$_3$ப$_4$ம் ஸமாரோப்ய ராஜா ராஷ்ட்ராத் ப்ரவாஸயேத் ॥
[பராசர விசிஷ்ட பரம தர்ம சாஸ்த்ரம்]

[நற்குலத்தில் கல்வியறிவுடன் பிறந்த அந்தணன் விபூதிப்பட்டை தரித்தானாகில் அரசன் அவனைக் கழுதையில் ஏற்றி நாடு கடத்த வேண்டும்.]

ஊர்த்₄வ புண்ட்₃ரம் ம்ருத₃ா தா₄ர்யம் யதீநாஞ்ச விஶேஷத: |
ப₄ஸ்ம சந்த₃ந க₃ந்த₄ாதீ₃ந் வர்ஜயேத் யாவத₃ாயுஷம் ||
[வ்ருத்த வஸிஷ்ட ஸ்ம்ருதி]

[அனைவருக்கும், சிறப்பாகத் துறவிகளுக்கும், ஊர்த்₄வ புண்ட்₃ர மானது (மேலெழும் ஜ்வாலை போன்ற திருநாமம்) மண்ணாலேயே தரிக்கத்தக்கது. விபூதி, சந்தனம், நறுமணப் பொருட்கள் முதலியவற்றை விலக்கவேண்டியது ]

குலீநோ ப்₃ராஹ்மணோ வித்₃வாந் ப₄ஸ்மதா₄ரீ ப₄வேத் யதி₃ |
வர்ஜயேத் தாத்₃ருஶம் தே₃வி மத்₄யோச்சிஷ்டக₄டம் யதா₂ ||
[வராஹ புராணம்]

[தேவி! வித்வானை நற்குல அந்தணன் விபூதி தரித்தால் அவனை கல்குடத்தைப்போல் விலக்கவேண்டும்.]

தீ₃பாக்₃நீர் தீ₃பதைலஞ்ச ப₄ஸ்ம சாஸ்தி₂ ரஜஸ்வலாம் |
ஏதாநி ப்₃ராஹ்மண: ஸ்ப்ருஷ்ட்வா ஸவாஸா ஜலமாவிஶேத் ||
[சங்கஸ்ம்ருதி]

[விளக்கின் நெருப்பு, விளக்குத்தைலம், விபூ₄தி, எலும்பு, தூரஸ்த்ரீ இவைகளை ப்₃ராஹ்மணன் தொட்டால் ஆடையுடன் குளிக்க வேண்டும்.]

[இந்த வாக்யங்களும், மற்றும் பலவும் ஸுதர்சனரின் விஷ்ணு சித்த விஜயம் ஸ்ம்ருதி நிர்ணயத்தில் எடுத்து விளக்கப்பட்டுள்ளன.] இவை தவிர,

வேதியர்களாய்ப் பிறந்தும் இலிங்கம் பொறுத்துப்
பூதியரன் கண்மணியின் பூணணிந்த—பாதகரை
நீதியர சன்ற னிலத்தின் புறம்விடுக்க
ஓதிடுமே நூல்களொருங்கு. [பரப்ரஹ்ம விவேகம்]
[ஸுதர்சனம் காரியாலயத்தில் இந்நூல் கிடைக்கும்]

ருத்₃ர ப₄க்தாஸ்சயே லோகே ப₄ஸ்ம லிங்க₃ாஸ்தி₂ தா₄ரிண: |
தே பாஷண்ட₃த்வமாபந்நா வேத₃ப₃ாஹ்யா ப₄வந்துவை ||
[பரத்ம புராணத்தில் ப்₄ருகு₃ வார்த்தை]

[சாம்பலையும் (விபூதி), லிங்கத்தையும் கபாலத்தையும் தரித்து இருக்கும் சிவபக்தர்கள் பாஷண்டிகளாய், வேதத்துக்குப் புறம்பானவர்களாய் ஆகக்கடவர்கள்.]

விபூதி தரிப்பவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதற்கு இங்கு நான் காட்டியுள்ள ப்ரமாணங்கள் மிகக்குறைவே. இதைப்போல் இன்னும் ஏராளமான ப்ரமாணங்கள் உள்ளன. விரிவு கருதி இத்துடன் நிறுத்தினோம்.

மேலும் ஒரு விஷயம். வேதத்தில் விபூதியின் மகிமை இருப்பதாக சைவர்கள் கூறுகிறார்களல்லவா? அதற்கு விளக்கம்:—

வேதத்தில் அதர்வசிரோபநிஷத் என்று ஒரு உபநிஷத் உண்டு. அதில் பசுபதி விரத தீக்ஷைக்கு விபூதி அணிந்து கொள்ளவேண்டும் என்று கூறியிருப்பதை வைத்து வேதத்தில் விபூதிக்குப் பெருமை உள்ளதாகக் கூறுகின்றனர் சைவர்கள். அதாவது ருத்ரனுக்கு அந்தர்யாமியான பரமாத்மாவை உபாஸிப்பதால் ருத்ரனால் தரிக்கப்படும் பஸ்மத்தைத் தரிக்கும்படி விதித்தது. இதனால் எப்போதும் விபூதி தரிப்பது சிறந்தது என்று ஆகாது. ஸுராபானம் செய்வது சில யாகங்களில் விதிக்கப்பட்டுள்ளது. அதனால் எப்போதும் ஸுராபானம் செய்வது சிறந்ததாகி விடாது. ஆகவேதான் திர்யக்புண்ட்ரம் (விபூதிப்பட்டை) அணிவதை துராசாரம் என்று பல புராணங்களும் ஸ்ம்ருதிகளும் தள்ளிவிட்டன.

"தகுந்த அந்தணர் குலத்தில் பிறந்தும் விபூதிப்பட்டை தரித்து சிவனை வழிபடுவோர் அக்கணமே அதமர்களாகிவிடுவர்; இந்த விபூதிப் பட்டை தரிப்பது முதலிய விஷயங்கள் சூத்திரரையும் பதிதரையும் நோக்கி விதிக்கப்பட்டுள்ளன" என்று வாசிஷ்ட சங்கிதையும்,

வேதியருக்கு ஊர்த்வ புண்ட்ரமும் (மேல்நோக்கி ஜ்வாலை போன்று எழும் திருநாமம்) அரசருக்குப் பிறைக்கீற்றும், வணிகருக்கு வட்டமும், சூத்திரருக்கு த்ரிபுண்ட்ரமும் (விபூதிப்பட்டை) உரியனவாகும். அந்தணர்கள் மறந்தும் அந்த விபூதிப்பட்டை தரிக்கமாட்டார்கள். உண்மையுடைய பெரியோரும் அவ்விபூதிப் பட்டையை ஆதரிக்கமாட்டார்கள் என்று ஆக்கினிய வேசியமும் தெரிவிக்கின்றன. (இரு சமய விளக்கம்)

பி. என். பரசுராமன் இவற்றை நன்கு உணர்ந்து இனி ஆதாரமின்றி அபத்தங்களை எழுதமாட்டார் என்று நம்புகிறோம்.

டிசம்பர் 2001 காமகோடி இதழில் "கந்தரலங்காரம்—ஒரு பார்வை" என்ற தலைப்பில் வி. கி. கோபாலன் என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் விஷ்ணுத்வேஷ விஷத்தைச் சில இடங்களில் கக்கியிருக்கிறார். அவர் கட்டுரையில் சிலவரிகள் பின்வருமாறு:—

"விநாயகப் பெருமான் தனது மாமனான சக்ரபாணியின் சுதர்சனத்தை விளையாட்டாக விழுங்கியபோது, அந்தச் சக்கரத்தைத் திரும்பப்பெற திருமால் எப்படியெல்லாம் ஆடவேண்டி வந்தது. வேர்க்க விறுவிறுக்க உடலுக்குப் பயிற்சி கொடுத்து 'தோர்பிகரணம்' போட்டு அந்த விகடனை விலாப்புடைக்க சிரிக்க வைத்த பின்னர்தானே மீட்க முடிந்தது."

"ஒருசமயம் முருகனின் வாகனமான மயில், நாராயணன் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டிருக்கும் பாற்கடலுக்குச் சென்றது. பறந்துவந்த மயில் தனது கால்களால் ஆதிசேஷனின் தலைகளைச் சும்மாவேனும் ஒரு தட்டுத் தட்டியது. அவ்வளவுதான் தொடர்ந்தது களேபரம்! திடீர் தாக்குதலால் ஏற்பட்ட அதிர்ச்சியில் ஆதிசேஷன் சற்றே நிலை தடுமாறி விட்டான். அவனது சிரங்களை அலங்கரித்த ஆயிரமாயிரம் மாணிக்கம் முதலிய நவரத்னங்களும் சிதறிக் கீழே விழுந்தன. அதுமட்டுமா? பள்ளி கொண்டிருந்த பரந்தாமனும் அந்த அதிர்வுகளின் விளைவால் கையில் உள்ள பாஞ்சஜன்யத்தையும் சாரங்கத்தையும் கீழே நழுவ விட்டதோடு தானும் 'தொபுகடீர்' என்று கீழே விழுந்து விட்டான். நொடிப்பொழுதில் நிகழ்ந்த இந்த சம்பவத்தின் விளைவாக மயிலின் காலடியிலேயே மாணிக்கங்களும் சங்கு சக்கரமும் இருந்தன. அவைகளோடு கூட பாவம், மாயவனும் காணப்பட்டான்"

காமகோடி பீடாதிபதி ஆசியோடு நடத்தப்படுவது காமகோடி பத்திரிகை. பீடாதிபதி சைவ, வைணவ ஒற்றுமை பற்றி விலாவாரியாகப் பேசிவருகிறார். ஆனால் அவரது ஆசியோடு வரும் பத்திரிகையில் விஷ்ணு த்வேஷக் கருத்துக்கள் பிரசுரிக்கப் படுகின்றன. சக்கரத்தை பிள்ளையார் விழுங்கியதும், அதை அடைய பிள்ளையார் முன் விஷ்ணு தோர்பிகரணம் போட்டதும், மயில் பாற்கடல் சென்று பிரச்சினை விளைவித்ததும் எந்தப்புராணத்தில் உள்ளது? வைஷ்ணவாதி ஸாத்விக புராணங்களிலோ, இதிஹாஸங்களிலோ, ஶ்ருதி ஸ்ம்ருதிகளிலோ, காளிதாசன் முதலிய சிவபக்தக் கவிகளின் படைப்புகளிலோ, சங்க இலக்கியங்களிலோ

இக்கதைகளுக்கு எவ்வித ஆதாரமும் இல்லை. "மயில் சென்று ஆதிசேஷனை அடித்ததால் பரந்தாமன் ஆயுதங்களை நழுவவிட்டுக் கீழே விழுந்துவிட்டான்" என்று எழுத இவர்களுக்கு எவ்வளவு திமிர் இருக்கவேண்டும்? அவ்வாறு எழுதிய கை புழுத்துத்தான் போகும். ஏதாவது ஒரு அபத்தப்புளுகு புராணத்தை ஆதாரம் காட்டி இவ்வாறு எழுதுவது விஷ்ணு வைஷ்ணவ த்வேஷத்தாலன்றி வேறென்ன? சைவ வைணவ ஒற்றுமை பற்றி வாய் கிழியப் பேசும் பீடாதிபதி இதற்கு என்ன சொல்கிறார்? பாணாசுர யுத்தத்தில் ஸ்ரீகிருஷ்ணனின் சுதர்சனத்திலிருந்து எழுந்த தீயின் வெப்பம் தாளாமல் காளியும், முருகனும், சிவனும் பின்னங் கால்கள் பிடரியில் அடிக்க விழுந்தடித்துக்கொண்டு புறமுதுகிட்டு ஓடிய சம்பவம் பரம ஸாத்விக புராணங்களான விஷ்ணுபுராணத்திலும் ஸ்ரீமத் பாகவதத்திலும் வர்ணிக்கப்படுகிறது. இந்த உண்மைச் சம்பவத்தை காமகோடியில் பிரசுரிப்பார்களா? பிரசுரிக்க பீடாதிபதி அனுமதி கொடுப்பாரா? காமகோடிக்கும், காமகோடியின் பக்தர்களுக்கும் விஷ்ணு வைஷ்ணவ த்வேஷ உணர்வு ரத்தத்தில் ஊறிய ஒன்று. இவர்களது த்வேஷ உணர்வை யாராவது விமர்சித்து எழுதிவிட்டால் ரோஷம் பீறிட்டு வருகிறது இவர்களுக்கு. முறையாக விமர்சனத்திற்கு பதில் சொல்ல இயலாமல் 'கிணற்றுத் தவளைகள்' அது இது என்று ஏதோ பிதற்றுகிறார்கள். இவர்களுக்கு வெட்கம் என்பதே கிடையாதோ? இவர்கள் அன்னத்தை மட்டுமே புசிப்பவர்களாயின் விஷ்ணு வைஷ்ணவ த்வேஷ உணர்வைக் கைவிட்டு நேர்மையுடன் உண்மையை மட்டும் எழுதட்டும்.

ஆன்மீக ஆலயம் டிசம்பர் 2001 இதழில் "திருமால் சிவனை பூஜித்த ஸ்தலம்" என்ற தலைப்பில் பழங்காமூர் மோ. கணேஷ் என்பவர் "ஒருசமயம் ரூபகனுக்கும் அதீதிக்கும் கடும்போர் மூண்டது. 'அச்சமயம் ரூபகன் திருமாலை வேண்டி திருமாலின் சக்ராயுதத்தை தனக்கு அளிக்கும்படி முறையிட்டார். திருமால் தனது சக்ராயுதத்தை ரூபகனுக்கு அளித்தார். அதை ரூபகன் அதீதிமீது ஏவ, அதீதியின் வச்ர உடம்பு மறைந்தது. சக்ராயுதத்தை இழந்த திருமால், உடனே தேவர்களைக் கூட்டி ஆலோசித்ததில் சிவனிடம் சலந்தாசுரனை அழிக்க உண்டாக்கிய (சிவன் உண்டாக்கிய) சுதர்சன சக்கரம் ஒன்று உள்ளதாக அறிந்தார். ஆதலால், சிவவழிபாடு செய்ய எண்ணினார். உடனே 1008 செந்தாமரை மலர்களால் சிவனை அர்ச்சித்தார் திருமால். 1008 மலர்களில் ஒரு மலரை சிவன் மறைத்தவுடன் ஒரு மலர் குறை

வதால் தனது கண்ணைப்பிடுங்கி சிவனை அர்ச்சித்தார். அதனால் மகிழ்ந்து சிவன் திருமாலுக்கு சக்ராயுதத்தை அளித்தார்'' என்று பிதற்றியிருக்கிறார். ரூபகன் என்பது யார்? அதீதி என்பது யார்? ரூபகனுக்கு திருமால் சக்கரத்தை வழங்க அவசியமென்ன? சரி! ஒரு பேச்சுக்காக வழங்கியதாகவே வைத்துக்கொண்டாலும் பிறகு அந்த சக்கரத்தை ரூபகனே வைத்துக் கொண்டு இன்னொரு விஷ்ணுவாகி விட்டானா? சரி இந்தக் கதைக்கு எந்த நூல் ஆதாரம்? இவை எதையும் தெரிவிக்காமல் ''கையில்லாதவன் தலையில்லாதவன் கழுத்தை குருடன் பார்த்துக்கொண்டு இருக்கும்போது வெட்டினான் என்பதை ஊமை சொன்னான்'' என்ற கதையைப்போல் கதை அளப்பது வெறும் விஷ்ணு த்வேஷ உணர்வாலன்றி வேறில்லை. இது வன்மையாகக் கண்டிக்கத் தக்கது. இனியாவது மோ. கணேஷ் ஆதாரமில்லாமல் எதையும் எழுதமாட்டார் என்று நம்புவோம். திருமால் கண்ணைப் பிடுங்கி அர்ச்சித்த கதை போன்ற விஷ்ணு த்வேஷக் கதைகள் * முன்னரே ஸ்ரீசுதர்சனர் அவர்களால் பலமுறை கண்டிக்கப்பட்டுள்ளன. அதன் பின்பும் பிதற்றிய பொய்களையே பிதற்றுவதென்பது முற்றிலும் அறிவுகெட்டதனம்.

---

* ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் பத்திரிகையில் நமது ஸுதர்சனர் பதில் பகுதியில் ஸுதர்சனரால், ''வேதங்கள், ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், ஸாத்விக புராணங்கள், காளிதாஸன் முதலான கவிகளுடைய வடமொழிக் காவியங்கள், சங்க இலக்கியங்கள், சிலப்பதிகாரம் போன்ற பழந்தமிழ் இலக்கியங்கள் ஆகிய எந்த நூலிலும் காணப்படாதவையாகையால், (1) அடிமுடி தேடிய கதை (2) கண்ணைப் பிடுங்கி அர்ச்சனை செய்த கதை (3) மத்ஸ்யாவதாரத்தை அழித்த கதை (4) கூர்மாவதாரத்தின் ஓட்டைப் பிரித்த கதை (5) வராஹாவதாரத்தின் கொம்பை ஒடித்த கதை (6) நரஸிம்ஹாவதாரத்தை சரபமாய் வந்து அழித்த கதை (7) திரிவிக்ரமாவதாரத்தின் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டு சட்டைநாதரான கதை (8) ராமேச்வரம் முதலான பல ஊர்களில் ராமன் லிங்கபூஜை செய்தான் என்னும் கதைகள் முதலான கட்டுக் கதைகள் சிவனுக்கு இயல்வான பெருமைகள் ஶ்ருதி ஸ்ம்ருதி முதலான ப்ரமாணங்களில் காணப்படாமையால், பிற்காலத்தில் விஷ்ணுவின் பெருமையைப் பொறுக்காதவர்களால் கற்பிக்கப்பட்டவையே. முருகனுடைய மயில் கதை 'எந்தப் புளுகும் கந்த புராணத்தில்' என்று உலகப் பிரசித்தி பெற்ற கந்தபுராணத்தில் மட்டுமே காணப்படுவதால் நம்பத்தகாதது'' என்று நிருபிக்கப்பட்டுள்ளது.

## "விகடனில் வாலி" பற்றி கேள்வியும் விளக்கமும்

சென்ற இதழ் 'ராமபாணத்தில்' விகடனில் வாலி என்னும் கட்டுரையும், 'வாலிக்கு எச்சரிக்கை' என்னும் தலைப்பில் கவிதைகளும் வெளிவந்திருந்தன. அவற்றிற்கு இலக்கான கவிஞர் வாலிக்கும், வாலியின் கவிதையை வெளியிட்ட 'விகட'னுக்கும் சென்ற இதழ் அனுப்பப்பட்டது. அவர்களிடமிருந்து எந்த பதிலும் இல்லை. ஸுதர்சனம் வாசகர்கள் பலர் ஸ்ரீராமாநுஜரை ஈவேராவிற்கும், அம்பேத்காருக்கும் ஒப்பிட்ட வாலியின் அடாத செயலுக்கு இந்த எச்சரிக்கை மிகப்பொருத்தமானது என்று நேரிலும் கடிதம் மூலமும் தெரிவித்தனர். "கார்த்திக், 7/32, மூன்றும் பிரதான சாலை, ஸ்ரீஜயப்பா நகர், சென்னை-600 111" என்னும் முகவரி உள்ள அன்பர் ஒருவர் மட்டும் நமக்கும் கட்டுரை; கவிதை ஆசிரியர் திரு. பத்மநாபனுக்கும், மறுப்புக் கடிதம் எழுதியிருந்தார். அதன் ஸாரம் பின்வருமாறு :—

(1) மேகத்து நீர் போல் இருந்த இராமாயணம், மஹாபாரதம், பகவத் கீதை போன்ற பெரிய விஷயங்களெல்லாம் பாமரர்கூட அள்ளிப் பருகிட தடாகத்து நீர்போல் ஆக்கித் தந்த திரு. வாலி அவர்களுக்கு இவ்வளவு தரக்குறைவான கவிதையைப் பிரசுரிப்பது தாங்கள் அவருக்குத் தரும் பரிசா? அல்லது பாராட்டா?

(2) திரு. வாலி விகடனில் 'இராமாநுஜர் பூணூல் போட்ட பெரியார்' என்றும், 'திருமண் ஆறிரண்டு அணிந்திருந்த அம்பேத்கார்' என்றும் எழுதியிருந்ததில் யாதொன்றும் தவறில்லை. காரணம் இராமாநுஜரைப் போலவே அனைத்து உயிர்களிடத்தும் அன்பு பாராட்டியவர் பெரியார். இராமாநுஜரைப் போலவே தாழ்த்தப்பட்டோர் முன்னேறப் பாடுபட்டவர் அம்பேத்கார்.

(3) இவ்விருவரையும் உவமையாகக் கூறியதால் அவர்கள் பண்பு மொத்தமும் இராமாநுஜருக்குப் பொருந்தும் என்று பொருளல்ல. கம்பர் ஆற்றுப் படலத்தில் சரயு நதியைக் கண்ணனோடு ஒப்பிட்டதுபோலே.

இந்தக் குற்றச்சாட்டுக்கு, ஸுதர்சனம் ஆசிரியரும், திரு. பத்மநாபனும் அவருக்கு பதில் எழுதியுள்ளார்கள். அவற்றிலிருந்து சில பகுதிகள், அன்பர்கள் அறிந்து கொள்வதற்காகக் கீழே அளிக்கப்படுகின்றன.

## ஸுதர்சனர் பதிலின் சாரம்

இராமாநுஜரைப் பூணூல்போட்ட பெரியார் என்றும், பன்னிரு திருமண் அணிந்த அம்பேத்கார் என்றும் வாலி எழுதியது லோகாசார்யரும் பகவத் பக்தியின் சிகரமாக இருந்தவருமான ஸ்ரீராமாநுஜரிடத்திலும் அவரைத் தெய்வமாகக் கொண்டாடும் வைணவச் சான்றோர்கள் திறத்திலும் வாலி செய்த பொறுக்க வொண்ணாத அபசாரம் ஆகும். தாங்கள் கம்பன் பாடலை உவமையாகக் காட்டியது பொருத்தமற்றது. இராமாநுஜர் திருமாலுக்காகவே தன் உடல், பொருள், ஆவியை அர்ப்பணித்து வாழ்ந்தவர். நாத்திகம் பேசிய பௌத்தர்கள் முதலானவர்களைத் தம் ஸ்ரீ பாஷ்யம் முதலான க்ரந்தங்களில் தயவு தாட்சண்யம் இல்லாமல் கண்டித்தவர். ஈ. வே. ரா.வோ, அம்பேத்காரோ தாங்கள் எழுதியதைப்போல் அனைத்து உயிர்களிடத்தும் அன்பு பாராட்டியவர் அல்லர். பிராணிகளின் மாமிசங்களை சாப்பிட்டவர்களே. இருவரும் பரமநாத்திகர்கள். ஈ. வே. ரா. ராமன் திருவுருவப்படத்திற்குச் செருப்புமாலை போட்டு, செருப்பால் அடிக்கும் ஊர்வலம் நடத்தியவர். வாயில் வரத்தகாத வார்த்தைகளெல்லாம் சொல்லி நடுத்தெருவில் மேடைபோட்டு, இராமனையும், ஸீதையையும் திட்டியதை நானே என் காதால் கேட்டுத் துடித்திருக்கிறேன். இத்தகையவர்களை இராமாநுஜரோடு உவமையிடுவது எவ்வளவு பெரிய அநீதி? வாலி இவர்களை இராமாநுஜருக்கு உவமையிட்டது எப்படி இருக்கிறதென்றால் "சாக்கடை வெள்ளம் கங்கை வெள்ளம் போல் பெருகிற்று" என்றும், "ஸீதாதேவி தாஸியைப்போல் அழகானவள்" என்றும் எழுதுவதுபோல் உள்ளது. ஏசு கிறிஸ்துவிற்கோ, முகமது நபிக்கோ இவர்களை உவமையிட்டிருந்தால் கிறிஸ்துவ, இஸ்லாம் சமூகம் பொங்கியெழுந்து கிளர்ச்சி செய்திருப்பார்கள். சமூகச் சீர்திருத்த விஷயத்தில் இராமாநுஜரையும் இவர்களையும் ஒப்பிடுவதும் தகாது. ஸ்ரீராமாநுஜர் தம் ஸ்ரீபாஷ்யம், கீதாபாஷ்யம் முதலான நூல்களில் வர்ணாச்ரம தர்மத்தை முழு மனத்துடன் ஆதரித்தவர். ஆனால் பொது விதியான வர்ணாச்ரம தர்மத்திற்கு ஓர் விதிவிலக்கு உண்டு என்பதை தம் நடத்தையால் எடுத்துக்காட்டியவர். அதாவது தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும் பஞ்ச ஸம்ஸ்காரமாகிற வைஷ்ணவ தீக்ஷை பெற்று, புறந்தொழாமை, புலால் உண்ணாமை முதலான ஒழுக்கங்

களைக் கைக்கொண்டு, எம்பெருமானிடமும், அவன் அடியார்களி டமும் தலைசிறந்த அன்பு கொண்டவர்களாயிருந்தால் அவர் களுக்குக் குலத்தால் வந்த தாழ்வு போய்விடும் என்னும் சாஸ்திர விதியைத் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்தவர் இராமாநுஜர். ''சாதிகளையெல்லாம் ஒழிக்கவேண்டும், வர்ணாச்ரமத்தை அழிக்க வேண்டும், அந்தணர்களின் பூணூலையும், குடுமியையும் அறுக்க வேண்டும்'' என்று பிரசாரம் செய்து, தம் அடியாட்களைக் கொண்டு இதை நடத்தியும் காட்டிய வன்முறையாளர்க்கா ஸ்ரீராமாநுஜரை ஒப்பிடுவது? வாலி செய்த கார்யம் மிகத் தவறு னது என்பதை இப்போதாவது உணர்ந்து இருப்பீர் என நம்பு கிறேன்.

## திரு. பத்மநாபன் பதிலின் சாரம்

(1) சில வருடங்களுக்கு முன் தஞ்சை மாவட்டத்தில் ஓர் சிற்றூரில் பரம ஏழையான ஒரு வயோதிக பிராமணன்மீது கொதிக்கின்ற எண்ணெயை ஊற்றிக் கொலை செய்தனர் பெரியார் வளர்த்த திராவிடக் கழகத்தினர். இந்தச் செய்தி அப்போது பத்திரிகைகளில் வெளிவந்தது. இதுதான் உயிர்களிடத்து அன்பு செய்யும் லக்ஷணமோ?

(2) புராண இதிஹாஸங்களில் வரும் இரண்யாக்ஷன், இரண்யகசிபு, ஹயக்ரீவன், இராவணன் போன்ற கொடிய அசுரர் களை, தன்மானம் மிக்க திராவிடப் பாரம்பர்யத்தில் வந்த நல்லவர் கள் என்றும், அவர்களையெல்லாம் கொன்ற விஷ்ணுவைக் கெட்ட வன் என்றும் பிரசாரம் செய்தவர் பெரியார். ராவணனை நல்லவன் என்று கூறி ராமனை வாய்க்கு வந்தபடி ஏசி 'ராவண காவியம்' படைத்தவர்கள் பெரியார் வழிவந்தவர்கள்.

(3) ஆன்மீக எல்லையின் உச்சியில் நின்று ''உலகோரே! நாராயணனைப் பாடுங்கள்; நாராயணனையே உறுதிப் பொருளாக நினையுங்கள்; அவனை நோக்கிச் செல்வதையே உங்கள் வாழ்க்கை யின் லக்ஷ்யமாகக் கொள்ளுங்கள்'' என்று அறைகூவி அழைத்து உலகோர் அனைவரையும் நற்கதியடையச் செய்ய முயன்ற ராமா நுஜர் எங்கே?

“கடவுளை மற, மனிதனை நினை; கடவுள் இல்லை; கடவுளைக் கற்பித்தவன் முட்டாள்; இதிஹாஸ புராணங்கள் எல்லாம் பொய்; உணவு, உடை, உறைவிடம், உடல் சுகம் இவைதான் வாழ்க்கையின் லக்ஷ்யம்” என்று மக்களை மாக்களாக்க முயன்ற பெரியாரும் அம்பேத்காரும் எங்கே? இவர்களுடன் இராமாநுஜரை ஒப்பிட்ட வாலியைக் கண்டித்ததில் என்ன தவறு?

(4) ஒரு சமயம் பகவத் கைங்கர்ய விஷயத்தில் தமக்கு சகாயம் செய்த காரணத்தால் மேல் கோட்டையின் சேரிமக்களைத் ‘திருக்குலத்தவர்’ என்று பெயரிட்டு அவர்கள் செய்த சகாயத்திற்காகத் திருநாராயணபுரத்தில் வருடத்தில் ஒருநாள் அவர்கள் கோயிலுக்குள் சென்று வழிபாடு செய்ய ஏற்பாடு செய்து கொடுத்தார் இராமாநுசர். இவ்விஷயம் அவரது வரலாறு கூறும் நூல்களில் விரிவாக உள்ளது. ஆனால் அம்பேத்காரோ தாழ்த்தப்பட்டோர் முன்னேற அவர்கள் அனைவரையும் புத்தமதத்தில் மாற்ற முயற்சித்தவர். பலரை மாற்றியும் இருக்கிறார். இந்த புத்த மதத்தை இராமாநுஜர் தமது ஸ்ரீபாஷ்யத்தில் வன்மையாகக் கண்டித்திருக்கிறார்.

(5) சினிமாவுக்குக் கவிதை எழுதுபவர்களால்தான் இராமாயணம், மஹாபாரதம் ஆகியவற்றின் பெருமையையும், ஆசார்ய ஸ்ரேஷ்டர்களின் பெருமையையும் மக்கள் மத்தியில் பரப்பமுடியும் என்ற துர்பாக்கியநிலை இன்னும் நம் நாட்டில் வந்து விடவில்லை. இதை உணர்வீராக.

[இராமாயணமும், மஹாபாரதமும் நம்நாட்டு மக்களின் இரத்தத்தில் ஊறியவை. இராஜாஜி அவர்களின் ‘சக்ரவர்த்தித் திருமகன்’ ‘வியாசர் விருந்து’ என்னும் நூல்கள் பல பதிப்புகள் கண்டு லக்ஷக்கணக்கான பிரதிகள் நாட்டில் பரவின. அத்தொண்டில் நூற்றில் ஒரு பங்குகூட வாலி இந்த இதிஹாஸங்களுக்குச் செய்து விடவில்லை. அவற்றை ஒழிக்கப்பாடுபட்டவர்களைப் போற்றியதன் மூலம் நன்மையைவிடத் தீமையே செய்திருக்கிறார்—ஆசிரியர்.]

ஞானபூமி நவம்பர் 2001 இதழில் 'ஹனுமனின் சக்தி' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வெளிவந்துள்ளது. கட்டுரை எழுதியவர் பெயர் குறிப்பிடப்படவில்லை. அக் கட்டுரையில் ஹநுமான் சிவபக்தன் என்றும், சிவனே ஹநுமானிடம் ஒரு சிவலிங்கத்தைக் கொடுத்துப் பூஜிக்கச் சொன்னதாகவும் சிவனின் அருளாலேயே ஹநுமான் ராவணனின் பலத்தை முறியடிக்கும் ஆற்றல் பெற்ருன் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இக்கட்டுரையில் கூறப்பட்ட கருத்துக்களுக்கு வால்மீகி ராமாயணத்திலோ, கம்பராமாயணத்திலோ ஆதாரம் இல்லை. ராவணனின் கொடுமையால் பீடிக்கப்பட்டவர்களாய் சிவன் உள்ளிட்ட எல்லாத் தேவர்களும் மஹாவிஷ்ணுவிடம் சென்று தங்களைக் காப்பாற்றும்படி முறையிட்டதாக வால்மீகியும் கம்பரும் தெரிவிக்கின்றனர்.

வால்மீகி ராமாயணம் ஸர்க்கம் 15-ல் 32-ம் ஸ்லோகமான

**ததோ தே₃வர்ஷி க₃ந்த₄ர்வா: ஸருத்₃ரா: ஸாப்ஸரோக₃ணா: |**
**ஸ்துதி₄பிர் தி₃வ்ய ரூபாபி₄ஸ்துஷ்டுவுர் மது₄ஸூத₃நம் ||**

என்பதில் சிவனும் தேவ கணங்களுடன், ராவணனின் கொடுமைகளைக் கூறி மஹாவிஷ்ணுவிடம் சரணடைந்தான் என்று கூறப்பட்டுள்ளது. இதையே கம்பரும் மிகத்தெளிவாக பாலகாண்டம் திருவவதாரப் படலத்தில், ராவணனின் கொடுமையால் பீடிக்கப்பட்ட தேவர்களின் அபயக்குரலைக் கேட்டு ஆபத்பாந்தவனான பகவான் கருடவாஹநனாய் எழுந்தருளியபோது, அவரைக்கண்ட தேவர்களின் நிலையை

எழுந்தனர் கறைமிடற்று இறையும் தாமரைச்
செழுந்தவிசு உவந்த அத்தேவும் சென்றெதிர்
விழுந்தனர் அடிமிசை விண்ணுளோரொடும்
தொழுந்தொறும் தொழுந்தொறும் களிதுலங்கவே.

என்று பாடுகிருர். இங்கு "கறைமிடற்று இறை" என்ற சொற்றொடரால் சிவனைக் குறிப்பிட்டு சிவனும் மஹாவிஷ்ணுவின் முன் சாஷ்டாங்க பிரணாமம் செய்ததாகக் குறிப்பிடுகிருர். ராமாயணத்தில் வரும் முதல் சரணாகதி நிகழ்ச்சி இதுவே.

**விதியொடு முனிவரும் விண்ணுளோர்களும்**
**மதிவளர் சடைமுடி மழுவலாளனும்**
**அதிசயமுடன் உவந்து அயல் இருந்துழி**
**கொதிகொள்வேல் அரக்கர்தம் கொடுமை கூறுவார்.**

என்ற பாடலில் ''மதிவளர் சடைமுடி மழுவலாளன்'' என்று சிவ னைக் குறிப்பிட்டு சிவனும் தேவர்களுடன் சேர்ந்து அரக்கர்களின் கொடுமையை மஹாவிஷ்ணுவிடம் கூறியதாகச் சொல்கிறார்.

மஹாவிஷ்ணு தான் அவதாரம் செய்யப்போவதைக் கூறி தேவர்களைக் காப்பாற்றுவதாக அபயம் அளித்தபோது,

**போயதுஉம் பொருமல் என்று இந்திரன் உவகை பூத்தான்**
**தூய மா மலருளோனும் சுடர்மதி சூடினேனும்**
**சேய் உயர் விசும்புளோரும் தீர்ந்ததெம் சிறுமை என்றார்**
**மாஇரு ஞாலம் உண்டோன் கலுழன் மேல் சரணம் வைத்தான்.**

என்ற பாடல் மூலம் 'சுடர்மதி சூடினேன்' என்று சிவனைக் குறிப் பிட்டு, சிவனும் தேவர்களுடன், ''இராவணனால் நமக்கு ஏற்பட் டிருந்த சிறுமை இன்றோடு ஒழிந்தது'' என்று கூறியதாகக் கூறு கிறார்.

சிவனே ராவணனின் கொடுமை தாங்கமுடியாமல் மஹா விஷ்ணுவிடம் சென்று சரண் புகுந்தான் என்று பிரமாணம் இருக் கும்போது. அந்தச் சிவன் ராவணனை அடக்கும் சக்தியை ஹநு மானுக்கு எப்படி அளித்திருக்கமுடியும்? இதையெல்லாம் சிந்திக் காமல் சிவாபிமானத்தால் இப்படி எழுதப்பட்டுள்ளது.

ராம கைங்கர்யத்திற்காகவே பிறவி எடுத்த அநுமான் பிறந் தது முதல் ராமபக்தனாகவே வாழ்ந்தவன். ராமனைத் தவிர அவ னுக்கு வேறு தெய்வம் தெரியாது. அவனது ஆழமான அநந்ய பக்தியாலேயே அவன் ''சிறிய திருவடி'' என்றழைக்கப்படுகிறான். (கருடனுக்கு ''பெரிய திருவடி'' என்று பெயர்) இன்றும் வைணவ ஆலயங்களில் பெருமாளுக்கு அநுமான் வாஹநமாக இருப்பதற்கு அதுவே காரணம். அவன் வாயுமைந்தன் என்பதும், அவன் பிறந்த காலத்தில் தேவர்கள் அனைவரும் அவனுக்குக் கொடுத்த வர பலமுமே அவனது அளவற்ற பராக்ரமத்திற்குக் காரணம். இவற்றையெல்லாம் விட அவன் ஹ்ருதயத்தில் ஒவ்வொரு கண

மும் ஒலித்துக் கொண்டிருக்கும் ஸ்ரீராமதாரக மந்திரமே அவனது மிகப்பெரிய பலம் என்பது ராமாயணத்தின் மூலம் தெளிவு.

இதுவும் தவிர, அநுமான் சிவனுடைய அம்சம் என்று ஒரு கருத்து நிலவி வருகிறது. இக்கருத்துக்கு வால்மீகி ராமாயணத்தில் ஆதாரம் இல்லை. ஆனால் கம்பர் அநுமானை சிவனின் அம்சம் என்கிறார். சிவன் பரம பாகவதனாகையால் பகவத் கைங்கர்யத்திற்காகத் தன்னை பகவான் விஷ்ணுவுக்கு அடிமையாக்கிக் கொண்டான் என்ற கருத்தில் கம்பன் அப்படிக் கூறியிருக்கிறார். அதில் தவறேதுமில்லை

ஆகவே அநுமானை சிவபக்தன் என்று எழுதுவதும், சிவனருளால் தான் அவன் பராக்ரமத்தைப்பெற்றான் என்று எழுதுவதும் ஆதாரமற்ற பரம அபத்தமாகும்.

அதே ஞானபூமியில் கங்கை கொண்டான் குளத்து ஐயர் என்பவர் ''வ்யாஸாஷ்டகம்'' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில்

**வேத₃ாச்ச_ாஸ்த்ரம் பரம் நாஸ்தி**
**நதை₃வம் கேஶவாத் பரம்**
**ஸத்யம் ஸத்யம் புந: ஸத்யம்**
**உத்₃த்₄ருத்ய பு₄ஜமுச்யதே.**

என்று வியாஸர் ஆதி கேசவரான மஹாவிஷ்ணுவை உயர்த்திக் கூறும் பொழுது, 'விஷ்ணுவுக்குமேல் தெய்வமே கிடையாது. இது சத்யம் சத்யம் மறுபடியும் சத்யம்' என்று கைகளை உயரத்தூக்கி சத்யம் செய்து கூறியபொழுது அவருக்கு கைவிரல்கள், கால், வாய் முதலிய அவயவங்கள் அசைவில்லாமல் ஆகிவிட்டதால் தன் பரம சிஷ்யனுக்கு ஏற்பட்ட இந்த நிலைமையைக் கண்ட பகவான் மஹாவிஷ்ணு இவருக்கு சிவபாரம்யத்தை உபதேசம் பண்ணினார். உடனே வேதவ்யாஸர் தவறை உணர்ந்து சிவபக்தியில் ஈடுபடலானார். உபாதைகள் உடனே நீங்கின. அந்தப் பரவசத்தில் வேத வ்யாஸர் 'புருஷார்த்த ப்ரபோதம்'' என்ற நூலை இயற்றினார். அதில் எட்டு ஶ்லோகங்களை முத்து முத்தாக உதிர்த்திருக்கின்றார். இந்த எட்டு ஶ்லோகங்களே ''வியாஸாஷ்டகம்'' என்று பெயர் பெற்றன என்று எழுதிவிட்டு, சிவனுக்குப் பரத்வம் கூறும் எட்டு ஶ்லோகங்களைப் பொருளுடன் கீழே எழுதியுள்ளார். கட்டுரை

யின் முடிவில் எந்த வேதவ்யாஸர் "நதைவம் கேசவாத்பரம்" என்று கைதூக்கிக் கூறி இது சத்யம் சத்யம் சத்யம் என்று அடித்துக் கூறி வந்தாரோ அதே விஷ்ணு ரூபியான வேதவியாஸ மஹரிஷி சிவனையும் அதே நிலையில் பூஜிக்கவும் அப்படியே நமக்கும் வழி காட்டியும் வந்திருக்கிறார். ஆகவே நமக்குள் இந்த சர்ச்சைகள் வேண்டியதல்ல.

"அரியும் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயில் மண்ணு" என்று நாம் சிறு பிராயத்திலிருந்து கூறி வருபவர்கள் அல்லவா. நமக்கு வேண்டியது "Unity and not Uniformety" என்று முடித்திருக்கிறார்.

வேதவ்யாஸர் கேசவனே பரதெய்வம் என்று சத்யம் செய்த பொழுது அவரது உடல் உறுப்புகள் செயலிழந்து, பின் சிவபக்தி செய்து குணமானார் என்ற விஷயம் எந்தப் புராணத்தில் உள்ளது? எந்த நூலையும் ஆதாரம் காட்டாமல் இங்கே கதையளக்கிறார் ஐயர். 'புருஷார்த்த போதம்" என்ற ஒரு நூல் உள்ளதாகவும் அதை வியாஸர் இயற்றியதாகவும் இதுவரை நாம் கேள்விப் படவே இல்லை. சங்கரர் முதலிய த்ரிமத ஆசார்யர்கள் யாருமே இப்படி ஒரு நூலைப் பற்றித் தங்கள் நூல்களில் குறிப்பிடவே இல்லை. சங்கரர், ராமாநுஜர் போன்ற அறிஞர்களுக்கெல்லாம் தெரியாத ஒரு நூல் கங்கை கொண்டான் குளத்து ஐயருக்குத் தெரிந்திருக்கிறது! குறுக்குப் பட்டை ஆசாமிகள் யாரோ எழுதிய இந்த நூலை வியாஸர் எழுதியதாகக் கூறுகிறார் ஐயர்.

வேதங்களாலும், அவற்றைத் தழுவிய இதிஹாஸ புராணங்களாலும் சிவ பாரம்யத்தை நிலை நிறுத்த முடியாமல் தோல்வியுற்ற சிவாபிமானிகள் இப்படி ஏதாவது அபத்த நூல்களைக் கற்பனையாக எழுதி அவற்றை, விஷ்ணு பாரம்யத்தை நிலை நிறுத்தியவர்களான வியாஸர் போன்றோர் செய்ததாகக் கூறிவிட்டால் தங்கள் கருத்து பலப்பட்டு விடும் என்று பகற் கனவு காண்கின்றனர். அந்த அடிப்படையில் தான் ஐயர் இந்தக் கட்டுரையை எழுதியுள்ளார்.

சில நூறு வருடங்களுக்கு முன் அப்பைய தீக்ஷிதர் என்று ஒருவர் இருந்தார். வடமொழியில் ஆழ்ந்த புலமை உள்ளவர்களுக்கு இவரைத் தெரியாமல் இருக்காது. இவர் ஒரு சிவாத் வைதி. இவர் விஷ்ணுத்வேஷ உணர்வு கொண்டு, சிவபரத்

வத்தை ஸ்தாபிக்க எண்ணி, பல நூல்களைச் செய்துள்ளார். மேலும் வேதவேதாந்தங்களின் மூலம் சிவபரத்வத்தை நிலைநாட்டப் படாதபாடு பட்டார். ஆனால் தன் முயற்சியில் படு தோல்வி அடைந்தார். முடிவில் தனது தோல்வியை ஒப்புக்கொண்டு நாராயண பரத்வத்தை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டு விட்டார்.

இவர் செய்த ஆனந்தலஹரி வ்யாக்யானமான சந்திரிகையில் பின்வருமாறு கூறுகிறார்—

"வேத₃ விப₄ாக₃ார்த்த₂ மேவாவதீர்ணேந ஸகல வேதார்த்த பர்யாபிஜ்ஞேந ஸர்வஜ்ஞாசிகாமணிநா ப₄க₃வதா வேத₃வ்யாஸேந, புலஸ்த்ய வரத₃ாந லப்₃த₄ தே₃வதா பாரமார்த்₂யேந ஸ்ரீபராஸரேண அந்யைஸ்ச மஹர்ஷிபி₄: வேதோ₃பப்₃ரும்ஹணார்த்த₂ ப்ரணீதேஷு ஸ்ரீமஹாப₄ாரத விஷ்ணுபுராணாதி₃ஷு நிஸ்சித பரப்₃ரஹ்ம ப₄ாவஸ்ய ஸத்₃பி₄: ஸர்வைரபி அவிப₄ாகேந 'பரப்₃ரஹ்ம' இத்யேவ பூஜிதஸ்ய ஸ்ரீநாராயணஸ்ய க்வசித் கோணே நிவிஷ்ட மந்த்ரார்த்த₂வாத₃ புராண வசனாதி லேஸமவலம்ப்₃ய ஜீவப₄ாவம் வக்தும் நாஸ்மஜ் ஜிஹ்வா ப்ரவர்த்ததே | தத₃ாசேந்மூர்த்த₄ா ஸதத₄ா ப₄வதி | வேத₃வைதி₃க த்₃ரோஹ: தே₃வதா த்₃ரோஹஸ்ச ஜாயதே | அதோ நாராயண: பரப்₃ரஹ்ம கோடிரித்யேவாஸ்மாகம் ஸித்₃த₄ாந்த: ||"

**இதன் பொருள் :** "கரையில்லாக் கடல்போல் விரிந்துகிடந்த வேதங்களைப் பகுப்பதற்காக அவதரித்தவரும், வேதக் கருத்தை நன்கறிந்தவரும் ஸர்வஜ்ஞர்களுக்குள் சிரோபூஷணமாய் இருப்பவரும், எல்லாம் அறிந்தவருமான வேதவியாஸரும், புலஸ்த்யர், வஸிஷ்டர் ஆகியோரால் "பரதேவதையின் பாரமார்த்யத்தை (உண்மையை) நீ உள்ளபடி அறிவாயாக" என்று வரமருளப் பெற்ற ஸ்ரீ பராசர மஹரிஷியும் மற்றும் பல மஹரிஷிகளும் ஸ்ரீமந்நாராயணனே பரப்ரஹ்மம் என்று கூறியுள்ளனர். வேத விளக்கமாக இவர்களால் எழுதப்பட்ட ஸ்ரீமஹாபாரதம், ஸ்ரீவிஷ்ணு புராணம் முதலியவற்றில் பரப்ரஹ்மம் என்று நிச்சயிக்கப்பட்டவன் ஸ்ரீமந் நாராயணனே ஆவான். எல்லோரும் கருத்து வேற்றுமை இன்றி ஸ்ரீமந்நாராயணனையே 'பரப்ரஹ்மம்' என்று பூஜித்தும் வருகின்றனர். இவ்விஷயத்தில் பிரமாணங்களும் அநுஷ்டானங் களும் ஸாதகமாக இருக்க, இவற்றை அநாதரித்து எங்கோ ஒரு மூலையில் வேறு எதையோ சொல்ல வந்த சில வசனங்களின்

லேசத்தைக் கொண்டு நாராயணனுக்கு ஜீவத் தன்மையைச் சொல்ல நம் நாக்கு (தீக்ஷிதருடைய நாக்கு) முன் வரவில்லை. அப்படி ஒருவன் சொன்னால் அவன் தலை நூறு சுக்கல்களாக வெடித்து விடும். அப்படிச் சொல்வது வேத வைதிக த்ரோஹ மாகும். அது மட்டுமல்லாமல் தேவதா த்ரோஹமும் செய்ததா கிறது. ஆகவே நாராயணன் பரப்ரஹ்மமே தான் என்பதே நமது ஸித்தாந்தம்.''

சிவாபிமானியான தீக்ஷிதரே இவ்வண்ணம் கூறியிருக்கிறார் என்றால் நாராயண பரத்வத்திற்கு இதைவிட வேறு என்ன சான்று வேண்டும்? ஐயர் இவற்றையெல்லாம் படிக்கவில்லை போலும்! மேலும் கட்டுரையின் முடிவில் 'அரியும் சிவனும் ஒண்ணு, அறியா தவன் வாயில் மண்ணு' என்ற சிவாபிமாநிகளின் பாலபாடத்தைக் கூறி, தன் அசட்டுத் தனத்தை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார் ஐயர். கட்டுரை முழுக்க ஏராளமான எழுத்துப் பிழைகள். இந்த லக்ஷணத்தில் தன் அரைகுறை ஆங்கில அறிவைப் பறை சாற்றிக் கொள்ள ஒரு ஆங்கிலச் சொற்றொடருடன் கட்டுரையை முடித் திருக்கிறார். அதாவது—நமக்கு வேண்டியது ''Unity and not Uniformety'' என்று எழுதுகிறார். இதற்கு என்ன பொருள் என்று இவரைக் கேட்டால்தான் தெரியும். இவர் சொன்ன கட்டுரைக் கருத்துக்கும் இந்த ஆங்கிலச் சொற்றொடருக்கும் என்ன சம்பந் தம் என்று யாரையாவது கேட்கவேண்டும். ''Uniformety'' என்பதில் m-க்குப் பக்கத்தில் i வரவேண்டும். e போட்டி ருக்கிறார். அதாவது Uniformity என்று இருக்கவேண்டும். இதன் மூலம் ஐயரின் ஆங்கிலப் ''புலமையும்'' வெளிப்படுகிறது. ஒரு வேளை அவர் வீட்டு Dictionary-யில் அப்படி உள்ளதோ என்னவோ!

யார் எதை எழுதிக் கொடுத்தாலும் சரியா, தவறா என்று பார்க் காமல் பிரசுரிப்பது ஞானபூமி பத்திரிகையாளர்களின் வழக்கம். இந்த ஞானபூமி பத்திரிகை நம்மால் மட்டுமின்றி ஸ்ரீஸுதர்சனர் அவர்களாலும் முன்பு பலமுறை விமர்சிக்கப்பட்டுள்ளது. ஆனால் ஞானபூமி தன் போக்கை மாற்றிக்கொள்வதாகத் தெரியவில்லை. ஆன்மீக விஷயத்தில் மக்களை மடையர்களாக்கும் கைங்கர்யத்தை ஞானபூமி பல வருடங்களாகவே செய்து வருகிறது என்பதே நிதர்சனமான உண்மை.

ஞானபூமி மார்ச் 2002 இதழில் சத்ய சாயி சேவா நிறுவனத்தின் மாநிலத் தலைவரான டி.ஜி. கிருஷ்ணமூர்த்தி என்பவர் வியாஸரின் ஞானதிருஷ்டி என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் ஸ்ரீ கிருஷ்ணனே ஆதிசங்கரராக அவதரித்தார் என்றும், அது வியாஸருக்கு முன்கூட்டியே தெரிந்திருந்தது என்றும் எழுதியுள்ளார். இவர் எழுதியுள்ள கருத்து ஆதாரமற்றதும் தவறானதுமாகும். பாத்மபுராணத்தில் சிவனே சங்கரராக அவதரித்ததாகக் கூறப்பட்டுள்ளது. இந்த சாயிபாபா கோஷ்டிகள் தங்களை கிருஷ்ணபக்தர்கள் என்று கூறிக்கொண்டு ஆன்மிக விஷயத்தில் பல குழப்பவாதங்களைச் செய்து மக்களை மயங்க வைத்து வருகின்றனர். நம் வைணவர்களிலும் சிலபேர் சாயிபாபா பக்தர்களாக இருப்பதை ஆங்காங்கே காணமுடிகிறது. இது மிகவும் வேதனைக்குரிய விஷயம்.

அதே ஞான பூமி இதழில் ''ஆதிசங்கரரின் தென்மண்டல யாத்திரை'' என்ற தலைப்பில் தேவகோட்டை பி. நாராயணன் என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் .........''சங்கரர் திருப்பதி ஸ்ரீ வேங்கடாஜலபதியைஸேவிக்க திருப்பதி நடந்து சென்றார். நெடுமாலாகத்தோன்ற வேண்டிய திருமால் சக்தி வடிவமாகக் காட்சியளித்தார். இங்குதான் சங்கரர் 'விஷ்ணுபாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்' என்னும் துதிப்பாடல் இலக்கியத்தை இயற்றினார். இத்தலத்தில் தெய்வம் முருகன் என நினைத்ததால் சன்னிதியில் மயில் இல்லை. திருமால் என நினைத்ததால் கருடன் இருத்தல் வேண்டும். இவை இரண்டுமின்றி யாளி இருக்கும் இந்த ஸ்தலத்துத் திருமாலை விஷ்ணுவே சக்தியின் அம்ஸம் என்ற தத்துவக் கருத்திற்கேற்ப வணங்கி வழிபட்டு அங்கு தன தான்யங்களைக் கவர்ந்திழுக்கும் வசிய சக்தி பொருந்திய 'தன கர்ஷண' இயந்திரத்தைப் பிரதிஷ்டை செய்தார் ஆதி சங்கரர் ...'' என்று உளறிக்கொட்டிலிருக்கிறார்.

எம்பெருமானார் காலத்திலேயே திருப்பதியில் உள்ள தெய்வம் குறித்து சர்ச்சைகளைக் கிளப்பினர் சைவர்கள். அவர்களது அர்த்தமற்ற வாதங்களை முறியடித்து அங்கு எழுந்தருளியுள்ள தெய்வம் திருமாலே என்று தெளிவாக நிரூபித்துவிட்டார் எம்பெருமானார். அத்தோடு அந்தப் பிரச்சனைக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டுவிட்டது. ஆனால் அதன்பிறகும் செத்தபாம்பைத் திரும்பத் திரும்ப அடிப்பது போல் தங்களது அர்த்தமற்ற வாதங்களைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டு திருப்பதியில் உள்ளது திருமால் இல்லை என்று சொல்லி மக்களை மயங்க வைக்கப் பார்க்கிறார்கள் இந்த சைவர்கள். இந்தக்கட்டுரை

ஆசிரியரான தேவகோட்டை நாராயணன் எந்த விதமான ஆராய்ச்சி அறிவும் இன்றி அபத்தமான கருத்தைக் கூறியுள்ளார். திருப்பதியில் உள்ள தெய்வம் திருமாலா, முருகனு, சக்தியா என்று தெரியாமல் சங்கரர் மயங்கினுர் என்று கூசாமல் எழுதுகிறார். சங்கரரின் காலம் கி.பி. 788 -820. நமது தமிழ் இலக்கியமான சிலப்பதிகாரத்தின் காலம் கி.பி. 100 -300, ஆகவே சிலப்பதிகாரம் தோன்றிய காலத்திற்கு மிகப் பிற்காலத்தில் சங்கரர் தோன்றியிருக்கிறார். சிலப்பதிகாரம் காடுகாண்காதையில்

''வீங்கு நீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத்துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங்கு ஓங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுக்கொடி உடுத்து விளங்குவில்பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங்கு ஆழியும் பால்வெண்சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலம் கிளர் ஆரம் மார்பில் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும் ......''

என்று எம்பெருமான் திருமலையில் நிற்கும் பேரெழில் தோற்றம் வருணிக்கப்படுகிறது. சிலப்பதிகாரத்தின் ஆசிரியர் வேற்றுமதத்தவராயினும் நடுநிலையாளர். உண்மையை உள்ளபடி கூறியுள்ளார். பகவானின் தோற்றத்திற்கு ''மின்னுக்கொடி உடுத்து விளங்குவில் பூண்டு நன்னிற மேகம் நின்றது போல'' என்று உவமை கூறும்போது சிலப்பதிகார ஆசிரியரான இளங்கோவடிகளுக்கு ஒருவேளை ''நீலதோயத மத்யஸ்தா'' என்ற வேதவாக்யம் நினைவுக்கு வந்திருக்குமோ என்னவோ? எத்தனை அழகான வரிகள் என்னை ஆட்கொண்ட வள்ளலை வர்ணிக்க!

திருப்பதியில் நிற்கும் தெய்வம் திருமால்தான் என்று இளங்கோவடிகளுக்குத் தெரிந்திருக்கும் போது அவருக்குச் சில நூற்றுண்டுகள் பிற்பட்ட சங்கரருக்கு எப்படி சந்தேகம் வந்திருக்கும்? மேலும் தேவகோட்டை நாராயணன் திருப்பதியில் தான் ''விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரத்தை சங்கரர் செய்தார் என்றும் எழுதுகிறார். சங்கரர் திருப்பதி தெய்வத்தை சக்தி என்று நினைத்து மயங்கியிருந்தால் ''சக்தி பாதாதி கேசாந்த ஸ்தோத்ரத்தையல்லவா எழுதியிருக்க

வேண்டும்? இந்தக் கட்டுரையாசிரியர் தன் முட்டாள் தனத்தை வெளிக்காட்டிக்கொண்டு, கட்டுரை வாசகர்களை முழு முட்டாள்களாக்கப் பார்க்கிறார். திருப்பதியில் தனகர்ஷணயந்திரத்தை சங்கரர் பிரதிஷ்டை செய்தார் என்றும் எழுதுகிறார். சங்கரர் திருப்பதி கோயிலில் மட்டும் ஏன் தனாகர்ஷணயந்திரத்தைப் பிரதிஷ்டை செய்ய வேண்டும்? நம் நாட்டில் உள்ள மற்ற கோயில்களுக்கெல்லாம் தனமும் ஜனமும் சேரவேண்டாம் என்று சங்கரர் கருதிவிட்டாரோ? இப்படிப்பட்ட ஆதாரமற்ற அபத்தங்களைக் கூறி ''திருமலையில் உள்ள தெய்வம் திருமால் இல்லை'' என்று நிருபித்து விடவேண்டும் என்று பார்க்கிறார்கள் இந்த சைவர்கள். ஆனால் ஆராய்ச்சி உணர்வுள்ள நடுநிலையாளர்கள் இவர்கள் சொல்வதைக் காற்கடைக்கொள்வர். சிலப்பதிகாரத்திலேயே திருமலைத் தெய்வம் திருமாலே என்று சொல்லியிருக்கும் போது இதைவிடக் கல்வெட்டான ஆதாரம் வேறு என்ன வேண்டும்? தற்காலத்தில் திருப்பதி தேவஸ்தானத்தை சைவர்கள் ஆக்ரமித்திருப்பதால் அங்கு சைவாத்வைதிகளின் செல்வாக்குப் பெருகி வருகிறது. காமகோடிகளின் ஆதிக்கமும் பெருகிவருகிறது. அதனால் திருப்பதி பற்றி தவறான தகவல்களை எழுதி அப்புத்தகங்களை திருப்பதி தேவஸ்தானச் செலவிலேயே வெளியிட்டு திருப்பதிப் பெருமாளுக்கு பச்சைத் துரோகம் செய்து வருகின்றனர் அங்குள்ளவர்கள். இவற்றை எல்லாம் தடுத்து நிறுத்த அங்குள்ள ஜீயர்மடங்களுக்கு சக்தி இல்லை. இந்நிலை நீடித்தால் இன்னும் சிறிது காலத்தில் திருப்பதியில் சைவர்கள் ஆதிக்கம் பெருகி பெருமாளையே மாற்றிவிடுவர். இந்தப் பிரச்சனை குறித்து நாட்டில் உள்ள ஜீயர் மடங்களும், வைணவ சங்கங்களும் இணைந்து ஓர் பேரியக்கம் நடத்த வேண்டும். ஒரு சாமான்ய வைணவன் இதுகுறித்துக் கவலைப்பட்டு என்ன செய்துவிடமுடியும்? இப்படிப்பட்ட பிரச்சனைகளை எல்லாம் எதிர்கொண்டு போராடி ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தையும் அதன் வாழிடங்களான கோயில்களையும் எதிரிகளிடமிருந்து எப்போதும் காப்பாற்ற வேண்டும் என்பதற்காகவே 74 ஸிம்ஹாஸநாதிபதிகளை நியமித்தார். எம்பெருமானார். ஆனால் இன்று ஸிம்ஹாநாதிப்திகளின் வழிவந்தவர்களும் வலுவிழந்துவிட்டனர். நம் நாட்டில் உள்ள எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களும் சுய உணர்வோடு திருப்பதிப் பிரச்சனை குறித்துச் சிந்திக்க வேண்டிய நேரம் இது. மேலும் இந்தக்கட்டுரை ஆசிரியர் திருப்பதியில் யாளி இருப்பதால் சக்தியின் அம்ஸம் என்பதைக் காட்டுகிறது என்று எழுதுகிறார். யாளியும் சிங்கமும் திருப்பதியில் மட்டுமின்றி நம்நாட்டில் உள்ள வேறு சில விஷ்ணு ஆலயங்களிலும்

காணப்படுகிறது. இதற்குக்காரணம் பகவான் மஹா விஷ்ணு சர்வலோகசக்ரவர்த்தி ஆவார். ஆகவே அவர் ஆலயங்களில் சிங்கம் காணப்படுகிறது. சிங்காசனம் சக்ரவர்த்திக்கே உரித்தானது. மற்றவர்களுக்கு அது உகந்தது அல்ல. இதைப் புரிந்து கொள்ளாமல் எழுதுகிறார் கட்டுரை ஆசிரியர். ஆகவே ஆதாரமற்ற இந்த அபத்தக் கட்டுரைக் கருத்து மிகவும் கண்டிக்கத் தக்கது.

''நல்லநேரம்'' மே 2002 இதழில் ''கௌமார வழிபாடு'' என்ற தலைப்பில் 'எஸ் நாச்சியப்பன்' என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் முருகளே பரம்பொருள் என்று சாந்தோக்ய உபநிடதம் கூறுவதாகவும், கலியுகத்தில் மோக்ஷம் தரக் கூடிய தெய்வம் முருகன் தான் என்று வேதங்களில் பல இடங்களில் சொல்லப்பட்டுள்ளதாகவும், முருகனை வழிபட்டாலே விஷ்ணு முதலிய எல்லாத் தெய்வங்களையும் வழிபட்டதாகிறது என்றும் அளவில்லாமல் பொய்களை அள்ளிவிட்டிருக்கிறார்.

இக்கட்டுரை ஆசிரியர் என்னமோ உபநிடதங்களையும் வேதங்களையும் கரைத்துக் குடித்துவிட்டவர்போல் எழுதுகிறார். முருகனே பரம்பொருள் என்று சாந்தோக்ய உபநிஷத்தில் எங்கே சொல்லப்பட்டுள்ளது? இவரால் ஆதாரம் காட்டமுடியுமா? எந்த வேதத்தில் முருகன் மோக்ஷம் தரக்கூடியவன் என்று கூறப்பட்டுள்ளது? ஆதாரத்திற்கு ஒரு வரியைக் கூடக் காட்டாமல் முருகன்தான் பரம்பொருள் என்று இவர் சொன்னல் யார் கேட்பார்கள்? ஆனமீகவிஷயத்தின் அரிச்சுவடியே தெரியாத நாச்சியப்பன் அர்த்தமில்லாமல் கட்டுரையில் புலம்பியிருக்கிறார். திருமாலே மோட்சம் அளிக்கவல்ல பரம்பொருள் என்று நான்மறைகள் கூறுவதாக நமது சங்கத் தமிழ் இலக்கியங்கள் எல்லாம் ஒருமுகமாகக் கூறுகின்றன. சங்கஇலக்கியங்களை ஒழுங்காகப் படித்திருந்தால் நாச்சியப்பனுக்கு யார் பரம்பொருள் என்று தெரிந்திருக்கும். சங்கஇலக்கியத்தில் சிவனும் பார்வதியும் புணர்ந்ததால் பிறந்தவன் முருகன் என்று சொல்லப்பட்டுள்ளது. அப்படிப்பட்ட முருகன் எப்படிப் பரம்பொருளாக முடியும்?வடமொழி வேதங்களிலோ, சங்கத் தமிழ் இலக்கியங்களிலோ எந்த இடத்திலும் முருகனுக்குப் பரம்பொருளுக்குரிய லட்சணம் சொல்லப்படவில்லை. நாராயணனே பரம்பொருள் என்று வேதங்களிலும் சங்க இலக்கியங்களிலும் முழங்கப்படுகிறான். இவற்றை உணராமல் மனம்போனபடி இவர் எழுதுவது தனது இஷ்டதெய்வத்திற்கு ஏற்றம் தருவதற்காகவே தவிர உண்மை இல்லை.

முதல் தொகுதி நிறைவுற்றது.